# மின்னூல் வெளியீடு

மின்னூல் வெளியீட்டாளர்: http://freetamilebooks.com

அட்டைப்படம்: லெனின் குருசாமி - guru-leninn@gmail.com

மின்னூலாக்கம்: ஐஸ்வர்யா லெனின் - aishushanmugam09@gmail.com

மின்னூலாக்க செயற்திட்டம்: கணியம் அறக்கட்டளை - kaniyam.com/foundation

# Ebook Publication

Ebook Publisher: http://freetamilebooks.com

Cover Image: Lenin Gurusamy - guru-leninn@gmail.com

Ebook Creation: Iswarya Lenin - aishushan-mugam09@gmail.com

Ebook Project: Kaniyam Foundation - kaniyam.com/foundation

# பொருளடக்கம்


எங்கு போகிறார்கள் ? . . . . . . . . . . 11

1. முன்னுரை . . . . . . . . . . . . . . . 12

2. கல்வி என்பது என்ன? . . . . . . . . . 21

இன்றைய கல்வி . . . . . . . . . . . 22

கல்வியின் அடைநோக்குகள் . . . . . . 28

அறியியன்மையும் அறிவும் . . . . . . . 35

சமூக நீதியும் சமத்துவமும் . . . . . . . 40

சமூக நடப்புகள் . . . . . . . . . . . . 49

கலைகளில் சுவையுணர்வு . . . . . . . 55

நன்னெறி . . . . . . . . . . . . . . . 61

அறிவை கடத்தலே கல்வி . . . . . . . . 68

3. மொழியும் கல்வியும் . . . . . . . . . . 76

மொழியே கல்வியின் அடிப்படை . . . . 78

பன்மொழிக்கொள்விதி . . . . . . . . . 87

வேலைவாய்ப்பில் மொழி . . . . . . . . 98

மொழியும் சமூகமும் . . . . . . . . . . 107

ஆங்கில மோகம் . . . . . . . . . . . . 112

4. கல்வி வணிகமாதல் . . . . . . . . . . . . 115
கல்வி அரசின் பொறுப்பு . . . . . . . . . . 115
தனியார்மயமாதல் . . . . . . . . . . . . . 120
வருவிளைவுகளை ஒப்பிடல் . . . . . . . 130
தனியார்க்கல்வி வணிகமாதல் . . . . 134
உவபுவின் சேவபொகை . . . . . . . . . . 146
எதிர்காலம் . . . . . . . . . . . . . . . . . 154
5. கல்வியும் அரசியலும் . . . . . . . . . . . . 159
தனியார்க்கல்வியின் வருமானம் . . . 161
பொருளாதாரத்தோற்றம் . . . . . . . . . . 163
சமூகப்பெருமைகள் . . . . . . . . . . . . . 166
மொழிக்கொள்கையும் அரசியலும் . . 170
நீட்டுத்தேர்வு போன்ற தேர்வுகள் . . . . 176
தேர்தலுக்கு எது நல்லது? . . . . . . . . . 184
6. கல்வியும் ஆதிக்கமும் . . . . . . . . . . 187
தேசம், மாநிலம், நாடு . . . . . . . . . . . 189
பாசிச ஆட்சி . . . . . . . . . . . . . . . . . 193
பாசிசத்தின் கருவியாக கல்வி . . . . . . 197

இந்தியக்கல்வியில் பாசிசம் . . . . . . . 201
7. தேசியக்கல்விக்கொள்விதி . . . . . . . 205
இந்திய மையமான கல்வி . . . . . . . . 209
ஒற்றை அடையாளம் . . . . . . . . . . 216
கல்வியில் மாநிலங்களின் பங்கு . . . 223
8. மக்களாட்சியக்கல்வி . . . . . . . . . . 231
சிந்தனையை தூண்டல் . . . . . . . . . 233
கல்வியில் தொழினுட்பம் . . . . . . . . . 239
திணிப்பற்ற கல்வி . . . . . . . . . . . 246
கட்டற்ற கல்வி . . . . . . . . . . . . . 251
சமத்துவமே சமூகநீதி . . . . . . . . . . 258
முழுமக்கல்வி . . . . . . . . . . . . . 262
மதிப்பறிதல் . . . . . . . . . . . . . . 268
9. கல்வியின் படிநிலைகள் . . . . . . . . 277
கற்றலின் தொடக்கம் . . . . . . . . . . 282
மழலைக்கல்வி . . . . . . . . . . . . . 290
தொடக்கக்கல்வி . . . . . . . . . . . . 299
இரண்டாமைக்கல்வி . . . . . . . . . . 314

உயர்கல்வி . . . . . . . . . . . . . . . 325
தாராளச்சிந்தனை . . . . . . . . . . . 331
ஏற்றத்தாழ்வும் பன்மயமும் . . . . . . . . 336
கலப்புமணத்தின் அறிவியல் . . . . . . . 347
கல்வியால் கலப்பு . . . . . . . . . . . . 353
தாழ்த்தப்பட்டோருக்கு உதவி . . . . . . . 370
கல்விநிர்வாகத்தின் பங்கு . . . . . . . . 381
மேன்மட்டத்தினரின் பங்கு . . . . . . . . 388
ஆசிரியர்களின் பங்கு . . . . . . . . . . 392
பெற்றோர்களின் பங்கு . . . . . . . . . . 399
கற்றறிஞர்களின் பங்கு . . . . . . . . . . 403
மாணவர்களின் பங்கு . . . . . . . . . . 411
பொதுமக்களின் பங்கு . . . . . . . . . . 415
10. பார்வையம் . . . . . . . . . . . . . . . 430
ஆசிரியர் குறிப்பு : . . . . . . . . . . . . 436
கணியம் அறக்கட்டளை . . . . . . . . . . 439

# எங்கு போகிறார்கள் ?

மின்னூலாக வெளியான தேதி சூலை 8, 2024

பதிவிறக்க

https://drive.google.com/file/d/1qZA_-
-EF5W7hpmDKmkvQsaFZ1-
9ITwkPY/view?usp=drive_link

இந்த நூலின்ஆங்கில வடிவம்

https://drive.google.com/file/d/1JwZn3k1DOJIQdEPp2Q
link

ஆசிரியரின் நூற்பட்டியல்

https://drive.google.com/file/d/1K-
v-0eeapcdhPKPbsCuU9yhvm8rV_-
0RQ/view?usp=drive_link

jkottalam@gmail.com

https://www.facebook.com/kottalam

# 1. முன்னுரை

உங்கள் வாழ்க்கைமுறை எளிமையானது. உங்கள் வாழிடம் குப்பையும் புழுதியும் நிறைந்தது. உங்கள் அடுத்தவேளை உணவு எங்கிருந்து வரப்போகிறது என்பது தெரியாமலிருக்கலாம். உங்களுக்கு உடுத்த நல்ல துணி இல்லாமலிருக்கலாம். ஆனால், உங்கள் பிள்ளைகளை பாராட்டிச்சீராட்டி சீருடையணிவித்து தலைவாரிவிட்டு உச்சிமோந்து புத்தகப்பையுடன் பள்ளிக்கு அனுப்புகிறீர்கள். அவர்கள் படிப்பதால் அவர்களது எதிர்காலம் மலரும் என்ற நம்பிக்கைத்துளிர் உங்கள் மனங்களில் இருக்கிறது.

அவர்கள் பள்ளியிலிருந்து திரும்பும்போது ஆவலுடன் எதிர்நோக்கி நிற்கிறீர்கள். அறிவுச்செல்வத்தை அள்ளிக்கொண்டு

வருவதாக கற்பனைசெய்கிறீர்கள். அவர்கள் வளமான எதிர்காலத்தை நோக்கி நடப்பதாக எண்ணி மகிழ்கிறீர்கள்.

மாறாக, நீங்கள் வசதியானவர் எனில், உங்கள் பிள்ளைகளை ஆங்கிலத்தில் கற்பிக்கும் தனியார்ப்பள்ளிக்கு அனுப்பி ஏழைப்பிள்ளைகளைவிட சிறந்த கல்வியை அவர்களுக்கு அளிப்பதாக எண்ணி மகிழ்கிறீர்கள்.

இந்த இருவிதமான கனவுகளும் உண்மையில் நிறைவேறுகின்றனவா? கல்வியாளர்களும் அரசின் கல்வியதிகாரிகளும் அறிவாளிகள் என்பதும் அவர்கள் உங்கள் பிள்ளைகளை சரியான வழிகளில் செலுத்துவார்கள் என்பதுமான முழுநம்பிக்கையுடனே நீங்கள் உங்கள் பிள்ளைகளை பள்ளிக்கு அனுப்புகிறீர்கள். இந்த நம்பிக்கையை என்றாவது சரிபார்த்திருக்கிறீர்களா?

உண்மையில் பிள்ளைகள் கல்வியால் என்னென்ன பயன்களை அடைந்தார்கள் என்று கணக்கெடுக்கிறீர்களா?

படித்து முன்னேறிய பிள்ளைகள் ஒரு சிலர். அவர்களை மெச்சுகிறீர்கள். அவ்வாறில்லாதோர் மிகப்பலர். அந்த மிகப்பலரைப்பற்றி என்ன சொல்கிறீர்கள்? அவர்களுக்கு படிப்பு வரவில்லை என்பதால் அவர்களை அறியியன்மையில் குறைந்தவர்களாக கருதுகிறீர்களா? உங்கள் பிள்ளைகளுக்கு படிப்பு வரவில்லை எனில், ஒருவேளை அது இந்த கல்வியமைப்பின் பிழையாக இருக்குமோ என்று எப்போதாவது எண்ணிப்பார்த்திருக்கிறீர்களா?

பிள்ளைகள் பெற்றோர்களின் செல்வங்கள் மட்டுமல்ல; ஒரு சமூகத்தின் செல்வங்களும் அவர்களே. அவர்களே எதிர்காலத்தில் அந்த சமூகத்தின் மனிதவளம். இங்கு

சமூகம் என்பது உங்கள் ஊராகலாம்; தமிழ்நாடாகலாம்; இந்தியாவாகலாம்; உலகமேயாகலாம். எல்லா மட்டங்களிலும் சமூகத்தை வளமாக்கப்போவது இந்த பிள்ளைகளின் அறிவும் சிந்தனையும் நன்னெறிகளுமே. ஒரு சமூகம் மேம்படவேண்டுமெனில், அந்த சமூகத்தின் குழந்தைகளை அறிவூட்டி நல்வழிப்படுத்துவது முதன்மையான தேவை. இவ்வாறு பண்படுத்துவதே கல்வியின் செயலாயிருக்கவேண்டும்.

கல்வியின் உண்மையான நோக்கம் என்ன? அந்த நோக்கத்தை இந்தியாவின் இன்றைய கல்வியும் தமிழ்நாட்டின் கல்வியும் நிறைவேற்றுகின்றனவா? கல்விக்கொள்விதிகளை உருவாக்கும் அரசதிகாரிகள் உண்மையில் அறிவாளிகளா? அறிவாளிகளாகவே இருப்பினும்,

எல்லாப்பிள்ளைகளும் நலம்பெறும் வகையில் கல்வித்திட்டங்களை அமைக்கிறார்களா, தம் பிள்ளைகளே நன்மையடையும்படி அமைத்துக் கொள்கிறார்களா? உங்கள் பிள்ளைகளுக்கு தேவையான அறிவை வழங்குகிறார்களா, தமக்கு சாதகமான கொள்கைகளை அவர்களுக்கு கருத்தேற்றுகிறார்களா?

இதுபோன்ற கேள்விகளை இந்த நூலில் ஆராய்வோம். உங்கள் பிள்ளைகளின் எதிர்காலத்துக்கு எது நல்லது என்றும் சிந்திப்போம். பிள்ளைகளை நல்வழியில் செலுத்துவது இறுதியில் பெற்றோரது பொறுப்பே. அந்த பொறுப்பை கல்வியாளர்களிடமும் அரசிடமும் ஒப்படைத்தாலும் அவர்கள் அதை சரியாக ஏற்று நடத்துகிறார்களா என்று நீங்கள் சரிபார்க்கவேண்டாமா?

இதுபோன்ற கேள்விகளை நாம் எழுப்புவது

முறையா என்றும் நீங்கள் கேட்கலாம். ஆசிரியத்தொழில் புனிதமானது. அதை பழிக்கலாமா? ஆசிரியர்களின்மீது பெற்றோருக்கும் பிள்ளைகளுக்குமுள்ள மதிப்பு குறையலாமா? இவையெல்லாம் நியாயமான கேள்விகளே. ஆனால், காவலில்லாத வீட்டுக்குள் திருடன் நுழையும் சாத்தியம் இருப்பதுபோலவே, கல்வி புனிதமானது என்றும் அதன்மீது யாரும் கேள்வியெழுப்ப மாட்டார்கள் என்றும் எதிர்பார்த்து ஒரு ஏமாற்றுக்காரர் நுழையும் வாய்ப்பு இருக்கின்றது. அது நிகழாமல் பார்த்துக்கொள்வது குடிமக்களான உங்கள் பொறுப்பு.

ஆசிரியப்பெருமக்கள் பெரும்பாலும் கல்வியை புனிதமாக கருதி பொறுப்புணர்ச்சியுடன் மாணவர்களுக்கு அறிவுபுகட்ட விரும்புகிறார்கள். ஆனால்

அதேநேரத்தில் கல்வியை ஒரு விற்பொருளாக பயன்படுத்தி பொருளீட்டுவோரும் இருக்கின்றனர். அவர்களின் வழிமுறைகளை இந்த நூலில் விரிவாக காண்போம். மேலும், சிலர் அரசியலின் நோக்கங்களுக்காகவும் தம் கருத்துகளை பரப்புவதற்காகவும் மற்றவர்மீது ஆதிக்கஞ்செலுத்துவதற்காகவும் கல்வியை ஒரு கருவியாகவும் ஆயுதமாகவும் பயன்படுத்தவியலும் என்றும் அவ்வாறே சிலர் பயன்படுத்துகிறார்கள் என்பதையும் அறிவோம்.

இந்தியாவின் இன்றைய கல்வியமைப்பு நகரத்திலுள்ளோருக்கும் செல்வந்தர்களுக்கும் சாதகமாக இருக்கிறது; ஏழைகளையும் சிற்றூர்வாசிகளையும் மேலும் தாழ்த்துகிறது. சமூகங்களின் தாழ்த்தப்பட்ட பகுதிகளின் பிள்ளைகள் கல்விபெற்று பொருளாதார முன்னேற்றத்தை

அடையும் வாய்ப்புகளை கல்வி வழங்கவில்லை; ஆட்சியிலுள்ள ஆதிக்கச்சமூகத்தின் பிள்ளைகளுக்கே வாய்ப்புகளை மேலும் குவிக்கிறது. இந்த கல்வியமைப்பைப்பற்றியும் அதனால் மக்களுக்கு ஏற்படும் விளைவுகளைப்பற்றியும் இதற்கு மாற்றாக நீங்கள் என்ன செய்யலாம் என்பதைப்பற்றியும் விவரமாக இந்த நூலில் அறிவோம்.

இந்தியாவின் கல்வியமைப்பு உண்மையான அறிவாளிகள் முன்னேற வாய்ப்பளிக்காமல் ஆதிக்கச்சமூகத்தினர் முன்னேறவே வாய்ப்பளிப்பதால் அறிவியலாராய்ச்சியிலும் தொழினுட்பவளர்ச்சியிலும் இந்தியா பின்தங்கியிருக்கிறது. இதை மாற்ற, சாதி, மதம், மொழி, பொருளாதாரநிலை, வசிப்பிடம் போன்ற பாகுபாடின்றி சமூகத்தின் எல்லாப்பகுதிகளிலிருந்தும் அறிவாளிகளை

தேர்ந்தெடுத்து அவர்களுக்கு உயர்கல்வியை வழங்கி நாட்டின் பொறுப்பான பதவிகளில் அமர்த்தவேண்டும். இவ்வாறு செய்தால் நாட்டின் சிந்தனைவளம் அதிகரித்து பலதுறைகளிலும் நாடு முன்னேறும்.

இதற்கான ஒரு மாற்றுக்கல்விமுறையை விவரிக்கிறேன். இன்றைய நிலையிலிருந்து படிப்படியாக இந்த புதிய கல்விமுறையை வந்தடையலாம். இது நெடுநாளைய திட்டம். இதை நிறைவேற்ற பல பத்தாண்டுகள் ஆகலாம்.

# 2. கல்வி என்பது என்ன?

கல்வியின் நோக்கம் என்னவாயிருக்கவேண்டும்? இதைப்பற்றி சற்று சிந்திப்போம்.

## இன்றைய கல்வி

கல்வியைப்பற்றி கேட்டால் இக்காலத்தில் பெரும்பான்மையான பெற்றோர் தம் பிள்ளைகளுக்கு வேலைபெறும் தகுதியை வழங்கி அவர்களது எதிர்காலத்தை வசதியாக்க உதவுவது என்று விடையளிப்பார்கள். கல்வியின் நோக்கம் நல்ல மதிப்பெண்களை வாங்குவது என்றும் நல்ல மதிப்பெண்களால் நல்ல வேலையை பெறலாம் என்றும் பெரும்பான்மையான நடுத்தரவகுப்புக்குடும்பங்களில் எண்ணுகிறீர்கள். எல்லாருக்கும் வேலைபெறுவதே குறிக்கோள் எனில், வேலையை வழங்குவோர் யார் என்று எப்போதாவது சிந்தித்திருக்கிறீர்களா? இன்று இந்தியாவிலுள்ள பெரும்பான்மையான பெருநிறுவனங்கள்

வெளிநாட்டு நிறுவனங்கள். அதாவது உங்கள் பிள்ளைகளின் உழைப்பின் கணிசமான பகுதியை வெளிநாட்டார் நுகர்கிறார்கள். இதற்கும் மேலாக, பல பிள்ளைகள் வெளிநாடுகளுக்கும் சென்றுவிடுகிறார்கள். உங்கள் பிள்ளை (மகனோ மகளோ) பெரியவரானபின் அவ்வாறான ஒரு நிறுவனத்தின் சொந்தக்காரராக ஏன் ஆகக்கூடாது? அந்த நிறுவனம் ஏன் முற்றிலும் இந்திய நிறுவனமாக இருக்கக்கூடாது? பெரிய நிறுவனமாக இல்லாவிட்டாலும் சிறு தொழில்களில் ஈடுபட்டு நாளடைவில் வளர்ச்சியடையும்படி இளைஞர்களை ஊக்குவிக்கலாம். அப்படி ஆகவேண்டுமெனில் அவர்களை இப்போது எப்படி அணியமாக்கவேண்டும்? அதற்காக எவ்வாறான கல்வி தேவை? இந்த நாடு அவ்வாறான கல்வியை வழங்குகிறதா?

ஒரு சிலர் வெளிநாடுசெல்வதில் தவறில்லை. ஆனால் எல்லாரும் அப்படி சென்றுவிட இயலுமா? வெளிநாட்டில் எல்லாருக்கும் இடமிருக்கிறதா? உங்கள் சமூகத்திலே வாழ்வை மேம்படச்செய்யவேண்டாமா? அந்த நாடுகளைப்போலவே உங்கள் நாட்டையும் வளமுள்ளதாக ஆக்க வேண்டாமா?

சரி, சமூகமும் நாடும் எப்படிப்போனாலும் உங்கள் பிள்ளை நன்றாயிருக்க வேண்டும் என்றே வைத்துக்கொள்வோம். அதிலும் தவறில்லை. ஒவ்வொருவருக்கும் தன்னலம் ஒரு பகுதியும் சமூகநலம் மறுபகுதியும் இருப்பதே இயல்பு. ஒரு தனியாளின் நோக்கிலிருந்து பார்த்தாலும், இந்தியாவின் மக்கட்டொகையுடன் ஒப்பிடும்போது மேற்சொன்ன வகையான நிறுவனங்களிலுள்ள வேலைகளின் எண்ணிக்கை மிகமிகச்சிலவே.

எல்லாருக்கும் வேலை கிடைப்பது சாத்தியமே இல்லை. எல்லாருக்கும் பள்ளிப்படிப்பில் உயர்ந்த மதிப்பெண்களை வாங்கும் அளவுக்கு படிப்பு வருவதில்லை. நன்றாகப்படித்தாலும் எல்லாரும் முதலிடத்தை பெற இயலுமா? ஒருவரே முதலிடத்தை வகிக்கலாம்! ஒரு சிலரே மேலிடத்துக்கு செல்லலாம்! வேலைகள் சிலவும் வேலை வேண்டுவோர் மிகப்பலருமாய் இருப்பதால், மேலிடம்வகிக்கும் ஒரு சிலருக்கே நிறுவனங்கள் வேலையளிக்க இயலும். இதனால் படிப்பிலும் வேலை பெறுவதிலும் கடும் போட்டி நிலவுகிறது.

படித்து வேலை பெறுவது என்ற ஒன்றே உங்கள் பிள்ளையின் குறிக்கோளாய் இருந்தால், ஒருவேளை அவ்வளவு சிறப்பாகப்படிக்காவிட்டால் என்ன செய்வது? ஒரு மாற்றுத்திட்டத்தை வைத்திருக்க

வேண்டாமா? மதிப்பெண்கள்வாங்காத பிள்ளைகள் முட்டாள்கள் என்றும் படிப்பில் கடினமாக உழைக்கவில்லை என்றும் பெயரெடுக்கிறார்கள். இது அவர்களது தன்னம்பிக்கையை வெகுவாக பாதிக்கிறது. அவர்களை ஒன்றுக்கும் உதவாதவர்களாக இந்த சமூகம் பார்க்கிறது. அதனால் அவர்கள் அவ்வாறே ஆகிறார்கள்.

மாறாக, உங்கள் பிள்ளைக்கு படிப்பில் ஆர்வம் இல்லாவிட்டாலோ படிப்பில் நல்ல மதிப்பெண்களை வாங்காவிட்டாலோ வேறு தொழிலையோ வியாபாரத்தையோ செய்யும்படி அணியமாக்கவேண்டும். அதற்கான கல்வி எங்கிருந்து வரும்? இன்றைய பள்ளிகள் வழங்குகின்றனவா?

இன்றைய கல்வி பிள்ளைகளின் சிந்தனையை வளர்க்கவில்லை. வாழ்வில் எழும் சிக்கல்களை தீர்க்கும் திறமைகளை

வழங்கவில்லை. ‘நான் சொல்வதை யார் சிறப்பாக மனப்பாடம் செய்கிறார்கள், பார்க்கலாம்’ என்ற போட்டியையே மாணவர்களிடையில் வைக்கிறது. இது அவர்களது அறிவை வளர்க்குமா? அறியியன்மையை கூர்மையாக்குமா? சிந்தனைத்திறனை மேம்படுத்துமா? இந்த போட்டியில் வெற்றி பெறும் ஒரு சிலருக்கு நிறுவனங்களில் வேலை கிடைக்கிறது என்பதே இப்போதிருக்கும் கல்வியின் நிகர விளைவு. வேறுவித மாகச்சொன்னால், மாணவர்களிடையில் போட்டிவைத்து நிறுவனங்களுக்கு வேண்டிய சிறந்த வேலைக்காரர்களை தேர்ந்தெடுத்துக்கொடுப்பதே இன்றைய கல்வியின் விளைவு. மற்றவர்களை ‘உருப்படாதவர்கள்’ என்று அடையாளங்குத்தி புறக்கணிக்கிறது.

# கல்வியின் அடைநோக்குகள்

இன்று பள்ளியிலிருக்கும் உங்கள் பிள்ளைகள் இன்னும் சுமார் தொண்ணூறு ஆண்டுகளுக்கு வாழப்போகிறார்கள். நீங்கள் எப்போதும் அருகிலிருந்து அவர்களை வழிநடத்த இயலாது. இன்றைய நிலையில் எது நல்ல தொழிலோ அதில் ஈடுபடும்படி உங்கள் பிள்ளையை வழிநடத்தினால் அந்த தொண்ணூறு ஆண்டுகளில் நிலைமை எப்படியெல்லாம் மாறுமோ!

கல்வியின் அடிப்படை பிள்ளைகளுக்கு பொதுவாக அறிவூட்டுவதாகவும் அவர்களது அறியியன்மையை வளர்ப்பதாகவும் வாழ்வில் எழும் சிக்கல்களை அலசி சிந்தித்து அறிவின் அடிப்படையில் தீர்க்க பயிற்சியளிப்பதுமாக இருக்கவேண்டும். பெற்றோர் பிள்ளைகளை அறிவுள்ளவர்களாக ஆக்கிவிட்டால்,

எதிர்காலத்தில் பிள்ளைகள் அந்த அறிவை பயன்படுத்தி நிலைமைக்கேற்ப தங்கள் வாழ்க்கையை அமைத்துக்கொள்வார்கள். தேவையானால் புதிய திறமைகளையும் தொழிலையும் கற்றுக்கொள்வார்கள்.

பிள்ளைகளை சிறந்த சிந்தனையாளர்களாக ஆக்குவதுடன், அவர்களது ஆர்வங்களையும் ஈடுபாடுகளையும் சிறுவயதிலே கண்டறிந்து அவர்கள் இயல்பாகவே சிறக்கக்கூடிய தொழில்களில் செலுத்தவேண்டும். பெருநிறுவனங்களில் வேலைபெறும் வழிகளில் மட்டுமே செலுத்துவது குறுகிய நோக்கமுள்ளது.

பிள்ளையின் இயல்பான ஆர்வமும் ஈடுபாடும் மாடுமேய்ப்பதில் இருந்தால் என்ன செய்வது என்று கரிசனமுள்ள பெற்றோர்கள் கேட்பீர்கள். இந்த கேள்வி எழுவதன் காரணம் மாடுமேய்க்கும்

தொழில் இந்தியாவில் மதிக்கப்படவில்லை என்பதும் அவர்களுக்கு தகுந்த வருமானம் கிடைப்பதில்லை என்பதுமே. அமெரிக்காவில் மாட்டுப்பண்ணையை வைப்பதும் ஒரு பெருமைமிக்க தொழிலாக மதிக்கப்படுகிறது. அந்த தொழிலாளர்களும் வசதியாக வாழ்கிறார்கள். எல்லா தொழில்களும் மதிக்கப்படும்படியாகவும் எல்லா மனிதர்களிடையிலும் உண்மையான சமத்துவம் நிலவும்படியுமான சமூக மாற்றத்தை கல்வி கொண்டுவரவேண்டும்.
உலகில் பிறந்தவர்கள் எல்லாரும் ஏதோவொரு தொழிலை செய்து பிழைக்கவேசெய்கிறார்கள்.
மாட்டுத்தொழிலில் ஆர்வமுள்ளவரை பொறியாளராக்க முயன்றாலும் அவர் இறுதியில் மாட்டுத்தொழிலிலே வந்துசேர்வார். என் உறவினருள் ஒருவருக்கு

சிறுவயதிலிருந்தே ஆடு, மாடு, கோழி போன்றவற்றில் ஆர்வம் அதிகம். அவற்றை வளர்ப்பதிலும் அவற்றை அக்கறையுடன் பேணுவதிலும் மிகவும் மகிழ்ச்சியடைபவர். அவரது பெற்றோர் அவரை கல்லூரிக்கு அனுப்பி படிக்கவைத்தனர். படித்துவிட்டு, அவர் நான்கைந்து பால்மாடுகளை வைத்து பால்வியாபாரத்தை செய்கிறார். கோழிகளையும் வளர்த்து குஞ்சுபொறித்து கோழிக்கறியையும் முட்டைகளையும் சமூகத்துக்கு வழங்குகிறார். இவர் பொறியாளரைப்போல் பணக்காரராகமாட்டார் என்பது உண்மை. ஆனால் இவரை வலுக்கட்டாயமாக பொறியாளராக ஆக்கியிருந்தாலும் அவர் பொறியியலில் சிறந்து விளங்கியிருக்கமாட்டார். ஏனெனில் அவரது மனம் அதில் சென்றிருக்காது. நீங்கள் சுற்றுமுற்றும் பார்த்தால் இதைப்போன்ற

எண்ணற்கரிய சான்றுகளை காணலாம்.

மக்கள் சமூக நடப்புகளை புரிந்துகொள்வதும் கல்வியின் ஒரு பகுதியே. கல்வி என்பது வாழ்க்கை முழுவதும் தொடர்வது. இந்தியாவில் பெயரளவில் மக்களாட்சி நடைபெறுகிறது. ஒரு நாட்டில் மக்களாட்சி சிறப்பாக நடைபெற, அந்த நாட்டின் மக்கள் மக்களாட்சிமுறையை நன்கு புரிந்துகொள்வது ஒரு முன்வேட்கோள். ஒரு சமூகத்தின் சட்டதிட்டங்கள் எவ்வாறு இயங்குகின்றன என்பது மக்களுக்கு புரிந்தாலே சமூகம் சட்டதிட்டங்களுக்குட்பட்டு ஒரு ஒழுங்கு முறையில் செயலாற்றும். தன் வாழ்வில் ஏற்படும் சிக்கல்களை தீர்ப்பதுடன் சமூகச்சிக்கல்களை தீர்ப்பதற் கான அறிவையும் திறனையும் கல்வி வழங்கவேண்டும்.

மனிதரின் அடிப்படைத்தேவைகளான

உணவும் வீடும் உடுப்பும் நிறைவடைந்தபின் மனிதமனம் வேறு செயல்களில் ஈடுபட விரும்புகிறது. அப்போது இலக்கியம், இசை, ஓவியம் போன்ற கலைகள் மனிதருக்கு மகிழ்ச்சியூட்டுகின்றன. இவை மக்களின் மனங்களில் சமூகக்கேடான எண்ணங்கள் தோன்றுவதை குறைத்து மனங்களை பண்படுத்தக்கூடியவை. இதனால், கல்வி கலைகளில் ஒரு சுவையுணர்வை ஏற்படுத்தவேண்டும்.

கல்வி ஒரு சமூகத்தின் எல்லா உறுப்பினர்களும் நன்னெறிக்கொள்கைகளை கடைப்பிடிக்குமாறு பயிற்றுவிக்கவேண்டும். இதனாலும் மக்கள் சமூகக்கேடான செயல்களில் ஈடுபடுவதை தவிர்க்கலாம்.

அறிவியல், அரசியல், கலைகள், நன்னெறி போன்றவற்றில் ஒரு சமூகம் தன்

அனுபவங்களால் ஒரு தலைமுறையில் பெற்ற அறிவை அடுத்த தலைமுறைக்கு செலுத்துவதும் மற்ற சமூகங்களுடன் இடைமாற்றிக் கொள்வதுமே கல்வி.

கல்வியின் மேற்சொன்ன அடைநோக்குகளை மேலும் சற்று விவரமாக காண்போம்.

## அறியியன்மையும் அறிவும்

ஒரு மனிதரின் அறியியன்மை என்பது அந்த மனிதர் கல்வியின்மூலம் எந்த அளவுக்கு அறிவை உட்கவரலாம் என்பதையும் உட்சிக்கலான கருத்துகளை எவ்வளவு தெளிவாக புரிந்துகொள்ளலாம் என்பதையும் அந்த அறிவை பயன்படுத்தி சிக்கல்களை எவ்வளவு விளைவுறுவகையில் தீர்க்கலாம் என்பதையும் குறிப்பிடுகிறது. இங்கு, சிக்கலை தீர்ப்பது என்பது கணிதச்சிக்கல்களை மட்டுமல்லாமல் வாழ்விலும் சமூகத்திலும் ஏற்படும் சிக்கல்களை தீர்ப்பதை குறிக்கிறது.

மனிதர்கள் பலவிதமானவர்கள். எல்லாருக்கும் ஒரே அளவான அறியியன்மை இருப்பதாக நாம் எதிர்பார்க்கவியலாது. அறியியன்மை அதிகமுள்ளவர்கள் அதிகமான

அறிவைப்பெற்று வாழ்வில் உயரலாம் என்பது உண்மையே. இதையே திருவள்ளுவரும்

வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்

உள்ளத் தனைய துயர்வு (திருக்குறள் 595)

என்றார். ஒருவருக்கு இயல்பாகவே குறைவான அறியியன்மை இருந்தால் அது அவரது தவறன்று. அதற்காக அவரை நாம் குறைவாக மதிப்பிடலாகாது. எல்லா மனிதர்களையும் சமமாக மதிப்பது மனிதரின் நற்குணங்களுள் ஒன்று. மேலும், அது அவருக்கு இயல்பாக இருக்கும் நிலைமை என்பதால் அவரை கடிந்து பேசுவதன்மூலம் அவரது அறியியன்மையை நாம் அதிகரிக்க இயலாது.

திருவள்ளுவர் உள்ளம் என்றபோது அறியியன்மையை மட்டும் சொல்லவில்லை;

உள்ளத்தின் எல்லாத்தன்மைகளையும் சேர்த்துச்சொன்னார். அறியியன்மை அவற்றுள் ஒன்று. மற்றவை திசையமைவும் உள்ளூக்கமும். வெவ்வேறு மனிதர்களின் உள்ளத்தில் வெவ்வேறு துறைகளில் ஆர்வம் ஏற்படலாம். இதை அவரவரின் திசையமைவு என்கிறோம். ஒரே அறியியன்மையும் திசையமைவும் உள்ளவர்களுள் அதிக உள்ளூக்கமுள்ளவர்கள் மற்றவர்களைவிட மேலும் உயரலாம். உள்ளிருந்து எழும் ஊக்கத்தை உள்ளூக்கம் என்கிறோம். இதை வெளியிலிருந்து யாரும் வழங்கவியலாது. உள்ளத்தனையது உயர்வு என்பதன் முழுப்பொருளை இவ்வாறு நாம் உணரலாம்.

கல்வி ஒவ்வொரு மாணவரின் அறிவையும் அந்த மாணவரின் இயன்மைக்குத்தக்க வளர்க்கவேண்டும். எல்லா மாணவர்களுக்கும் ஒரே பாடத்திட்டம்

பயனாகாமற்போகலாம். ஒவ்வொருவருக்கும் வேறுபட்ட இயன்மையும் ஆர்வமும் ஊக்கமும் உள்ளன. அனைவரையும் ஆசிரியர் ஒரே திசையில் செலுத்த முயன்றால், அந்த திசையில் உள்ளம் செல்லும் மாணவர்கள் வெற்றியடைவர். மற்றவர் தோல்வியடைவர். நிறுவனங்களில் வேலையாட்களாக சேர்ந்தும் மருத்துவர், பொறியியலர், வழக்குரைஞர் போன்ற தொழில்களில் ஈடுபட்டும் பணஞ்சம்பாதிக்கும் வழியிலே இன்றைய கல்வி திசையமைகிறது. எல்லாப்பிள்ளைகளுக்கும் பணஞ்சம்பாதிக்கும் திசையமைவு இல்லை என்பதும் பெற்றோர் வருந்தத்தக்க ஒரு உண்மை. ஆனால் எல்லார்க்கும் கல்வி தேவை.

ஒவ்வொரு மாணவரையும் இயன்றவரை சிறந்த சிந்தனையாளராக ஆக்கும்

பரந்த நோக்கு கல்விக்கு வேண்டும். கல்வி சிக்கல்களை தீர்க்கும் திறமையை வளர்க்கவேண்டும். தன் வாழ்வில் ஏற்படும் சிக்கல்களுக்கு கடவுளையோ விதியையோ பொறுப்பாக்காமல் தானே பொறுப்பேற்று அலசி ஆராய்ந்து அதற்கேற்ப சிந்தித்து முடிவெடுக்கும் திறமையையும் மனப்பக்குவத்தையும் வழங்கவேண்டும். இந்த திறமை சமூகத்தின் தேவைகளை அலசவும், சமூகச்சிக்கல்களின் காரணங்களை சிந்தித்து தீர்வுதேடவும் பயன்படும். எனவே, கல்வியை வேலைபெறுவதற்காக அல்லாமல் கல்விக்காகவே கற்கவேண்டும்.

பெட்டிக்கடை, விவசாயம், மாடுமேய்ப்பது போன்றவற்றை நாம் ஏன் குறைவாக எண்ணவேண்டும்? இயல்பாகவே அவ்வாறான திறனுள்ள பிள்ளைகள் இறுதியில் அந்த தொழில்களிலே வந்து சேர்வார்கள். எல்லாரையும் ஒரே வழியில் செலுத்தி துன்புறுத்த வேண்டியதில்லை. பிள்ளைகளின் இயல்புக்கு மாறான வழிகளில் அவர்களை வற்புறுத்துவது நேரத்தையும் முயற்சியையும் வீணடிப்பது மட்டுமல்லாமல் பிள்ளைக ளின் தன்னம்பிக்கையை வெகுவாக சிதைக்கிறது. பள்ளியில் மதிப்பெண்வாங்காத பிள்ளைகளை சமூகம் குறைவாக மதிப்பதால் பிள்ளைகள் தன்மதிப்பை இழக்கிறார்கள். அது அவர்களது மனநலத்துக்கு கேடு.

பிள்ளைகள் பெட்டிக்கடைவைப்பதையும் விவசாயஞ்செய்வதையும் முடிவெட்டுவதையும் பெற்றோர் விரும்பாததற்கு ஒரு சரியான காரணம் இருக்கிறது. இந்த தொழிலாளர்களை சமூகம் மதிப்பதில்லை; அவர்களுக்கு தகுந்த வருமானம் கிடைப்பதில்லை.

இப்போது இந்தியாவில் இருக்கும் நிலையில் மருத்துவத்தொழில் உயர்வாகவும் முடிவெட்டுவது தாழ்வாகவும் மதிக்கப்படுகின்றன. நான் முதன்முதலில் அமெரிக்காவுக்கு வந்தபோது முடிவெட்ட அதிகமாக செலவாவதைக்கண்டு அதிர்ச்சியுற்றேன். இப்போது எனக்கு புரிகிறது. ஒவ்வொரு மருத்துவருக்கும் பொறியாளருக்கும் ஒரு குடும்பம் இருப்பதுபோலவே முடிவெட்டுபவருக்கும் ஒரு குடும்பம் இருக்கிறது. அந்த

குடும்பத்தின் அடிப்படைத்தேவைக்காக ஒரு குறைந்தளவான வருமானம் தேவை. அமெரிக்காவிலும் முடிவெட்டுபவர்களைவிட மருத்துவர்கள் அதிகமாகவே சம்பாதிக்கிறார்கள். எனினும் பெரும்பான்மையோர் அடிப்படையான வாழ்க்கைவசதியுடன் வாழ்கிறார்கள். அடிப்படைக்கு கீழுள்ளவர்களுக்கு அரசு உதவுகிறது.

எல்லாத்தொழில்களும் சமூகத்துக்கு தேவை. எல்லா வேலைகளைச்செய்யவும் ஆட்கள் வேண்டும். அவ்வாறிருக்க சில தொழில்களுக்கு மட்டும் அதிக மதிப்பையும் ஊதியத்தையும் சமூகம் வழங்குவது ஏன்? வெள்ளைச்சட்டையணிந்து அழுக்குபடாமல் அலுவலகத் துக்கு சென்றுவருவோர் உயர்வாக மதிக்கப்படுகின்றனர்; வசதியாகவும் வாழ்கின்றனர்.

மீன்பிடிப்பவர்கள் ஏழ்மையில் வாடுகிறார்கள். ஆடுமாடுகளை வளர்த்து இறைச்சியையும் பாலையும் சமூகத்துக்கு வழங்குவது குறைவான தொழிலாக கருதப்படுகிறது. விவசாயஞ் செய்து சமூகத்துக்கு உணவுவழங்குவோர் திறமையற்றவர் களாக கருதப்படுகின்றனர்.

ஏன் தெரியுமா? இந்தியாவில் மட்டும் இந்த நிலை இருப்பதன் காரணம் என்ன? சிந்தியுங்கள்! இந்தியாவில் இதுபோன்ற தொழில்களை குறைந்த சாதியினர் செய்துவருவது வரலாற்று மரபு. சாதியால் மக்களை படிவரிசையில் தரப்படுத்தி ஏற்றத்தாழ்வுகாண்பது இந்திய வரலாற்றில் ஒரு கரும்புள்ளி. இல்லை, இல்லை! அது ஒரு கருந்திட்டு; கருந்திரை. உலகில் வேறெங்கும் இந்த அநீதி நிகழவில்லை. இன்னின்ன சாதியினர் இன்னின்ன

தொழில்களை செய்யவேண்டும் என்று உயர் சாதியினர் குறித்தனர். முடிவெட்டுவது, துணிவெளுப்பது, நிலமுழுவது போன்ற தொழில்களை கீழானவையாகவும் அவற்றைச்செய்வோரை குறைந்த சாதியினராகவும் குறித்தனர். கல்விகற்பதும் வேதமோதுவதும் உயர்சாதியினரின் வேலையாயிருந்தது.

சாதியும் தொழிலும் பிரிக்கவியலாதபடி சேர்ந்திருந்த காலத்தில் குறைந்த சாதியர் செய்த தொழில்களும் குறைந்த தொழில்களாக கருதப்பட்டன. அவர்கள் ஏழ்மைநிலையிலே வாழ்ந்தனர். இந்த மனநிலையே எந்தச்சாதியினரும் எந்தத்தொழிலையும் செய்யலாம் என்ற நிலை வந்துவிட்டபிறகும் (அதாவது அந்த நிலை வந்துவிட்டதாக நாம் எண்ணும் இந்தக்காலத்திலும்) சில தொழில்களை

குறைந்த மதிப்புடன் வைத்திருக்கிறது.

உண்மையான கல்வி இந்த மனநிலையை மாற்றவேண்டும். எல்லாத்தொழில்களையும் மதிக்கும்படி எல்லாருக்கும் கல்விபுகட்டவேண்டும். சமத்துவம் நிலைக்கும்படி செய்யவேண்டும். சாதிச்சமத்துவம் மட்டுமன்றி தொழிலாலும் மக்கள் சமத்துவத்தை பெறவேண்டும். எல்லாத்தொழிலாளர்களுக்கும் ஒரு அடிப்படையான வாழ்க்கைத்தரம் கிடைக்கவேண்டும். வெள்ளைச்சட்டை அணிந்து அலுவலகஞ்செல்வதே வசதியான வாழ்வுக்கு ஒரே வழி என்ற நிலை மாறவேண்டும்.

எந்தத்தொழிலும் இகழ்வானதன்று என்ற உண்மையை சமூகத்துக்கு கருத்தேற்றுவதும் கல்வியின் நோக்கமாகவேண்டும். இப்போதிருக்கும்

நிலையில் துணிவெளுக்கும் தொழிலையும் மென்பொறியாளர் எனும் தொழிலையும் சமமாகக்காண்பது நமக்கு இயலவில்லை. அந்த மனிநிலை நம் சமூகப்பழக்கத்தால் உண்டானது. இதை படிப்படியாகவே மாற்றவியலும். ஆனால் அது கல்வியின் இறுதிக்குறிக்கோளாகவேண்டும். அதை அடையும் படிகளை கல்விக்கொள்விதிகள் வகுக்கவேண்டும்.

நான் இங்கு சமத்துவத்தைப்பற்றி பேசுகிறேன். கம்மியூனிசம் எனப்படும் பொதுவுடைமையைப்பற்றி பேசவில்லை. இரண்டுக்கும் என்ன வேறுபாடு? சமத்துவம் என்பது சாதி, வாழிடம், பொருளாதாரம் போன்ற செயற்கையான தடங்கல்கள் இல்லாமல் எல்லாருக்கும் அவரவர் அறியியன்மைக்கும் திசையமைவுக்கும் உள்ளூக்கத்துக்கும் தக்கவாறு முன்னேற

சமவாய்ப்பு இருக்கவேண்டும் என்பது. பொதுவுடைமை என்பது தனிமனித பங்களிப்பை கணக்கிலெடுக்காமல் வாழ்க்கைவசதிகளை எல்லாரும் சமமாக பகிர்ந்துகொள்வது.

சமத்துவக்கல்வி எல்லாருக்குமான கல்வி. எல்லாரையும் உள்ளடக்கும் கல்வி. அதில் எல்லாரும் பங்கேற்பார்கள். அது எல்லாருக்கும் பயனளிக்கும். ஒரு சிலரை மட்டும் மேலேற்றி மற்றவர்களை புறக்கணிக்காது. எல்லார்க்கும் அறிவூட்டி அவரவர்க்கு ஆர்வமான வேலையில் பயிற்சியளிக்கும். நிறுவனங்களில் வேலை பெறுவதும் தொழிற்கல்வியை மேற்கொள்வதும் அந்தந்த திசையமைவு உள்ளவர்களுக்கு பக்கவிளைவாகும்.

கற்க கசடற கற்பவை கற்றபின்

நிற்க அதற்குத் தக (திருக்குறள் 391)

கல்விக்குத்தக நிற்கவேண்டும் என்றாரேயன்றி, நிற்றலுக்குத்தக கற்கச்சொல்லவில்லை.

சமூகத்தின் ஒவ்வொரு உறுப்பினரும் சமூகத்துக்கு ஏதோவொரு வகையில் பங்களிக்கும்படி கல்வி அணிய மாக்க வேண்டும். இதற்கான கொள்விதிகளை அரசு உருவாக்கி நடைமுறையாக்கவேண்டும். அவ்வாறான சமூகத்தில் ஏமாற்று இருக்காது; திருட்டு இருக்காது; பிச்சையெடுத்தல் இருக்காது; வன்முறை இருக்காது.

# சமூக நடப்புகள்

வேலைக்கும் வாழ்க்கைவசதிக்கும் அப்பால் சென்று கல்வியைப்பற்றி நாம் சிந்தித்தால், கல்வி அறியியன்மையை கூர்மையாக்கி அறிவை வளர்க்கவேண்டும் என்பது தெளிவாகிறது. ஒவ்வொரு மனிதருக்கும் அவரது விருப்பத்துக்கிணங்க பரந்த உலக அறிவை கல்வி வழங்கவேண்டும். உலகமும் நாடும் எங்கே செல்கின்றன, உலக நடப்புகளின் பொருள் என்ன, நாம் சமூகத்துக்கு எவ்வாறு பங்களிக்கிறோம், நம் பங்களிப்பு எவ்வகையான தாக்குதலை ஏற்படுத்துகிறது, தன்னையும் சமூகத்தையும் மேலும் மேம்படுத்த வேறு எந்த வகையில் பங்களிக்கலாம் என்ற சிந்தனைகளை ஊக்கவேண்டும். மற்றவர்கள் சொன்னதை மட்டும் செய்துகொண்டிருந்தால் போதாது.

சமூகத்தைப்பற்றி ஏன் சிந்திக்கவேண்டும்? ‘சமூகத்தை மேம்படுத்துவது என் வேலையா?’ என்று ஒருவர் எண்ணலாம். ஆம், அதுவும் உங்கள் வேலையே! சமூகம் என்பது நாமெல்லாரும் சேர்ந்த ஒரு கூட்டம். யாரும் தனியாக வாழவில்லை. ஒவ்வொருவரும் அவரவரது சமூகத்திலே வாழ்கிறோம். இயற்கை வளங்களை பகிர்ந்துகொள்கிறோம். நமக்கு தேவையான பொதுவசதிகளை செய்துகொள்கிறோம்.

முற்காலத்தில் ஊரின் நடுவிலுள்ள ஒரு கிணற்றிலிருந்து அனைவரும் நீரெடுத்தனர். கிணற்றை வெட்டியவர் யார்? ஊர்க்காரரர்கள் சேர்ந்தே அதை வெட்டியிருக்கவேண்டும். அது ஒரு சமூகச்செயல். இக்காலத்தில் ஊராட்சி நீர்க்குழாய்களை அமைத்து வீட்டுக்குவீடு நீரை வழங்குகிறது. ஊழலற்ற ஊராட்சியாயிருந்தால் இதுபோன்ற

வசதிகளை மக்களுக்கு செய்துகொடுத்து அதற்கு ஆகும் செலவை மக்களிடமிருந்து வரியாக பெற்றுக்கொள்கிறது. இதுவும் மற்றொருவகையான சமூகச்செயல். சாலைகள், பாலங்கள், அணைக்கட்டுகள், பள்ளிகள், போக்குவரத்து, காவற்றுறை போன்ற வசதிகளை செய்துகொடுப்பதும் அரசின் செயல்கள். இதற்காகவே அரசு என்ற ஒரு அமைப்பு ஏற்பட்டது. இந்த சமூகச்செயல்களிலிருந்து பயனடைவது ஒவ்வொரு குடிமகரின் உரிமை; அதைப்போலவே, அவை சரியாக நடைபெறுகின்றனவா என்று சரிபார்ப்பது ஒவ்வொரு குடிமகரின் கடமை. இதனாலே ஒவ்வொருவரும் சமூகத்தைப்பற்றி சிந்திக்கவேண்டும். இதுவும் உங்கள் வாழ்க்கையைப்பற்றியதே.

நம் குடும்பத்தினர்மீது எவ்வாறு நமக்கு

அக்கறை யிருக்கிறதோ அவ்வாறே நம் ஊரின்மீதும் அக்கறை இருக்கிறது. அவ்வாறே நம் மாநிலத்தின்மீதும் நம் நாட்டின்மீதும் உலகத்தின்மீதும் அக்கறை இருக்க வேண்டும். இவ்வாறான சமூகச்செயல்கள் நடைபெறும் விதங்களையும் அவற்றுக்கான நிதித்திட்டங்களையும் அவற்றில் முறைகேடு நிகழ்ந்தால் தட்டிக்கேட்கும் வழிமுறைகளையும் எல்லாரும் அறிந்திருக்கச்செய்வது கல்வியில் வேலை.

ஒரு சமூகத்தின் சட்டதிட்டங்கள் எவ்வாறு இயங்குகின்றன என்பது மக்களுக்கு புரிந்தாலே சமூகம் சட்டதிட்டங்களுக்குட்பட்டு ஒரு ஒழுங்குமுறையில் செயலாற்றும். காவற்றுறையும் நீதிமன்றங்களும் செயலாற்றும் விதம் மக்களுக்கு புரிந்தாலே சட்டத்தின் பயன்களை மக்கள் பெறுவர். அவ்வாறு புரியாவிட்டால் மக்கள் காவலர்கள்,

வழக்கறிஞர்கள் போன்றவர்களை நம்பியே இருக்கவேண்டும். சட்டநுணுக்கங்கள் பொதுமக்களுக்கு தெரியாவிட்டாலும் சாலைவிதிகள் போன்ற பொதுவான சட்டக்கூறுகள் தெரிந்திருக்க வேண்டும். இவற்றை அறியுறுத்துவதும் கல்வியின் பங்கே.

கொள்கையளவில், இந்தியாவில் மக்களாட்சி நடைபெறுவதாக அதன் அரசிலக்கணம் கூறுகிறது. அதாவது, அரசு மக்களின் நிற்பாளர்களால் ஆனது. அந்த நிற்பாளர்களை தேர்ந்தெடுக்க ஒரு குறிப்பிட்ட வயதுக்கு மேற்பட்ட ஒவ்வொரு குடிமகரும் வாக்களிக்கவேண்டும். இவ்வாறான மக்களாட்சிமுறை சரியாக நடைபெற வேண்டுமெனில், மக்கள் தங்கள் வாக்களிப்பின் பொருளையும், அந்த வாக்களிப்பால் தேர்தலுற்று

அரசுப்பொறுப்பை ஏற்பவரின் கடமைகளையும் பொறுப் புகளையும், அந்த தேர்தலால் ஏற்படும் பின்விளைவுகளை யும், அந்த பின்விளைவுகளின் நெடுநாளைய தாக்கங்களை யும் நன்கு புரிந்திருக்கவேண்டும். அவ்வாறிருந்தாலே நாட்டின் முன்னேற்றத்துக்கு ஏற்ற அரசை மக்களை தெர்ந்தெடுப்பார்கள். இவ்வாறான அறிவை எல்லாருக்கும் வழங்குவதும் கல்வியின் பொறுப்பு.

மனிதனுக்கு உணவும் வீடும் உடுப்பும் அடிப்படைத்தேவைகள். இவற்றைப்பெற ஒரு குறிப்பிட்ட அளவான செல்வம் வேண்டும். அந்த அளவுக்கு செல்வத்தை பெறுவதற்கே திண்டாடும் ஏழைகள் அதற்கு அப்பால் சிந்திக்க இயலாது என்பது உண்மை. ஆனால், அந்த அடிப்படைத்தேவைகள் நிறைவேறிய பின் நாம் என்ன செய்கிறோம்? அப்போது மனித மனங்களுக்கு மகிழ்ச்சியளிக்க இலக்கியமும் கலைகளும் பயன்படுகின்றன. கலைகள் மனித மனங்கள் சமூகவெறுப்பும் சமூகக்கேடுமான வழிகளில் சிந்திப்பதை தடுத்து மகிழ்ச்சியான மனிதவிருப்ப உலகநோக்கை மக்களுக்கு வழங்குகின்றன. பெரும்பான்மையோருக்கு இலக்கியத்தை எண்ணும்போது பழந்தமிழிலக்கியமே

நினைவுக்கு வரலாம். ஆனால், இலக்கியம் என்பது செய்யுளும் கவிதையும் மட்டுமன்று; புனைவிலக்கியம் மட்டுமன்று. பலவிதமான அறிவுநூல்களும் இலக்கியமே; இசை, நடனம், ஓவியம் போன்ற கலைகளை விவரிக்கும் நூல்களும் அறிவியலை விளக்கும் நூல்களும் இலக்கியமே. இவற்றுள் எது ஒருவரை கவர்கிறதோ அதை மகிழ்வூட்டும் ஓய்வுப்பணியாக எடுத்துக்கொள்ளலாம்.

சிலருக்கு பழந்தமிழிலக்கியத்தில் ஆர்வம் ஏற்படலாம். தமிழில் இவ்வாறான இலக்கியவளம் ஏராளம் என்பதை நான் சொல்லவேண்டியதேயில்லை. சிலருக்கு கணிதப்புதிர்களில் ஆர்வம் ஏற்படலாம். சிலருக்கு இயலுலகமும் அதிலுள்ள உயிரினங்களும் அவற்றின் வாழ்க்கைமுறைகளும் ஆர்வத்தை தூண்டலாம். சிலருக்கு புடவி (அண்டம்)

எவ்வாறு உருவாகி படிமலர்ந் திருக்கிறது என்பதில் ஒரு அறியார்வம் உண்டாகலாம். சமூகத்தில் மனிதர்கள் ஒருவருடனொருவர் உறவாடுவதும் சமூகங்கள் ஒன்றுடனொன்று இடைவினையாற்றுவதும் சிலரது கவனத்தை கவரலாம். நான் யார், இந்த வாழ்வின் பொருள் என்ன என்ற தத்துவக்கேள்விகள் சிலரது மனங்களை ஆட்கொள்ளலாம்.

மேலும், இசை, நடனம், ஓவியம் போன்ற பல நிகழ்த்துகலைகளும் இருக்கின்றன. இவற்றை கேட்டும் கண்டும் மகிழ்வது மட்டுமல்லாமல் நாமும் உருவாக்கலாம்; அவற்றைப்பற்றியும் வாசிக்கலாம். பல நூற்றாண்டுகளாக கலைஞர்கள் இயற்றிவைத்திருக்கும் கலைச்செல்வங்களை நுகரலாம். இதுபோன்ற கலைகளில் எளிய கலைகளும், நுண்கலைகளும் இருக்கின்றன. சான்றாக, இசையை எடுத்துக்கொள்வோம்.

குத்துப்பாட்டு எளிய இசை. இதன் தாளமும் பண்ணும் ஒற்றைச்சீரான எளிமையானவை. மாறாக, கருநாடக இசையின் பண்களிலும் தாளங்களிலும் விரிவானதும் நுணுக்கமானதுமான பாங்குகள் பல மட்டங்களில் உள்ளன. இவற்றை நுகரும்போது நம் மனங்களின் ஆழ்ந்த பகுதிகளும் அறியியன்மையும் ஈடுபடுவதால் இவை அதிக மகிழ்ச்சியை தரவல்லவை. இதனால், கருநாடக இசை, பரதநாட்டியம் போன்றவற்றை நுண்கலைகள் என்கிறோம்.

தமிழிலக்கியம், கருநாடக இசை, அறிவியல் போன்றவற்றில் ஈடுபடும் ஒருவருக்கு வாழ்வில் ஒருபோதும் அலுப்பு ஏற்படாது. ஏனென்றால், இவற்றுள் எந்த ஒன்றையும் முற்றிலும் நுகர ஒரு வாழ்நாள் போதாது. இவை அள்ள அள்ள குறையாதவை.

வாசிப்பதும் நுண்கலைகளில் ஈடுபடுவதும் கல்விச்செயல்கள். இவ்வாறான செயல்களில் எந்தளவுக்கு ஈடுபடுகிறோமோ அந்தளவுக்கு அறிவு விரிவடைகிறது; அந்தளவுக்கு நாம் அறியியன்மையை சிறப்பாக பயன்படுத்தலாம்.

தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்கு

கற்றனைத் தூறும் அறிவு (திருக்குறள் 396)

இதனால், மனங்கள் சிந்திப்பதற்கான பயிற்சியை கல்வி அளிக்கவேண்டும். தமக்கு ஆர்வமான நூல்களை வாசிக்கும் பழக்கத்தை ஊக்குவித்து அதற்கான அறியார்வத்தை தூண்டவேண்டும். அப்போது மனித மனங்களில் சீரிய சிந்தனைகள் எழுகின்றன. காமக்கலையைப்பற்றியும் நான் இங்கு குறிப்பிடவேண்டும். இசை, ஓவியம் போன்றவற்றை உருவாக்கி

மற்றவர்களை மகிழச்செய்வது எவ்வாறு கலைகளோ, அவ்வாறே மற்றொருவருக்கு இன்பத்தை வழங்குவதும் ஒரு கலையே. தன் இசையைக்கேட்டோ ஓவியத்தைக்கண்டோ மற்றவர் மகிழும்போது அதை உருவாக்கியவருக்கு உண்டாகிறதைப்போலவே தான் வழங்கும் இன்பத்தை பெற்று மற்றொருவர் மகிழும்போது வழங்குபவரும் மகிழ்ச்சியடைகிறார். இந்த கலையும் மனிதர்களை மகிழ்ச்சியாகவும் மனநலத்துடனும் வைத்திருக்க உதவுகிறது.

# நன்னெறி

நன்னெறி மனித நற்பண்புகளின் அடிப்படையில் தானாகவே எழுகிறது. மனிதர்களை மதிப்பது, மனிதர்களிடையில் ஏற்றத்தாழ்வுகளை காணாதது, மற்றவர்களின் உரிமைகளை மதிப்பது போன்றவை நன்னெறிகள். நன்னெறி நீதிநெறியிலிருந்து வேறுபட்டது. நீதிநெறி என்பது எது நல்லது எது கெட்டது என்று யாரோ விதித்த விதிகளை பின்பற்றுவது.

நன்னெறிக்கும் நீதிநெறிக்கும் வேறுபாடுகாண்பது கடினமாயிருக்கலாம். இரண்டுமே நல்லதுகெட்டதையே சொல்கின்றன. பெரும்பாலான விதிகளில் இரண்டும் ஒத்துப்போகின்றன. இரண்டுக்கும் அடிப்படையிலான வேறுபாடு என்னவென்றால் நன்னெறி ஒருவரின்

உள்ளத்திலிருந்து எழுவது; நீதிநெறி வேறு யாரோ விதித்ததால் வெளியிலிருந்து வருவது. அதை பைபிளோ, குரானோ, பகவத்துக்கீதையோ, உங்கள் பாட்டியோ சொல்லியிருக்கலாம். மேலும், ஒருவர்பாட்டி சொன்னது மற்றவர்பாட்டி சொன்னதிலிருந்து மாறுபடலாம்.

ஒருவர் விபத்துக்குள்ளாகி சாலையில் அடிபட்டு கிடக்கிறார் என்று வைத்துக்கொள்வோம். அவரை மருத்துவமனைக்கு தூக்கிச்செல்வதோ மருத்துவ உதவியை வரவழைப்பதோ நன்னெறி. அவரது கழுத்திலும் கையிலுமுள்ள அணிகலன்களை கழற்றி எடுத்துக்கொண்டு ஓடுவது புன்னெறி. உங்கள் பாட்டியும் ‘உதவுவது நன்று, ஏமாற்றுவது தீது’ என்றே சொல்லியிருப்பார். ஆனால், பாட்டி அவ்வாறு சொன்னார்

என்பதற்காகவே நீங்கள் உதவினால் நீங்கள் நீதிநெறியை பின்பற்றுகிறீர்கள். உங்கள் உள்ளம் சொல்வதை செய்தால் நன்னெறியை பின்பற்றுகிறீர்கள். ஏழ்மையாலோ வேறு காரணத்தாலோ திருடிச்செல்பவரது உள்ளமும் அது தவறு என்றே சொல்லியிருக்கும்.

சிலவிடங்களில் நன்னெறியும் நீதிநெறியும் முரணாகலாம். சான்றாக, உயர்சாதியர் தரையில் அமர்ந் திருக்க தாழ்சாதியர் நாற்காலியில் அமரக்கூடாது என்பது உங்கள் பாட்டி சொன்ன ஒரு நீதிநெறியாயிருக்கலாம். ஆனால், இதற்கான எந்த காரணத்தையும் மனித இயல்புகளிலிருந்து நாம் காணவியலாது. பாட்டி சொல்லி யிருக்கிறார் என்பதைத்தவிர வேறு காரணம் இல்லை.

மற்றொரு சான்றாக, கணவனையிழந்த ஒரு பெண் மறுமணஞ்செய்வது தவறு என்பது

ஒரு சமூகத்தின் நீதிநெறியாகலாம். யாரும் ஒருவர்பின்னொருவராக எத்தனைபேரையும் திருமணஞ்செய்துகொள்ளலாம் என்பது மற்றொரு சமூகத்தின் நீதிநெறியாகலாம். பிந்தையதே நன்னெறியுமாகிறது. ஒருவர் ஒரேநேரத்தில் பலருடன் மணவாழ்வை நிகழ்த்துவது பல குடும்பச்சிக்கல்களையும் சமூகச்சிக்கல்களையும் உண்டாக்குவதால் அது நன்னெறியாக கருதப்படவில்லை. ஒரு சமூகத்தின் சட்டதிட்டங்கள் பெரும்பாலும் நன்னெறியின் அடிப்படையிலானவை.

நன்னெறியை தீங்குவிளைவிக்காததும் தனிமனித உரிமையில் குறுக்கிடாததும் என்று வரையறுக்கலாம். அதாவது, தனக்கும் மற்றவருக்கும் சமூகத்துக்கும் தீங்கு விளைவிக்காமல் தன் விருப்பப்படி வாழும் உரிமை ஒவ்வொருவருக்கும் இருக்கிறது. சிலநேரங்களில் செயலின்மையும்

தீங்குவிளைவிக்கலாம் என்பதை நோக்குக. சான்றாக, அடிபட்டுக்கிடப்பவருக்கு உதவாதது அவருக்கு தீங்குவிளைவிக்கும். ஒருவருக்கு பிடிக்காத வகையில் மற்றவர்கள் வாழக்கூடாது என்று எதிர்பார்ப்பதும் நன்னெறிக்கு புறம்பானது. சான்றாக, திருமணமாகாத ஒரு பெண் குழந்தையை பெற்றுக்கொள்வது உங்களுக்கு பிடிக்காமலிருக்கலாம். ஆனால், அவளுக்கு பிடித்திருந்தால் அது அவளது தனிமனித உரிமை. நன்னெறிவிதிகள் சாதி, மதம், ஏழைபணக்காரன், சிற்றூர்பேரூர், ஆண்பெண், படித்தவன்படிக்காதவன் போன்ற வேறுபாடின்றி எல்லார்க்கும் சமமாக பயனாகின்றன.

எல்லா மக்களுக்கும் ஏற்புடையதான நன்னெறிச்சிந்தனையை கல்வி ஊக்குவிக்கவேண்டும். சிந்தனைகளை

நன்னெறிப்படுத்தும் பக்குவத்தை கல்வி வழங்கவேண்டும். புன்னெறிகளால் ஏற்படும் சமூக விளைவுகளை மக்கள் புரிந்துகொள்ளும்படி கல்வி அறியுறுத்தவேண்டும். மக்கள் தன்னைப்போலவும் தன் குடும்பத்தைப்போலவும் தன் ஊரைப்போலவும் தன் சமூகத்தை எல்லா மட்டங்களிலும் எண்ணி, அதன் நலனில் அக்கறைகொள்ளவேண்டும். நன்னெறிச்சிந்தனைகள் இல்லாத சமூகம் சீரழியும். அதன் உறுப்பினர்கள் முரடர்களாகவும் ஏமாற்றுக்காரரர் களாகவும் இருப்பதில் மகிழ்ச்சியையும் பெருமையையும் அடைவார்கள். ஒருவரையொருவர் ஏமாற்றுவதால் சமூகம் முன்னேறாது. சமூகத்தின் ஒரு பகுதியினர் மற்றப்பகுதியினரிடமிருந்து

செல்வத்தை பெறுவதன் மூலம் பணக்காரர்களாக எண்ணினால், அந்த சமூகம் எதையும் உற்பத்தி செய்யாது; ஆனால் அன்றாடச்செலவு களால் சமூகத்தின் மொத்தச்செல்வம் குறையும். இவ்வாறு வருமானம் இல்லாமல் செலவு செய்வதால் சமூகத்தின் பொருளாதாரமும் நாளடைவில் வீழ்ச்சியடைந்து இறுதியில் அந்த சமூகம் அழியும்.

## அறிவை கடத்தலே கல்வி

கல்வியை பள்ளிகளிலும் கல்லூரிகளிலுமிருந்து மட்டுமே பெறுவதில்லை. பொதுவாக, நம் முன்னோரின் அனுபவங்களை ஒரு தலைமுறையிலிருந்து அடுத்த தலைமுறைக்கு கடத்துவதே கல்வி எனலாம். இந்த கல்வி வீட்டிலும் நடைபெறலாம். சமூகத்திலும் நடைபெறலாம். பள்ளிகளும் கல்லூரிகளும் அதற்கான சூழ்நிலைகளையே உருவாக்கிக்கொடுக்கின்றன.

வரலாற்றுக்காலத்தில் தனித்தனி நாடுகளாகவோ சமூகங்களாகவோ வகுப்புகளாகவோ இருந்த மக்கள் ஒன்றுசேர்ந்து இந்தியா என்ற நாடு உருவாகியிருக்கிறது. இது மக்களாட்சியுள்ள நாடு. இந்த நாட்டில் எல்லாவிதமான

மக்களும் சமமானவர்கள். இந்த சமத்துவம் நிலைக்கவேண்டும் எனில், அது வாழ்வின் எல்லாக்கூறுகளிலும் வெளிப்படவேண்டும். குறிப்பாக, கல்வியில் வெளிப்படவேண்டும்.

வெவ்வேறு சமூகங்களிலுள்ள மக்களுக்கு வெவ்வேறு அனுபவங்கள் இருக்க வாய்ப்பிருக்கிறது. இந்த சமூகங்கள் ஒன்றுசேரும்போது சமூகங்கள் தங்கள் அனுபவங்களால் பெற்ற அறிவை தங்களுக்குள் இடைமாற்ற கல்வி உதவவேண்டும். ஒரு குறிப்பிட்ட சமூகத்தின் அனுபவங்களையும் பண்பாட்டு விழுமங்களையும் மற்ற எல்லாச்சமூகங்களும் பின்பற்றும் நிலைமை இருந்தால், ஒரு சமூகம் தன் விழுமங்களை மற்ற சமூகங்களின்மீது திணிக்கிறது என்று பொருள்; அது அடக்குமுறை.

வெளிப்படையாக சொல்லவேண்டுமெனில்,

உயர்சாதியைச்சேர்ந்த இந்துக்களின் விழுமங்களை மற்ற சாதியினர்மீதும் மற்ற மதத்தினர்மீதும் திணிக்கும் கல்வி சமூகத்தில் முரண்பாடுகளை உண்டாக்குகிறது. ஒரு குறிப்பிட்ட மொழியை மற்ற மொழிகளைப்பேசும் மாநிலங்களில் திணிக்கும் கல்வியும் சமூகத்தில் கொந்தளிப்பை ஏற்படுத்துகிறது.

கல்வி என்பது சமூகத்தின் எல்லா வகுப்பினரைப்பற்றியும் அறிந்து அவர்களின் மாறுபட்ட அனுபவங்களிலிருந்து நாம் அறிவு பெறுவதும் நம் அறிவை மற்ற வகுப்பினருடன் பகிர்ந்துகொள்வதும்.

கல்வி அனுபவங்களை இரண்டு திசைகளில் கடத்துகிறது. ஒன்று தலைமுறையிடையில் கடத்தல்; மற்றொன்று வெவ்வேறு சமூகங்களிடையில் கடத்தல். இதனால் ஒவ்வொரு சமூகமும் தன்

அடையாளத்தையும் விழுமங்களையும் இழக்காமல், மற்றவர்களிடமிருந்து தேவையானபோது கற்றுக்கொள்ளலாம்; விரும்பியபோது எடுத்துக்கொள்ளலாம். அதாவது கல்வி திணிப்பில்லாமல் வேண்டியதை எடுத்துக்கொள்ளுமாறு இருக்கவேண்டும்.

கற்போர் விரும்பியதை விரும்பியவாறு கற்பது அவர்களின் சிந்தனைத்திறனை வெளிப்படுத்தும். மக்கள் தமக்கு ஆர்வமான துறைகளில் ஈடுபட்டு தன்முனைவாக தொழில்களை தொடங்க முற்படுவார்கள். அவர்கள் வேலை வேண்டுவோராக மட்டுமே இல்லாமல் வேலைவழங்குவோராக படிமலரவும் வாய்ப்பு ஏற்படும்.

உண்மையான கல்வி சமூக ஏற்றத்தாழ்வுகளுக்கு அப்பாற்பட்டது. சாதி, மதம், மொழி, செல்வச்செழிப்பு,

வாழிடம், பெற்றோரின் கல்விநிலை போன்றவற்றால் வேறுபடாதது. தம் அறியியன்மைக்கும் ஆர்வங்களுக்கும் ஏற்ப கல்வியைப்பெறுவதில் அனைவருக்கும் சம வாய்ப்பு இருக்கவேண்டும்.

இந்தியாவில் சாதியாலும் மதத்தாலும், மொழியாலும், பண்பாட்டாலும், நீதிநெறிகளாலும் விழுமங்களாலும் பல பிரிவுகள் உள்ளன. ஒவ்வொரு பிரிவும் கல்வியை பெறுவது மட்டுமல்லாமல் தங்கள் பண்பாடுகளையும் விழுமங்களையும், மொழிகளையும் மற்றப்பிரிவினருக்கு வழங்கும் வாய்ப்பும் இருக்க வேண்டும். எல்லாச்சமூகத்தினரும் சமமாக மதிக்கப்பட்டு எல்லாரும் கல்விக்கு பங்களிக்கவேண்டும். இது சமூக அடிப்படையிலான கல்விக்கொள்விதி.

சமூகத்தில் எழும் சிக்கல்களை எவ்வாறு

தீர்ப்பது, சமூகத்தின் தேவைகளை எவ்வாறு நிறைவுசெய்வது என்ற கேள்விகளை மனிதர் சிந்திக்கும்போது, தம் அறியியன் மையால் இவற்றுக்கான தீர்வுகளை வந்தடைகின்றனர். மனிதர் என்பது ஆண்களையும் பெண்களையும் உள்ளடக்கியது என்பதை உறுதியாக நினைவில் நிறுத்துக. எல்லா சாதி, மதம் போன்ற பிரிவினரையும் குறிக்கிறது என்பதையும் மறந்துவிடவேண்டாம். மனிதருக்கு இயல்பாக இருக்கும் அறியும் ஆர்வத்தையும் இயன்மையையும் ‘அறியியன்மை’ என்கிறோம். அந்த அறியியன்மையால் அடைந்த தீர்வுகளையும் அனுபவங்களையும் மொத்தமாக ’அறிவு’ என்று அழைக்கிறோம். அந்த அறிவை ஒருவரிடமிருந்து மற்றவர்கள் அறியும்படி வழங்குவதே ‘கல்வி’.

இன்று நாம் காணும் அறிவியல், தொழினுட்பம், மின்கருவிகள், மருத்துவம், பொருளாதாரக்கோட்பாடுகள், சமூகவியல், கலைகள் ஆகிய எல்லாமே இந்த அடிப்படையில் எழுந்தவை. காலங்காலமாக படிமலர்ந்து கல்விப்பாடங்களாக வளர்ந்திருக்கின்றன. ஆனால் இந்த வளர்ச்சி தொடர்வதே இயல்பு. ஏனெனில், சமூகம் என்றென்றும் புதிய சிக்கல்களையும் தேவைகளையும் உருவாக்கிக்கொண்டேயிருக்கிறது. ஏற்கனவே இருக்கும் அறிவை மனப்பாடஞ்செய்வதுடன் நாம் மனநிறை வடைந்துவிடக்கூடாது. சமூகத்தின் புதிய தேவைகளை உணர்ந்து அவற்றுக்கான தீர்வுகளை நம் இளைஞர் சிந்திக்கவேண்டும். இந்த நிகழ்முறையை நாம் ‘ஆராய்ச்சி’ என்கிறோம். சிந்திக்கும் திறனையும்

ஆராய்ச்சிக்கான மனப்பான்மையையும் கல்வி வளர்க்கவேண்டும்.

உங்கள் சமூகத்தின் தேவைகளை உணர்வதை மற்ற சமூகத்தினருக்கோ நாட்டினருக்கோ விட்டுவிட்டால் அவர்கள் ஆராய்ச்சியில் ஈடுபட்டு உங்களுக்கு தேவையான பொருள்களை உற்பத்திசெய்து உங்களுக்கு விற்பார்கள்; உங்களுக்கு தேவையான சேவைகளையும் விற்பார்கள். இதனால் அவர்களது பொருளாதாரம் மேம்படும். உங்கள் பொருளாதாரம் நலிவடையும். மேலும் உங்கள் பிள்ளைகளுக்கு சிந்திக்கும் திறனை வளர்க்காமல் சொன்னதைச்செய்யும்படி பயிற்சியளித்தால் அவர்களை உழைப்பாளிகளாக வேற்றுச்சமூகத்தினரோ நாட்டினரோ பயன்படுத்திக்கொள்வார்கள்.

# 3. மொழியும் கல்வியும்

கல்வி என்பது பள்ளியில் படிப்பது மட்டுமன்று. நாம் அன்றாடம் வாழ்வில் அனுபவித்துவரும் மனித அனுபவமும் கல்வியே. இந்த மனித அனுபவங்களை ஒருவருக்கொருவர் பகிர்ந்துகொள்ள ஒரு மொழி தேவை. எனவே கல்வியும் மொழியும் தொடர்புள்ளவை.

ஒவ்வொரு சமூகமும் அன்றாட வாழ்வில் தகவற்பரிமாற்றத்துக்காக ஒரு மொழியை பயன்படுத்துகிறது. இவ்வாறு மொழியும் வாழ்வும் பிரிக்கவியலாதவாறு பின்னிப்பிணைந்து கிடக்கின்றன. கல்வியும் ஒருவிதமான தகவற்பரிமாற்றம் என்பதால் கல்வியும் மொழியும் இதேவகையில் பிணையவேண்டும்.

மொழி, கல்வி, வாழ்க்கை ஆகிய

மூன்றும் ஒன்றையொன்று நெருக்கமமாக சார்ந்திருக்கின்றன.

# மொழியே கல்வியின் அடிப்படை

கல்வியால் அறிவுபெற முதலில் மாணவர்களுக்கு மொழித்திறமை வேண்டும். ஆசிரியர் சொல்வதை புரிந்துகொள்ள கேள்வித்திறன் வேண்டும்; நூல்களை வாசித்து பொருள்கொள்ள வாசிப்புத்திறன் வேண்டும்; தம் கருத்துகளை எடுத்துரைக்க பேச்சுத்திறன் வேண்டும்; தம் சிந்தனைகளை சித்தரிக்க எழுத்துத்திறன் வேண்டும். எனவே, நாம் மொழித்திறன் என்பதில் கேள்வி, வாசிப்பு, பேச்சு, எழுத்து ஆகிய திறன்கள் அடங்குகின்றன. தொடக்கக்கல்வி இந்த திறன்களில் மாணவர்களுக்கு பயிற்சியளிக்கவேண்டும். இதன் அடிப்படையிலே உயர்கல்வி அமையவேண்டும்.

ஆனால், இன்றைய கல்விமுறையில்,

தேர்வெழுதி மதிப்பெண்வாங்குவதே நோக்கம் என்பதால், மாணவர்களில் எழுதுவதைத்தவிர மற்ற திறன்கள் வளராகவில்லை. சான்றோர்முன் தம் கருத்துகளை எடுத்துச்சொல்லும் துணிவில்லை. நல்ல நூல்களை எடுத்து வாசிக்கும் பழக்கம் இல்லை. எழுத்திலும் உயர்நடை இல்லை. அவர்கள் தேர்வில் எழுதுவதில் இலக்கணப்பிழை இருப்பினும் சரியான 'விடை'யை எழுதினால் மதிப்பெண்கொடுத்துவிடலாம் என்ற எண்ணம் ஆசிரியர்களிடையில் நிலவுகிறது. இவ்வாறிருக்கும்போது மொழியில் திறன்பெறும் ஊக்கம் அவர்களுக்கு எங்கிருந்து வரும்? இந்த திறன் ஆசிரியர்களுக்கே இல்லை. ஏனெனில், இந்த பழக்கம் இன்றைய ஆசிரியர்கள் மாணவர்களாயிருந்தபோதே

தொடங்கிவிட்டது.

ஒரு சமூகம் தன் அன்றாட வாழ்வில் பயன்படுத்தும் மொழியை அதன் தாய்மொழி என்கிறோம். பொதுவாக, ஒரு வட்டாரத்தில் எந்த மொழி பழக்கத்திலுள்ளது என்பது தெளிவாகத்தெரிகிறது. நாம் கடைக்குச்சென்று பொருள்களை வாங்கும்போது எந்த மொழியில் பேசுகிறோம்? நாம் பயணிக்கும்போது நடத்துநருடனும் உடன்பயணிகளுடனும் எந்த மொழியில் பேசுகிறோம்? பள்ளியிலும் வகுப்புக்குவெளியிலும் ஆசிரியர்களும் மாணவர்களும் எந்த மொழியில் பேசிக்கொள்கிறார்கள்? இதுவே அந்த வட்டாரத்தின் தாய்மொழி.

கல்வி வாழ்வுடன் தொடர்புள்ளதாக இருக்கவேண்டுமெனில் அது இந்த மொழியில் அமைவதே இயல்பு. ஆங்கிலத்தில்

செயலாற்றும் அலுவலகங்களிலும் பணியாளர்கள் தங்களுக்குள் இந்த மொழியிலே பேசிக்கொள்கின்றார்கள்! கல்வியும் அலுவலக தகவற்பரிமாற்றமும் வேற்றுமொழியில் இருந்தால் அது செயற்கையாக தோன்றவில்லையா? அந்த நிலைமையை மாற்றவேண்டாமா? எவ்வாறு மாற்றுவது என்றாவது சிந்திக்கவேண்டாமா? தமிழ்நாட்டில் இப்போது ஆங்கிலத்தில் மட்டுமே உயர்கல்வி கிடைக்கிறது. தொடக்கக்கல்விக்காகவும் பொருளாதார மேல்வகுப்பினரும் இடைவகுப்பினரும் தம் பிள்ளைகளை ஆங்கிலத்தை முன்னிறுத்தும் தனியார்ப்பள்ளிகளுக்கு அனுப்பும் போக்கு இருக்கிறது. பெரும்பாலும் கீழ்வகுப்பினரே பிள்ளைகளை அரசுப்பள்ளிகளுக்கு அனுப்புகின்றனர். தமிழ்வழிக்கல்வி அரசுப்பள்ளிகளில் இருப்பினும்,

அந்தப்பள்ளிகளும் ஆங்கிலவழிக்கு மாறிக்கொண்டு வருகின்றன. தமிழ்வழியான பாடநூல்களிலும் ஆங்கிலச்சொற்களும் ஆங்கிலநடையுமே இடம்பெறுகின்றன. இவ்வாறு தமிழ்நாட்டில் கல்வி ஒட்டுமொத்தமாக ஆங்கிலத்துக்கு மாறிக்கொண்டுவருகிறது.

கல்வியின் அடிப்படை தாய்மொழியிலிருந்து ஒரு வேற்றுமொழிக்கு மாறுவது ஆபத்தானது. நான் இதை தமிழ்ப்பற்றால் சொல்லவில்லை என்பதை நீங்கள் புரிந்துகொள்ளவேண்டும். உங்கள் பிள்ளைகளுக்கு ஆங்கிலம் தெரியவேண்டாம் என்றோ அவர்கள் தமிழில் மட்டுமே படிக்கவேண்டும் என்றோ நான் சொல்லப்போவதில்லை. இதுபோன்ற நடைமுறையான கேள்விகளுக்கு பிறகு வருவோம். இப்போது எனக்கு வேண்டியதெல்லாம் உங்கள் சிந்தனையை

தூண்டுவதே. நான் இதுவரை சொன்னதையெல்லாம் நீங்கள் சரியாக புரிந்துகொண்டிருந்தால் அவற்றிலிருந்து இந்த முடிவு தானாகவே எழுகிறது.

கல்வி வேற்றுமொழியில் இருக்கும்போது அது வாழ்வுடன் தொடர்பின்றி தனியாக நிற்கிறது. அந்த சமூகம் கல்வியால் பயனடைவதில்லை. அறிவியலும் தொழினுட்பமும் மருத்துவமும் வேற்று நாடுகளிலிருந்து இறக்குமதியானவையாக தோன்றுகின்றன. உண்மையில் அவை உலகின் எல்லா மனிதர்களுக்கும் பொதுவானவை. அவை இயற்கையைப்பற்றிய மனிதக்கண்டுபிடிப்புகளின் அடிப்படையிலானவை. அவற்றால் புவியின் மக்களான நாமெல்லாருமே பயனடையவேண்டும். புவியின் மக்களனைவரும் அதற்கு பங்களிக்கலாம்.

சமூகம் பல மட்டங்களில் செயலாற்றுகிறது என்று முன்னுரையிலே சொன்னேன். தமிழ் என்ற மொழி தமிழ்ச்சமூகத்துக்கான மொழி. இந்திய ஒருமைப்பாடு என்பது இந்தியச்சமூகத்துக்கான கருத்துரு. ஆனால் அறிவியலும் தொழினுட்பமும் மருத்துவமும் உலகச்சமூகத்துக்கு சொந்தமானவை.

இந்தியக்கல்வி வேற்றுக்கருத்துகளை நமக்கு கொண்டுவருவதுபோல் தோன்றுவதற்கு அது வேற்றுமொழியில் இருப்பது ஒரு முக்கியக்காரணம். இதனால் பள்ளியில் கற்பதை நாம் நம் வாழ்வில் பயன்படுத்தவில்லை. இதற்கு ஒரு சான்றை பார்ப்போம்.

ஊட்டச்சத்துகளைப்பற்றியும் அவை எவ்வாறு உடனலத்துக்கு உதவுகின்றன என்பதைப்பற்றியும் ஒன்பதாம் வகுப்பிலோ பத்தாம் வகுப்பிலோ அறிவியற்பாடத்தில்

அனைவரும் படிக்கிறோம். சரிவிகித உணவைப்பற்றியும் படிக்கிறோம். ஆனால் அதில் பெற்ற அறிவை வாழ்வில் பயன்படுத்துகிறோமா? தாத்தாபாட்டி சொல்லித்தந்தபடி சோறாக்கியோ தோசைசுட்டோ உண்கிறோம். இதனால் கரிமநீரேட்டு என்ற சத்துப்பொருள் நம் உடலில் அதிகளவில் சேர்ந்து நீரிழிவு போன்ற நோய்களை உண்டாக்குகிறது. இதைப்போலவே, உடற்பயிற்சியின் முக்கியத்துவத்தை பள்ளியில் படித்திருந்தும் அதை வீட்டுக்கு கொண்டுவருவதில்லை.

இவ்வாறிருக்க, பள்ளியில் கற்றதை வீட்டுச்சிக்கல்களையும் சமூகச்சிக்கல்களையும் தீர்க்க மக்கள் பயன்படுத்துவார்கள் என்று எதிர்பார்க்கலாமா? இவர்கள் சமூகத்துக்கு தேவையான பொருள்களையும்

சேவைகளையும் ஆக்கும் ஆராய்ச்சியில் ஈடுபடுவார்களா? மாட்டார்கள்! அவ்வாறு சிந்திக்கும் திறனை இன்றைய கல்வி வழங்கவில்லை. இந்த கல்வியை பெறும் உங்கள் பிள்ளைகள் வேற்று நாட்டு நிறுவனங்களில் வேலைவாங்கி அங்கு வேலைக்காரரர்களாக சேர்கிறார்கள். வேற்றுநாட்டினர் ஆராய்ச்சிகளை மேற்கொண்டு புத்தாக்கங்களை புனைந்து உங்கள் ஆட்களால் உற்பத்திசெய்து உங்களிடமே விற்கிறார்கள்.

ஒரு சமூகத்தை கெடுக்கவேண்டுமெனில், அதற்கான ஒரு எளிய வழி அதன் தாய்மொழியை கல்வியிலிருந்து பிரித்துவிடுவது. அவ்வாறு பிரிக்கும்போது கல்வி வாழ்விலிருந்தும் பிரிந்துவிடுகிறது.

# பன்மொழிக்கொள்விதி

இந்தியா பலவிதமான மக்கள் வாழும் நாடு. கலைகளாலும் பண்பாடுகளாலும் மிகவும் செறிவுற்ற பன்மயமான நாடு. பல மதங்களை பின்பற்றும் மக்கள் இருக்கின்றனர். பல மொழிகளை பேசும் மக்கள் இருக்கின்றனர். முன்பு பல நாடுகளாயிருந்தவற்றை ஆங்கிலேயர் ஒன்றுதிரட்டி, பின்பு விடுதலையளித்தபோது ஒரே நாடாக விட்டுச்சென்றனர். அப்போது நாட்டை பல மாநிலங்களாக பிரித்த சான்றோர் மொழியின் அடிப்படையில் பிரித்தார்கள். ஏனெனில், கலை, மதம், பண்பாடு, மொழி ஆகியவற்றுள் மொழியே மனிதருக்கு அடிப்படையானது என்பதையும் வாழ்க்கையுடன் மிக நெருக்கமாக தொடர்புடையது என்பதையும் அவர்கள்

அறிந்திருந்தார்கள்.

இப்போது வெவ்வேறு மொழிகளைப்பேசும் மாநிலத்தவர்கள் தங்களுக்குள் எவ்வாறு தகவற் பரிமாற்றத்தை மேற்கொள்ளலாம் என்ற கேள்வி எழுகிறது. இதற்காக ஒரு பொதுமொழி வேண்டாமா? ஒரு சமூகம் மற்ற சமூகங்களுடன் அறிவை பரிமாற்றுவதே கல்வி என்றோம். அப்படியெனில், சான்றாக, தமிழ்ச்சமூகம் மற்றச்சமூகங்களுடன் அறிவை எவ்வாறு இடைமாற்றுவது? எந்த மொழியில்? இதற்காக ஒரு இணைப்புமொழி வேண்டாமா? கண்டிப்பாக வேண்டும்! தமிழ்நாட்டினருக்கு அது இந்தியாகவோ ஆங்கிலமாகவோ இருக்கலாம். ஒரு பேச்சுக்காக அது ஆங்கிலம் என்போம். ஆனால் தமிழ்நாட்டிலுள்ள அனைவருமே ஆங்கிலத்தை கற்றுக்கொள்ளவேண்டியதில்லை. ஒரு சமூகத்துக்கு மற்றொரு சமுகத்திலிருந்து

கல்வி தேவையெனில், அந்த சமூகத்திலுள்ள ஒரு சிறு குழு மற்ற சமூகத்தின் மொழியை கற்றுக்கொண்டு அங்குள்ள அறிவுச்செல்வத்தை தங்கள் மொழியில் எழுதி தம் சமூகத்துக்கு வழங்குவதே நேர்ச்சிந்தனையுள்ள எவருக்கும் தோன்றும் ஒரு எளிய தீர்வு. அதைவிடுத்து ஒரு சமூகத்தின் மக்களனைவரும் மற்றொரு சமூகத்தின் மொழியை கற்கவேண்டும் என்பது நியாயமா? மேலும், அமெரிக்காவின் அறிவைப்பெற எல்லாத்தமிழர்களும் ஆங்கிலத்தை கற்கவேண்டும் எனில், சீனாவின் அறிவைப்பெற சீனமொழியையும் அனைவரும் கற்கவேண்டுமன்றோ? நிப்போனின் அறிவைப்பெற நிப்போனியத்தையும் அனைவரும் கற்கவேண்டுமன்றோ? நேரடியான தீர்வு என்னவென்றால் தமிழும் ஆங்கிலமும்

அறிந்த ஒரு குழு அமெரிக்க அறிவை தமிழருக்கு வழங்கவேண்டும்; தமிழும் சீனமும் அறிந்த மற்றொரு குழு சீனத்தின் அறிவை வழங்கவேண்டும். தமிழும் நிப்போனியமும் அறிந்த குழு நிப்போனிய அறிவை வழங்கவேண்டும். இவ்வாறு தமிழர்கள் எல்லா சமூகங்களிலிருந்தும் அறிவை பெறலாம். தங்கள் அறிவையும் மற்றவர்களுக்கு வழங்கலாம்.

தமிழ்நாட்டில் ஆங்கிலமே கல்விமொழியாக இருக்கவேண்டும் என்று சொல்பவர்கள் ஆங்கிலம் உலகமொழி என்பார்கள். அது முற்றிலும் தவறு. (பென்னிகாக்கு 2017) ஆங்கிலம் ஆசுத்திரேலியாவிலும் இங்கிலாந்திலும் அமெரிக்க ஒன்றிய மாநிலங்களிலும் தாய்மொழி. வேறெந்த நாட்டிலும் எல்லா மக்களுக்கும் உயர்கல்வி ஆங்கிலத்திலே இருக்கவேண்டும் என்ற

கட்டாயம் இல்லை. சில நாடுகள் ஆங்கிலத்தை ஒரு பாடமாக உயர்நிலைப்பள்ளிகளில் கற்பிக்கின்றன. ஆனால், நானறிந்தவரை தாய்மொழியில் உயர்கல்வி இல்லாததும் தொடக்கக்கல்வியும் வேற்றுமொழிக்கு மாறிக்கொண்டுவருவதுமான நிலை இந்தியாவில் மட்டுமே.

இந்தியாவில் மும்மொழிக்கொள்கை இருக்கிறது. தமிழ்நாடு இந்தியை வேண்டாம் என்று சொல்லிவிட்டு இருமொழிக்கொள்கையை பின்பற்றுகின்றது. இந்தி வேற்றுமொழி எனில், ஆங்கிலம் அதைவிட வேற்றுமொழியன்றோ! இந்தியையும் சமக்கிருதத்தையும் ஒதுக்குவோர் ஆங்கிலத்தை பாய்விரித்து வரவேற்பது ஏன்? இது ஆங்கிலம் உலகமொழி என்ற தவறான கருத்தால் ஏற்பட்டது.

தமிழ்நாட்டில் இந்த இருமொழிக்கொள்கையும்

சரியாக செயலாற்றவில்லை. தமிழர்கள் தமிழிலும் ஆங்கிலத்திலும் புலமைபெற்றிருப்பதாக நாம் எதிர்பார்ப்போம். ஆனால், உண்மை என்னவென்றால் அவர்களுக்கு எந்த மொழியிலும் திறமையில்லை. தமக்கு ஆங்கிலம் தெரியும் என்று எண்ணிக்கொள்ளும் தமிழர்கள் உண்மையிலே ஆங்கிலம்பேசும் நாடுகளுக்கு செல்லும்போது அவர்களுக்கு ஆங்கிலம் அரைகுறையாகவே தெரிவதை உணர்கிறார்கள்.

நான் அவ்வாறே உணர்ந்தேன். சென்னையிலுள்ள ஐயைட்டி எனப்படும் இந்தியத்தொழினுட்பப்பயிலகம் இந்தியாவின் மிகச்சிறந்த உயர்கல்விநிறுவனங்களுள் ஒன்றாக கருதப்படுகிறது. இங்கு தரமான ஆங்கிலப்பள்ளிகளில் படித்த

மேற்குடிமக்களே பெரும்பாலும் படிக்கின்றனர். ஒரு விதிவிலக்காக நானும் அங்கு முதுவறிவியலுக்காக படித்தேன். அங்கு படித்ததால் எனக்கு நன்றாக ஆங்கிலம் தெரியும் என்று எண்ணிக்கொண்டு முனைவர்ப்பட்டத்துக்காக 1978ஆம் ஆண்டில் அமெரிக்காவுக்கு சென்றேன். அங்கு சென்றபின்பே எனக்கு ஆங்கிலம் தெரியவில்லை என்பதை அறிந்துகொண்டேன். அங்குள்ளவர்கள் பேசியது எனக்கு புரியவில்லை; நான் பேசியது அவர்களுக்கு புரியவில்லை. ஆனால் அதன்பின் சுமார் ஓராண்டுக்குள் பேசவும் புரிந்துகொள்ளவும் பழகிக்கொண்டேன்.

இதிலிருந்து தெரிவது என்னவென்றால், ஒரு மொழியை கற்றுக்கொள்ள சிறந்த வழி அந்த மொழியை பேசும் சமூகத்தில் மூழ்கியிருப்பது.

இந்தியாவில் யாரும் ஆங்கிலம்பேசும் சமூகத்தில் மூழ்கியிருக்கவில்லை. மொழித்திறமை என்பது பழக்கத்தால் வருவது. அப்படியெனில், தமிழர்கள் ஏன் ஆங்கிலத்தை பழகவியலாது? ஏனெனில், அவர்கள் தமிழ்பேசும் சமூகத்தில் மூழ்கியிருக்கிறார்கள். ஆசிரியர்களுக்கே ஆங்கிலம் அரைகுறையாகவே தெரியும். அவர்கள் வைக்கும் தேர்வுகளில் நீங்கள் நூற்றுக்குநூறு வாங்கினாலும் உங்களுக்கு ஆங்கிலம் அரைகுறையாகவே தெரியும். ஏனெனில் ஆசிரியர்களும் தமிழ்ச்சமூகத்தில் மூழ்கியிருப்பவர்களே; அவர்களுக்கும் தமிழே தாய்மொழி; ஆங்கிலம் வேற்றுமொழி.

ஆங்கிலம் தமிழிலிருந்து மிகவும் வேறுபட்ட மொழி. தமிழுக்கும் ஆங்கிலத்துக்குமிடையில் பல அடிப்படையான வேறுபாடுகள் உள்ளன. இந்த வேறுபாடுகளால், ஆங்கிலேயருக்கு

தமிழ்கற்பது எவ்வளவு கடினமோ அவ்வளவு கடினம் தமிழருக்கு ஆங்கிலங்கற்பது. தமிழ் தாய்மொழியாக உள்ளவர்கள் வேற்றுமொழியான ஆங்கிலத்தை கற்க முயன்று தோற்பதன்மூலம் தமிழிலும் திறமைபெறவில்லை.

கல்விக்கு மொழி அடிப்படையானது. ஏதாவது ஒரு மொழியில் நன்றாக பேசவும், படிக்கவும் எழுதவும் தெரியவேண்டும். கணிதம், அறிவியல், தொழினுட்பம், கலைகள் பொன்ற பாடப்பகுதிகளை அறிந்துகொள்ள மொழியறிவே அடிப்படையாகிறது. இருமொழிக்கல்வி இரண்டுங்கெட்டான். தமிழிலும் திறமையில்லை; ஆங்கிலத்திலும் திறமையில்லை. இரண்டும் கலந்த ஒரு கலப்புமொழியிலே பேசுகிறார்கள். அந்த கலப்பு மொழி உயர்கல்விக்கும் சீரிய சிந்தனைக்கும் உகந்ததன்று. இதனால்

இவர்களுள் பெரும்பான்மையோர் சிந்தனைத்திறமையில்லாமல் சொன்னதைச்செய்வோராக இருப்பது தொடர்கிறது.

இந்தியை தமிழ்நாட்டுக்கு வெளியிலுள்ளோர் திணித்ததால் அதை தமிழர்கள் எதிர்த்து வேண்டாமென்று சொல்லிவிட்டார்கள். ஆனால் ஆங்கிலத்தை தாங்களே திணித்துக்கொள்கின்றார்கள். இதனால் ஆங்கிலம்பேசும் வேற்றுநாட்டினருக்கு தமிழ்நாட்டில் கல்வியில் வெற்றிபெற்ற சிறு மனிதவளத்தை பயன்படுத்துவது வசதியாகிறது. அது மட்டுமல்லாமல், தமிழ்நாட்டின் பெரும்பான்மையான மக்களுக்கு தரமான கல்வி கிடைக்காமற்செய்கிறது.

இந்த நிலைமையில் பிள்ளைகளுக்கு அவர்களது மொழியில் பயிற்சியளிப்பது

எவ்வளவு அறிவுடைமை என்பதை நீங்களே சிந்தித்து உணர்ந்துகொள்ளுங்கள்.

# வேலைவாய்ப்பில் மொழி

படித்தவர்கள் என்பதன் உண்மையான பொருள் அறிவுபெற்றோர் என்பது. ஆனால், தமிழ்நாட்டில் ஆங்கிலமறிந்தோரே படித்தவர்கள் என்ற தவறான கருத்தும் அதனால் அவர்களுக்கே வேலைவாய்ப்பு என்ற நிலையும் இருக்கிறது. இது அவர்களது தாய்மொழியான தமிழை முதலில் கல்வியிலிருந்தும் பிறகு அதனால் வாழ்க்கையிலிருந்தும் பிரித்துக்கொண்டிருக்கிறது. ஆங்கிலத்தில் கற்பதே உயர்வானது என்பதும் ஆங்கிலத்தில் கற்பிக்கும் தனியார்ப்பள்ளிகளே சிறந்த கல்வியை வழங்குகின்றன என்பதுமான கருத்துகளும் தமிழ்நாட்டில் நிலவுகின்றன. இதனால் ஆங்கிலவழி கற்றோருக்கே

வேலைவாய்ப்புகள் அதிகம். ஆங்கிலம் தேவையில்லாத பணிகளில், முக்கியமாக தமிழ் தெரிந்திருக்கவேண்டிய பணிகளில், இருப்போருக்கும் தமிழ் தெரியவில்லை. அவர்கள் பேசுவதில் ஆங்கிலச்சொற்கள் கலந்திருப்பதை மட்டும் நான் சொல்லவில்லை. அவர்கள் தமிழை முறையாக கற்கவில்லை என்பதையும் தமிழிலக்கணம் அவர்களுக்கு தெரியவில்லை என்றும் சொல்கிறேன்.

வானலையிலும் தொலைக்காட்சிகளிலும் திரைப்படங்களிலும் தமிழ்மக்களுக்கான சேவைகளில் அறிவிப்பாளர்களும் பேச்சாளர்களும் பேசுவதை கேட்கும்போது, அவர்களுக்கு பேசுவதில் பயிற்சியில்லை என்பது தெளிவாகிறது. பேச்சுத்தமிழ் என்ற பெயரில் கொச்சையாக பேசுகிறார்கள். தாம் சொல்லவருவதை சுருக்கமாகவும் தெளிவாகவும் சொல்ல அவர்களுக்கு

தெரியவில்லை. ‘வந்து... ‘ என்று இழுக்கிறார்கள்; ஏனென்றால் என்று சொல்லவேண்டிய இடத்தில் ‘இது ஏன் அப்படீன்னு கேட்டீங்கன்னா’ என்கிறார்கள்; மேலும் பல. இவர்கள் தாங்கள் சொல்லவேண்டியதை தாளில் எழுதிவைத்தோ மனத்துள் ஒத்திகைபார்த்தபின்போ பேச பெரும் வாய்ப்பு இருக்கிறது. எனினும் அதை அவர்கள் பயன்படுத்தவில்லை. தமிழ்நாட்டில் சில ஆண்டுகள் வசித்தபின் மீண்டும் அமெரிக்காவுக்கு வந்த நான் இங்கு தொலைக்காட்சியில் ஒரு சமையற்காட்சியை பார்த்து வியந்தேன். அந்த காட்சியை நடத்தும் பெண்மணி சமைத்துக்கொண்டே அழகான சரியான ஆங்கிலத்தில் பேசி மிகத்தெளிவாக அவர் செயல்களை விளக்கிக்கொண்டே சென்றார். நமக்கு ஏன்

இவ்வாறு தமிழில் பேசத்தெரியவில்லை என்று எனக்கு வெட்கமாயிருந்தது. அமெரிக்கக்கல்வி அவர்களை அவ்வாறு பேச அணியமாக்கியிருக்கிறது. இந்தியக்கல்வி அந்த பயிற்சியை வழங்கவில்லை.

தமிழில் வெளியாகும் நாளிதழ்களிலும் பருவவிதழ்களிலும் மோசமான இலக்கணப்பிழைகளும் தெளிவின்மையும் மலிந்துகிடக்கின்றன. வெளிநாட்டு நிறுவனங்களின் வேலைக்காக மாணவர்களை நன்கு அணியமாக்கும் பள்ளிகள் இவ்வாறான வேலைகளுக்கு ஏன் அணியமாக்கவில்லை? நல்ல தமிழில் எழுதவும் பேசவும் ஏன் பயிற்சியளிக்கவில்லை?

ஒருமுறை நான் ஆங்கிலப்பள்ளியில் படிக்கும் ஒரு பையனிடம் தமிழருக்கு ஏன் ஆங்கிலம் தெரியவேண்டும் என்று

கேட்டதற்கு, ‘தமிழ் என் தாய்மொழி. அதுதான் எனக்கு தெரியுமே. ஆங்கிலம் எனக்கு தெரியாது. அதனால் படிக்கிறேன்’ என்றான். இதே ஏரணப்படி, அமெரிக்காவில் யாரும் பள்ளியில் ஆங்கிலத்தை படிக்கக்கூடாது; அவர்கள் தங்களுக்கு தெரியாத தமிழையே படிக்கவேண்டும். எல்லாப்பாடங்களையும் தமிழிலே படிக்கவேண்டும். ஆனால், உண்மையில், அமெரிக்காவில் எல்லா மாணவர்களும் ஆங்கில இலக்கணம், இலக்கியம், எழுத்துநடை ஆகியவற்றை முறையாக கற்று நான் மேற்சொன்ன கேள்வி, வாசிப்பு, பேச்சு, எழுத்து ஆகியவற்றில் திறன்களை தொடக்கப்பள்ளியில் பெற்று உயர்நிலைப்பள்ளியில் மேம்படுத்திக்கொள்கிறார்கள். அந்த மொழித்திறனின் அடிப்படையிலே உயர்கல்வியை பெற்று ஆராய்ச்சியிலும்

சிறப்பாக ஈடுபடுகிறார்கள். இந்தியாவில் இன்று விற்பனையாகும் கணினிகள், அலைபேசிகள், தொலைக்காட்சிகள், துணியலசிகள், தட்டலசிகள், வளிப்பதனிகள் போன்ற மற்றப்பலவும் அவ்வாறான அமெரிக்க மக்கள் தங்கள் ஆராய்ச்சியால் வடிவமைத்தவையே.

மற்றொருமுறை என் உறவினரின் மகள் என்னிடம் வந்து தான் ஒரு பள்ளியில் தமிழாசிரியைவேலைக்கு விண்ணப்பிக்க விரும்புவதாக சொல்லி அதற்கான விண்ணப்பக்கடிதத்தை ஆங்கிலத்தில் எழுதித்தருமாறு கேட்டாள். நான் அவளுக்கு தெரிந்தவகையில் எழுதுமாறு சொல்லி, நான் பார்த்து திருத்தி மேம்படுத்தித்தருகிறேன் என்றும் சொன்னேன். மறுத்துவிட்டாள். காரணம் என்னவென்றால், அவளுக்கு ஒருவரிகூட

ஆங்கிலத்தில் எழுதத்தெரியவில்லை. தமிழாசிரியையாக விண்ணப்பிக்க தமிழில் எழுதலாமே என்றேன். அதற்கு அவள் ‘ஆங்கிலத்தில் எழுதினாலே மதிப்பாயிருக்கும், மாமா’ என்றாள். தமிழாசிரியர்வேலைக்கும் வேறொருவரிடம் எழுதி வாங்கியாவது ஆங்கிலத்தில் விண்ணப்பிப்பது மதிப்பாம்.

ஒரு பக்கம் தமிழ்வழி படித்தால் வேலை கிடைக்காது என்கிறார்கள். மறுபக்கம் தமிழ் தேவைப்படும் இடங்களிலும் தமிழ்தெரிந்தவர்களை வேலைக்கு அமர்த்துவதில்லை. தமிழ்நாட்டின் தொலைக்காட்சி, வானலை, நாளிதழ், பருவவிதழ், பதிப்பகங்கள் போன்ற இடங்களில் தமிழை நன்கறிந்தவர்கள் தேவையில்லையா? தமிழில் படித்தால் எப்படி வேலையில்லாமல் போய்விடும்?

தமிழ்மக்களுக்கு எத்தனையோ சேவைகள் தேவைப்படுகின்றன. அத்தனையையும் வழங்க தமிழறிவு தேவையில்லையா? தமிழ்நாட்டில் பிறந்து வளர்ந்து தமிழ்மக்களுக்கு மருத்துவச்சேவையை வழங்க விரும்பும் ஒருவர் ஏன் ஆங்கிலத்தில் படிக்கவேண்டும்? தமிழ்நாட்டில் பிறந்து வளர்ந்து தமிழ்மக்களுக்கு வழக்குரைஞராக பணியாற்ற விரும்பும் ஒருவர் ஏன் ஆங்கிலவழி படிக்கவேண்டும்? ஏனென்றால், இந்த தொழில்களை கற்பிக்கும் ஆசிரியர்களுக்கு தமிழ் தெரியாது. இதற்கான பாடநூல்கள் தமிழில் இல்லை என்று சாக்குச்சொல்வார்கள். தமிழில் இல்லாவிட்டால் அவற்றை உருவாக்குவது யார்பொறுப்பு? அது இந்த கல்வியாளர்களின் பொறுப்பன்றோ! கல்வியின் கொள்விதிகளை உருவாக்கும் அரசதிகாரிகளின்

பொறுப்பன்றோ! இவர்கள் இந்த பொறுப்பை கைவிட்டதன் பொருள் என்ன? இவர்களுக்கு தமிழ்மக்கள்மீது அக்கறையில்லை! முற்காலத்தில் சாதியால் ஏற்றத்தாழ்வுகளை உண்டாக்கியதுபோல் இப்போது மொழியால் உண்டாக்குகிறார்கள். ஆங்கிலமறிந்த குடும்பங்களின் பிள்ளைகளை மேலாகவும் தமிழ்க்குடும்பங்களின் பிள்ளைகளை இழிவாகவும் கருதுகின்றனர்.

# மொழியும் சமூகமும்

நான் இந்தியாவில் வசிக்கும்போது, பணவெந்திரத்தில் பணமெடுப்பதுண்டு. அப்போது யாராவது ஒருவர் என்னிடம் தன் அட்டையை நீட்டி பணமெடுத்துக்கொடுக்கும்படி கேட்பதுண்டு. இவர்களுள் சிலருக்கு எழுதப்படிக்க தெரியாமலிருக்கலாம். வேறு சிலருக்கு பணவெந்திரத்தின் இடைமுகம் ஆங்கிலத்தில் இருப்பதால் அதை செயலாக்க தெரியாதிருக்கலாம். இரண்டுமே ஒரு சமூகத்துக்கு நன்றன்று. சமூகத்தின் எல்லா உறுப்பினர்களுக்கும் எழுதப்படிக்கும் அடிப்படைக்கல்வி கிடைக்கவேண்டும். கல்வியும் சேவைகளும் மக்களின் மொழியில் இருக்கவேண்டும்.

மக்களுக்குத்தேவையான

அன்றாடச்சேவைகள் வேற்றுமொழியில் வழங்கப்படும்போது அவை மக்களை சென்றடைவதில்லை. தம் சமூகத்தின் நிகழ்வுகளை அவர்களால் புரிந்துகொள்ள இயலவில்லை. மக்கள் சமூக நடப்புகளை புரிந்துகொள்வதும் கல்வியின் ஒரு பகுதியே. கல்வி என்பது வாழ்க்கைமுழுவதும் தொடர்வது.

தமிழ்நாட்டில், சட்டத்தைப்பற்றி யாராவது பேசினால், ‘ஆ, பெரிய சட்டம்பேச வந்துவிட்டார்’ என்பார்கள். அதாவது சட்டம் மக்களின் வாழ்விலிருந்து விலகி நிற்கிறது. ஏட்டிலுள்ள சட்டம் மக்கள் தாங்களாகவே பின்பற்றும் விதிமுறைகளிலிருந்து வேறுபட்டது. இதை ஊர்திகளை ஓட்டும் ஓட்டுநர்கள் பின்பற்றும் சாலைவிதிகளில் எளிதாக காணலாம். நீதிமன்றங்கள் ஆங்கிலத்தில் செயலாற்றும்விதம்

மக்களுக்கு புரிவதில்லை. தமிழ்நாட்டில் எத்தனை சட்டவல்லுநர்கள் இருக்கிறார்கள்? பெருமைமிகு நீதிபதிகள், வழக்குரைஞர்கள், வழக்கறிஞர்கள், ஆலோசகர்கள் ஆகியோருள் ஒருவருக்காவது சட்டத்தை தமிழில் எழுதவேண்டுமென்று தோன்றவில்லை! ஏன்? அவர்களுக்கு மக்கள்மீது அக்கறையில்லை. தமிழ் சட்டத்துக்கு ஏற்ற மொழியன்று என்பது இவர்கள் சொல்லும் ஒரு சாக்கு. உண்மை என்னவென்றால், இவர்களுக்கு தமிழ் தெரியாது. அதை அவர்கள் ஒப்புக்கொள்வதில்லை. தாங்கள் படித்த மேதைகள் என்பதும் பொதுமக்களின் மொழியான தமிழ் தங்களுக்கு கீழானது என்பதும் இவர்களது எண்ணமோ! இவர்கள் தங்களை சட்டமேதைகள் என்று சொல்லிக்கொள்ள வெட்கப்படவேண்டும். மக்களுக்கு உதவாத சட்டம் இருந்தாலென்ன,

செத்தாலென்ன!

இந்தியாவில் நான் கண்டவரை, கல்லூரிக்கு சென்று படித்தவர்களுக்கும் உடற்கூறியலைப்பற்றிய அடிப்படை அறிவு இல்லை. இக்கால மருத்துவம் வெளிநாட்டு மருத்துவம் என்பதும் நாட்டு மருத்துவமே சிறந்த மருத்துவம் என்பதுமான கருத்து பரவலாக நிலவுகிறது. உண்மை என்னவென்றால், இந்தியாவில் நாட்டு மருத்துவம் என்றழைப்பதைப்போன்ற மருத்துவமே பழங்காலத்தில் எல்லாவிடங்களிலும் இருந்தது. அதிலிருந்து படிப்படியாக வளராகி படிமலர்ந்து வந்திருப்பதே நாம் இந்தியாவில் இப்போது ஆங்கில மருத்துவம் என்று அழைப்பது. இக்கால மருத்துவத்தை ஆங்கிலத்தில் படிப்பதால் அதை வேற்று மருத்துவமாக காண்கிறோம்.

வங்கியம், சட்டம், மருத்துவம், அறிவியல் போன்ற சேவைகள் மக்களின் மொழியில் இல்லாததால், மக்கள் அவற்றிலிருந்து விலகி நிற்கின்றனர். அவை தங்களுக்கானவையாக அவர்களுக்கு தோன்றுவதில்லை. மேல்மட்டத்தினர் பொதுமக்களை சேவைகளிலிருந்து விலக்கிவைக்க விரும்பினால் அந்த சேவைகளை மக்கள்மொழியில் வழங்காமல் தாங்கள் அறிந்த வேறொரு மொழியில் வழங்குவது சிறந்த வழி. முன்பு அந்தணர்கள் இதை சமக்கிருதத்தில் செய்துகொண்டிருந்தனர். இப்போது எல்லாச்சாதியையும் சேர்ந்த ‘படித்தவர்கள்’ அதை ஆங்கிலத்தில் செய்துகொண்டிருக்கின்றனர்.

## ஆங்கில மோகம்

கல்வி ஆங்கிலத்தில் இருப்பதாலும் ஆங்கிலமறிந்தோர் மேன்மக்களாக கருதப்படுவதாலும், ஆங்கிலம் தெரியாதவர்களும் அரைகுறையாக தெரிந்தவர்களும் தங்களுக்கு ஆங்கிலம் தெரிவதாக காட்டிக்கொள்ள விரும்புகிறார்கள். இதனால் மக்களுக்கு தமிழிலோ ஆங்கிலத்திலோ உண்மையான திறமை இல்லாமற்போகிறது. மொழித்திறமை இல்லாததால், சமூகத்தின் கற்றலியன்மை குறைவாயிருக்கிறது.

இந்த ஆங்கில மோகத்தால் இளைஞர்கள் தமிழில் பேசுவதையும் எழுதுவதையும் இழிவாக கருதுகிறார்கள். கல்வி இதுபோன்ற போக்குகளை மாற்றவேண்டும். ஆசிரியர்கள் நல்ல தமிழை கற்றுக்கொண்டு அதை

மாணவர்களுடன் புழங்கவேண்டும். ஆசிரியர்கள் முன்னோடிகளாயிருந்து ஆங்கில மோகத்தை களையவேண்டும். நல்ல தமிழில் பேசுவதற்காகவும் எழுதுவதற்காகவும் இளைஞர் பெருமைப்படும் நிலைமை வரவேண்டும். அந்தக்காலம் வரும்போதே கல்வி மேம்படும்.

மேன்மக்கள் வெளிநாடுகளிலிருந்து வரும் அலைபேசிகள், கணினிகள், தொலைக்காட்சிகள், துணியலசிகள் போன்ற பொருள்களை பல பத்தாயிரம் உருவா விலைக்கு வாங்குகிறார்கள். ஆனால், அருகிடத்தில் பால்விற்பவர் பாலின் விலையை இலிட்டருக்கு ஐந்துருவாயால் ஏற்றவேண்டியதிருந்தால் இது அவர்களுக்கு பிடிப்பதில்லை. பாற்காரன் கொள்ளையடிப்பதாக எண்ணுகிறார்கள். இது பால்விற்கும் தொழிலை அவமதிப்பதாக

# 4. கல்வி வணிகமாதல்

## கல்வி அரசின் பொறுப்பு

கல்வி என்பது பெற்றோரிடமிருந்து பிள்ளைகள் அறிவுபெறுவது மட்டுமன்று. அது சமூகத்தின் வெவ்வேறு பகுதிகளிடையிலும் அறிவை கடத்துகிறது என்று 2.8ஆம் பகுதியில் பார்த்தோம். அப்படியெனில், ஊர்நன்மைக்காக ஒரு கிணற்றை தோண்டுவதுபோல், கல்வியும் ஒரு சமூகச்செயல். சமூகத்தை மேம்படுத்தும் நோக்கத்துடன் சமூகத்தின் எல்லாப்பிள்ளைகளுக்கும் அறிவூட்டி அவரவரது இயன்மைக்குத்தக்க அவரது நலனுக்கும் வெவ்வேறு மட்டங்களிலுள்ள சமூகங்களின் நலனுக்கும் பங்களிக்குமாறு பண்படுத்துவதே கல்வியின்

வேலை. இதனால், அறிவுபெறுவது எல்லாப்பிள்ளைகளின் உரிமையும் பெரியவர்களானபின் அந்த கல்வியால் சமூகத்துக்கு பங்களிப்பது எல்லாருடைய கடமையும் ஆகிறது.

சமூகம் அருகிட மட்டத்திலும் மாநில மட்டத்திலும் நாட்டு மட்டத்திலும் உலக மட்டத்திலும் செயலாற்றுகிறது. ஒரு சமூகத்தின் கல்வி அந்த சமுகத்தின் அறிவை கற்பிப்பதுடன், மற்ற சமூகங்களிலிருந்து தேவையானவற்றை பெற்று வழங்கவேண்டும். சமூகத்தின் விழுமங்களிலிருந்து நன்னெறியற்றவற்றை தவிர்த்து நன்னெறியானவற்றை புகட்டவேண்டும். ஒரு சமூகத்துக்கு கல்வியளிக்கும் ஆசிரியர்களும் கல்வியதிகாரிகளும் மாநிலமட்டத்திலும் நாட்டு மட்டத்திலும் கல்விக்கொள்விதிகளை உருவாக்கும் அரசதிகாரிகளும் சமூகத்தின்

நலனுக்கான இந்த கொள்கைகளை பின்பற்றவேண்டும்.

மாநில மட்டத்திலும் நாட்டு மட்டத்திலும் சமூகச்செயல்களை செய்யவே மக்கள் அரசின் நிற்பாளர்களை தேர்ந்தெடுக்கின்றனர். கல்வி எனும் சமூகச்செயல் அரசின் முக்கியமான பொறுப்பு.

கல்வியுரிமை அடிப்படையான மனிதவுரிமையாக உலகெங்கும் கருதப்படுகிறது. பல நாடுகளும் பொருளாதார வேறுபாடின்றி எல்லாப்பிள்ளைகளுக்கும் கல்வியை இலவசமாக வழங்குவதற்கான சட்டங்களை இயற்றியிருக்கின்றன. இந்தியாவில் பொருளாதார வேறுபாடு மட்டுமின்றி, சாதி, மதம், வாழிடம் போன்ற மற்றப்பல வேறுபாடுகளையும் கருதவேண்டும்.

அவ்வாறான எந்த வேறுபாடுமின்றி

இந்தியாவின் எல்லா பிள்ளைகளுக்கும் கல்வி கிடைக்கவேண்டும் என்பதற்காக கல்வியுரிமைச்சட்டம் என்ற சட்டம் அரசிலக்கணத்தில் எண்பத்தாறாம் திருத்தமாற்றமாக 2002ஆம் ஆண்டில் புகுத்தப்பட்டது. இந்த சட்டத்தை ‘இலவசமான கட்டாயக்கல்வி’ என்றும் சொல்வதுண்டு. ஆனால், கட்டாயம் என்ற சொல்லை நாம் சரியாக புரிந்துகொள்ளவேண்டும்.

எல்லாப்பிள்ளைகளும் கட்டாயமாக பள்ளிக்கு செல்லவேண்டும் என்று இந்த சட்டம் சொல்லவில்லை. இந்தியாவில், கல்வியை விரும்பும் எந்தப்பிள்ளைக்கும் அரசு கட்டாயமாக கல்வியை வழங்கவேண்டும் என்றே சட்டம் சொல்கிறது. கட்டாயம் அரசின்மீது; பிள்ளைகளின்மீதோ பெற்றோர்களின்மீதோ இல்லை. சாதியின் அடிப்படையிலோ வாழிடத்தின்

அடிப்படையிலோ கல்வி மறுக்கப்படலாகாது. அரசு வழங்கும் இந்த கல்வி இலவசமாகவும் இருக்கவேண்டும்.

பெற்றோர் விரும்பினால் வேறுவிதமான கல்வியை தம் பிள்ளைகளுக்கு வழங்கலாம். சான்றாக, பணஞ்செலுத்தி தனியார்க்கல்வியை வழங்கலாம். வீட்டிலே வைத்து பெற்றோரே கல்வியளிக்கலாம். ஆனால், அவ்வாறு வழங்க இயலாதவர்களும் வழங்க விரும்பாதவர்களும் தம் பிள்ளைகளை அனுப்புவதற்கான பள்ளிகள் எல்லாவிடங்களிலும் எல்லாருக்கும் இருக்கவேண்டும். மலைப்பகுதிகளில் வாழ்வோர், காடுகளில் வாழ்வோர், பழங்குடியினர், கீழ்ச்சாதியினர், பிச்சைக்காரர்கள் உட்பட்ட எல்லாருக்கும் இந்த வசதி கிடைக்கவேண்டும். இதுவே இந்த சட்டத்தின் உள்ளுரை.

சட்டம் அவ்வாறு சொல்கிறது. ஆனால் நடைமுறையில் என்ன நிகழ்கிறது?

ஆண்டு

2014-15

2015-16

2016-17

அரசுப்பள்ளிகளில் பதிவுசேர்தல் (1-12)

144,194,283

143,152,245

137,222,799

தனியார்ப்பள்ளிகளில் பதிவுசேர்தல் (1-12)

79,991,560

82,421,710

80,582,804

பதிவுசேர்தலில் வேறுபாடு

64,202,723

60,730,535

56,639,995

தனியார்நூற்றுவீதம்

35.7%

36.5%

37.0%

மாநிலங்களவையின் அமர்வு 246 (2018) என்ற அறிக்கை வழங்கிய தரவுகள், அட்டவணையில் காட்டியபடி, தனியார்ப்பள்ளிகளின் பதிவுசேர்தலில் ஒரு அதிகரிக்கும் போக்கு இருப்பதை காட்டுகின்றன. அரசுப்பள்ளிகளில் பதிவுசேர்தல் குறைந்துவருவதையும் அதே நேரத்தில் தனியார்ப்பள்ளிகள் பெருமளவில் புதிய மாணவர்களை பெறுவதையும் வேறு பல அறிக்கைகளும் காட்டுகின்றன. இதை நாம் நடைமுறையிலும் காண்பதால் அந்த புள்ளிவிவரங்களை நான் பட்டியலிடவில்லை.

இந்த தரவுகளெல்லாம் காட்டுவது என்னவென்றால், கடந்த சில பத்தாண்டுகளில் மாணவர்களை தனியார்ப்பள்ளிகள் விரைவாக கவர்கின்றன. பதிவுசேர்தல்களை முற்றிலுமாக தனியார்ப்பள்ளிகள் விழுங்கிவிடும்வரை இந்த போக்கு வளரும் என்றே தோன்றுகிறது.

முற்போக்குநாடுகளின் திசை இதற்கு மாறானது. அங்கு, 84% மாணவர்கள் பொதுப்பள்ளிகளுக்கும் 12% அரசுசார்ந்த தனியார்ப்பள்ளிகளுக்கும் 4% சாராத தனியார்ப்பள்ளிகளுக்கும் (பொவொவபு 2016) செல்கிறார்கள்.

கல்வியால் மேன்மையடைவது பொதுமக்களின் சமத்துவ உரிமையாக இல்லாமல், இந்தியாவில் கல்வி ஒரு தனியார்ச்சொத்தாக மாறுகிறது. தனியார்ப்பள்ளிகள் வசதியான

குடும்பங்களிலுள்ள மாணவர்களுக்கே எட்டும் உயரத்தில் உள்ளவை. ஆனால், வசதிகுறைந்த பெற்றோரும் தங்கள் வாழ்க்கையின் மற்ற தேவைகளை விட்டுக்கொடுத்தும் எஞ்சியுள்ள உடைமைகளை விற்றும் தங்கள் மக்களை தனியார்ப்பள்ளிகளுக்கு அனுப்புகிறார்கள். அதுவும் இயலாத ஏழைமக்களே தம் பிள்ளைகளை பொதுப்பள்ளிகளுக்கு அனுப்புகிறார்கள்.

எல்லார்க்கும் இலவசமான கல்வியை அரசு கட்டாயமாக வழங்கவேண்டும் என்று சட்டம் சொல்லும்போது, பொதுமக்கள் அந்த சேவையை பயன்படுத்தாமல் தனியார்க்கல்விக்கு ஈர்க்கப்படுவது ஏன்? இதற்கு பல காரணங்கள் இருக்கலாம். அவற்றை ஒவ்வொன்றாக கருதுவோம்.

தனியார்ப்பள்ளிகளில் ஆங்கிலத்தில் படிக்கும்

பிள்ளைகளுக்கு வேலைவாய்ப்பு அதிகம் என்ற பொதுவான ஒரு கருத்து நிலவுவது ஒரு காரணம். இது உண்மையாகவே இருப்பினும் அதை மாற்ற முயலவேண்டுமேயன்றி அதற்கு துணைபோகலாமா? எவ்வகையான பள்ளியில் படித்தாலும் ஒரே விதமான பாடங்களையே படிக்கிறார்கள். அறியியன்மையும் உள்ளூக்குமுள்ள பிள்ளைகள் நன்றாக படித்து முன்னேறுவார்கள். ஆங்கிலத்தில் படிப்பது வெளிநாட்டுக்குச்செல்ல உதவும் என்ற கருத்தும் ஒரு துணைக்காரணமாகலாம். இது உண்மையன்று. ஆங்கிலம் பேசும் நாடுகளில் பணியாற்ற ஆங்கிலத்தை ஒரு மொழியாக அறிந்திருப்பது உதவலாம்; ஆனால் எல்லாப்பாடங்களையும் ஆங்கிலவழி படிப்பது தேவையில்லை.

பொதுப்பள்ளிகளில் வசதிகளும் பாதுகாப்பும்

இல்லை என்றும், ஆசிரியர்கள் தம் பிள்ளைகள்மீது அக்கறைசெலுத்துவதில்லை என்றும் சில பெற்றோர் சொல்கின்றனர். இதையும் நாம் மாற்ற முயலவேண்டுமேயன்றி மேலும் மோசமாக்கக்கூடாது. அரசு தன் வேலையை சரியாக செய்யாவிட்டால் அரசை தட்டிக்கேட்கும் வழிகளை நாம் சிந்திக்கவேண்டும். அரசை தேர்ந்தெடுப்பது மக்களின் கையிலே இருக்கிறது என்பதை மறந்துவிடக்கூடாது.

அரசுப்பள்ளிகளில் ஏழைப்பிள்ளைகளும் குறைந்த சாதிப்பிள்ளைகளுமே படிக்கிறார்கள் என்றும் அவர்களுடன் சேர்வதால் தம் பிள்ளைகள் கெட்டுப்போய் விடுவார்கள் என்றும் சிலர் அஞ்சுவதாக தோன்றுகிறது. இவர்களுக்கு தம் பிள்ளைகளின்மீது அவ்வளவு நம்பிக்கை! ஏன், அந்தப்பிள்ளைகள் இவர்களுடன் சேர்வதால்

நல்லவர்களாகக்கூடாதா? தம் பிள்ளைகளை உயர்ந்தவர்களாகவும் மற்றப்பிள்ளைகளை தாழ்ந்தவர் களாகவும் கருதுவது சமூகக்கேடு. இவ்வாறு பிரிவினைக்கு உட்பட்டு புறக்கணிக்கப்பட்ட ‘அந்த’ப்பிள்ளைகள் வெறுப்புடன் வளர்வார்கள். ஒரு மனிதவெறுப்புச்சமூகம் உண்டாகும். உங்கள் பிள்ளை பெரியவராக வளர்ந்தபின் ஒருநாள் சாலையில் அடிபட்டுக்கிடந்தால் ‘அந்த’ மனிதர் உங்கள் பிள்ளையின் கழுத்திலும் கையிலும் கிடப்பதை கழற்றிக்கொண்டு ஓடுவார். இவ்வாறான சமூகத்திலா உங்கள் பிள்ளைகள் வாழும்படி விட்டுச்செல்ல விரும்புகிறீர்கள்?

இந்தியா பன்மயம் மிகுந்த நாடு. மொழி, பண்பாடு, கலைகள், பழக்கவழக்கங்கள் முதலியவற்றால் வேறுபடும் பலவகையான மக்கள் வாழும் நாடு. இந்த பன்மயத்தை பெருமையாக கருதி கொண்டாடலாம்;

பிரிவினைகளுக்கு காரணமாகவும் கருதலாம். இவையெல்லாம் இயல்பாக மக்களிடையில் இருக்கும் வேறுபாடுகள். ஆனால், சாதி என்பது செயற்கையாக மக்களிடையில் ஏற்றத்தாழ்வுகளை ஏற்படுத்துகிறது. இது மக்களின் இயல்பான பண்புகளிலிருந்து உருவாகாமல் மக்களே உண்டாக்கியதால் இதை செயற்கையானது என்கிறேன். மதம் கொள்கையளவில் ஏற்றத்தாழ்வுகளை உண்டாக்காவிட்டாலும் இதுவும் மக்களிடையில் செயற்கையான பிரிவினையை உண்டாக்குகிறது. மேலும் பொருளாதாரம், வாழிடம் (நகரமும் சிற்றூரும்), வாழ்தொழில் போன்றவற்றிலுள்ள வேறுபாடுகளையும் ஏற்றத்தாழ்வுகளாக பெரும்பான்மையோர் கருதுகிறார்கள். வேறுபாடுகளை நாம் போற்றலாம். வேறுபட்ட மனிதர்களைப்பற்றிய அறியார்வம்

சுவையானது. ஆனால் ஏற்றத்தாழ்வுகள் சமூகக்கேடானவை; மனிதவெறுப்பான சமூகத்தை உண்டாக்குகின்றன.

ஒரு மனிதவிருப்பச்சமூகத்தை உருவாக்குவது கல்வியின் நோக்கம். தனியார்க்கல்வி இதற்கு நேர்மாறான விளைவை தருகிறது. தனியார்க்கல்வியின் நிகர விளைவு வசதியான குடும்பங்களிலுள்ள பிள்ளைகளை பிரித்தெடுத்து அவர்களுக்கு தாம் மேன்மக்கள் என்ற பெருமையையும் அந்த பள்ளிகளில் படிக்கவியலாத ஏழைப்பிள்ளைகளுக்கு ஒரு தாழ்வுமனப்பான்மையையும் உண்டாக்குவதே.

உங்கள் பிள்ளைகளை தனியார்ப்பள்ளியிலிருந்து பொதுப்பள்ளிக்கு இன்றே மாற்றவேண்டும் என்பதற்காக நான் இவற்றை சொல்லவில்லை. உங்கள் சிந்தனையை தூண்டுவதே என் நோக்கம்.

முதலில் ஒரு விழிப்புணர்ச்சி சமூகத்தில் ஏற்படவேண்டும். கொள்கையளவில் இந்த கருத்துகளை ஒப்புக்கொள்வது முதற்படி. அதன்பின் சமூகத்தில் படிப்படியான மாற்றங்கள் ஏற்பட வாய்ப்பிருக்கிறது.

## வருவிளைவுகளை ஒப்பிடல்

தனியார்ப்பள்ளிகளில் கல்வியின் வருவிளைவுகள் பொதுப்பள்ளிகளைவிட அதிகமா குறைவா என்பது இந்தியாவில் மட்டுமல்லாமல் அவொமா (அமெரிக்க ஒன்றிய மாநிலங்கள்) போன்ற பல நாடுகளிலும் கேட்கப்படும் கேள்வி. இந்தியாவில் பொதுமக்களின் உணர்வு தனியார்ப்பள்ளிகளுக்கு சாதகமாக இருப்பது தெளிவு. ஆனால் இந்த உணர்வுக்கு எந்த ஆதாரமும் இல்லை. இந்த இருவிதமான பள்ளிகளிடையில் வருவிளைவுகளில் பொருளுள்ள வேறுபாடு இல்லை என்பதையே பல ஆராய்ச்சிகளின் அறிக்கைகள் வெளியிடுகின்றன. (தேசாய், 2008)

தனியார்ப்பள்ளிகளுக்கு பிள்ளைகளை அனுப்பும் பெற்றோர் பெரும்பாலும்

வசதியானவர்களாகவும் படித்தவர்களாகவும் இருக்கிறார்கள். இவர்கள் கல்வியில் அதிக மதிப்பை வைத்திருப்பதால் பிள்ளைகள் பள்ளிகளில் கடினமாக உழைக்க ஊக்குவித்து வீட்டுப்பாடங்களிலும் உதவுகிறார்கள். எனவே, தனியார்ப்பள்ளிமாணவர்களின் கற்றலில் மேம்பாடு இருந்தால் அது கல்வியின் தரத்தால் இல்லாமல் பெற்றோரின் தூண்டுதலால் இருக்கலாம். பெற்றோரின் கல்வித்தகுதி, நகரத்தில் வசித்தல், வீட்டு வருமானம், வாழ்க்கைத்தரம் ஆகியவற்றுக்கும் போட்டித்தேர்வுகளில் மாணவர்கள் பெறும் மதிப்பெண்களுக்கும் நேரடியான தொடர்பு இருக்கிறது.

தனியார்ப்பள்ளிக்கும் பொதுப்பள்ளிக்குமான வேறுபாடு மாநிலங்களிடையில் வேறுபடுகிறது. பீகார், உத்தரப்பிரதேசம், உத்தரகாண்டு, மத்தியப்பிரதேசம்

போன்ற மாநிலங்களில் தனியார்க்கல்வி பொதுக்கல்வியைவிட சற்று சிறக்கிறது. பொதுவாகவே, இந்த மாநிலங்களில் பொதுநிறுவனங்கள் மோசமாக செயலாற்றுபவை. இவை இந்தியாவின் ஏழைமாநிலங்கள் என்பதும் நோக்கத்தக்கது. அரியானா, தமிழ்நாடு போன்ற வேறு சில மாநிலங்களில் தனியார்ப்பள்ளிகளில் பதிவுசேர்தல் அதிகம்; ஆனால் பொதுப்பள்ளிமாணவர்கள் அதிக திறமையுள்ளவர்கள்.

இவ்வாறு, இந்தியாவில் தனியார்ப்பள்ளிகள் மேலானவை என்பது பொய்க்கூற்றாகிறது. நாட்டளவில் தனியார்ப்பள்ளிகளில் படிக்கும் மாணவர்கள் சற்று மேலோங்கினாலும் அது பெற்றோரின் கல்வியால் உண்டானது. தமிழ்நாடுபோன்ற மாநிலங்களில் பொதுப்பள்ளி சிறக்கிறது.

மேற்சொன்னது இந்தியாவுக்குள் இருவிதமான பள்ளிகளிடையும் மாநிலங்களிடையுமான வேறுபாடு. ஆனால், உலகின் மற்ற நாடுகளின் ஒப்பீட்டில் இந்தியா எங்கிருக்கிறது என்று பார்ப்போமா? 2009ஆம் ஆண்டு அனைத்துலக மாணவர்மதிப்பாய்வுக்கான பணித்திட்டம் (அமாமப) என்ற மதிப்பாய்வில் 74 நாடுகளில் இந்தியா 72ஆம் இடத்தில் வந்தது. வெட்கக்கேடு! 2009ஆம் ஆண்டுக்குப்பின் இந்தியா அந்த மதிப்பாய்வில் பங்கேற்கவில்லை.

இந்தியாவின் மாணவர்கள் எழுத்தறிவிலும் எண்ணறிவிலும் மோசமாயிருக்கின்றனர். தனியாரும் பொதுத்துறையும் ஒரே படகில் பயணிக்கும்போது யார் மற்றவரைவிட சிறந்தவர் என்ற கேள்வி பொருளற்றது.

# தனியார்க்கல்வி வணிகமாதல்

தனியார்ப்பள்ளிகளின் நோக்கம் என்ன? தனியார்ப்பள்ளிகளை பெறுமநோக்குள்ள வணிகர்கள் நடத்துகின்றனர். கல்வியின் நோக்கம் பிள்ளைகளுக்கு அறிவூட்டுவது என்று முன்பு பார்த்தோம். ஆனால், தனியார்ப்பள்ளிகளின் நோக்கம் பணஞ்சம்பாதிப்பது. அவர்கள் மக்களிடையில் வேற்றுமையையும் பிரிவினையையும் உண்டாக்கி பணஞ்சம்பாதிக்கிறார்கள். ஆங்கிலக்கல்வியே சிறந்த கல்வி என்றும் அரசின் பொதுப்பள்ளிகள் தரங்குறைந்தவை என்றும் மக்களிடையில் நிலவும் தவறான கருத்துகளை பயனுகர்கிறார்கள். அந்த கருத்துகளுக்கு மேலும் உரமிட்டு வளர்க்கிறார்கள். பெற்றோரும் வேலைவழங்குவோரும் இந்த

மாயத்தோற்றத்துக்கு அடிமையாகிறார்கள். உண்மையில் தமிழில் படிக்காமல் ஆங்கிலத்தில் படிப்பது பிள்ளைகளை அறிவாளியாக்கவில்லை. எந்தப்பள்ளியில் எந்த மொழியில் படித்தாலும் அதே பாடங்களையே படிக்கிறார்கள். வேற்றுமொழியில் படிப்பது மேலும் கடினமேயன்றி எனிதன்று. அறியியன்மையுள்ள பிள்ளைகள் எந்த வழியிலும் அறிவாளியாகலாம். தாய்மொழியில் படிக்கும்போது மேலும் பல பிள்ளைகள் எளிதில் அறிவாளியாவார்கள். பணக்காரப்பிள்ளைகளுக்கு மட்டுமல்லாமல் சமூகத்தின் எல்லாப்பிள்ளைகளுக்கும் அறிவூட்டி எல்லாப்பகுதிகளிலிருந்தும் திறமைமிக்க பிள்ளைகளை தேர்ந்தெடுத்து வேலைக்கு அமர்த்துவதே நிறுவனங்களுக்கு நல்லது. ஆனால் அப்படிச்செய்தால்

தனியார்ப்பள்ளிகளுக்கு வருமானம் இருக்காது. அது பணக்காரர்களுக்கும் பிடிக்காது.

ஒரு காலத்தில் சமூகத்துடன் பின்னிப்பிணைந்து கிடந்த கல்வி இருபத்தோராம் நூற்றாண்டில் சமூகத்துடன் தொடர்பில்லாத ஒரு தனிப்பொருளாகியிருக்கிறது. தன் மூல நோக்கத்திலிருந்து விலகி கல்வி இப்போது பணக்காரர்களுக்கு மட்டும் விற்கப்படுகிறது.

நான் 1970களில் கல்லூரியில் படித்தபோது தனியார்க்கல்வியும் ஆங்கிலவழிக்கல்வியும் ஒரு விதிவிலக்காகவே இருந்தன. அப்போது நகரத்திலுள்ள சில புகழ்பெற்ற பள்ளிகள் பெற்றோரிடமிருந்து கட்டணத்தை வாங்கிக்கொண்டு ஆங்கிலவழியில் தரமான கல்வியை வழங்கின. இவற்றில் படித்தவர்கள் பணக்காரர்கள்; ஆனால் சிறந்த

அறிவாளிகள் என்று சொல்வதற்கில்லை. இவ்வாறான ஒரு பள்ளியில் படித்து பிறகு என்னுடன் கல்லூரியில் படித்த ஒருவன் தேர்வுகளில் நான் எழுதுவதை பார்த்து எழுத (காப்பியடிக்க) விரும்பினான். அப்போதே நகரங்களில் ஆங்கிலமோகம் இருந்ததால், தனியார்ப்பள்ளிகளில் படித்தவர்கள் பொதுப்பள்ளிகளில் படித்தவர்களைவிட அதிகமாக மதிக்கப்பட்டனர். இதனால் இவ்வாறான பள்ளிகளில் சேர கடும்போட்டி நிலவியது.

ஆண்டுகள் செல்லச்செல்ல, அந்த போட்டியை பயனுகர வியாபார நோக்கமுள்ள தொழின்முனைவர்கள் மேலும் பல ஆங்கிலவழிப்பள்ளிகளை தொடக்கினர். இந்தப்பள்ளிகள் அந்தளவுக்கு தரமானவை அல்ல. கான மயிலாட கண்டிருந்த வான்கோழியைப்போல்,

மேன்மட்டத்தினரைப்போல் பாவிக்க விரும்பிய நடுத்தர வகுப்பினர் இந்த பள்ளிகளில் தம் பிள்ளைகளை சேர்த்தனர். இதனால் இந்த பள்ளிகளை தொடங்கியவர்கள் செல்வந்தராயினர். குறைந்த முதலீடும் பெரும் பெறுமமுமுள்ள இந்த தொழிலைக்கண்ட மற்ற வணிகர்களும் இவ்வாறான பள்ளிகளை தொடங்கினர். தரம் மேலும் குறைந்தது. இவ்வாறு விரிவடைந்து ஆங்கிலவழியான தனியார்ப்பள்ளிகள் சிற்றூர்களுக்கும் வந்தன. சிற்றூர்மக்கள் பேரூர்மக்கள் அறிவாளிகள் என்ற எடுகோளால், அவர்களை பாவிக்க விரும்பி தங்கள் பிள்ளைகளையும் இந்த பள்ளிகளுக்கு அனுப்புகிறார்கள். இதுவே தனியார்ப்பள்ளிகள் பெருகி படிமலர்ந்த கதை. இதில் சமூகத்தின் தேவை என்ன, கல்வியின் பொருள் என்ன, சமூகத்தின் எதிர்கால

மக்களை எவ்வாறு அறிவூட்டவேண்டும் என்ற சிந்தனைகள் இல்லை.

தனியார் நடத்தும் கல்வி, குறிப்பாக கல்லூரிக்கல்வியும் தொழின்மக்கல்வியுமான உயர்கல்வி, அதிகளவில் விற்கக்கூடியதும் பெரும் பெறுமத்தை (இலாபத்தை) வழங்கக்கூடியதுமான வியாபாரம். இதில் வேறு எந்தத்தொழிலிலும் கற்பனைசெய்யவியலாதபடி அடுக்கவளர்ச்சியான முதலீட்டுமீள்வு உள்ளது. முதலீட்டுமீள்வு என்பதற்கு பொதுமக்களின் மொழியில் ‘பணம் சம்பாதிக்கும் இயன்மை’ என்று பொருள். பாடத்தொகுப்பும் பாடத்தொகுதியும் மூலதனச்சமூகத்தை மகிழ்விக்கும்வகையில் மட்டுமே அமைகின்றன. இவை சமூகத்தின் பரந்த தேவைகளை எதிர்கொள்ளவில்லை.

இந்தியாவில் தனியார்க்கல்வி பெரும்பாலும்

ஒரு குடும்பவியாபாரம். கற்பித்தலும் மற்ற பணிகளும் கல்வித்தத்துவத்தின் அடிப்படையில் நடைபெறாமல் மேலாளும் குடும்பத்தினரின் விருப்பப்படி நடைபெறுகின்றன. ஒரு சில விதிவிலக்குகள் இருப்பினும் இதுவே இந்தியாமுழுவதும் பரவலான போக்கு. இதற்கு மாறான நிலைமையை மற்ற நாடுகளில் காண்கிறோம். புகழ்பெற்ற ஆசுபோடு, கேம்பிரிசு, ஆர்வடு, சுதான்போடு, பிரின்சிடன் ஆகியவை தனியார்ப்பல்கலைக்கழகங்களே. அங்கு தனியார்நடத்துநர்கள் கல்வியை சமூகத்தின் பரந்த ஆர்வங்களுடன் கையாள்கிறார்கள்.

தனியாரிடம் இந்த ஆர்வங்கள் இல்லாத சமூகத்தில் கல்வியை அரசு நேரடியாக நடத்தவேண்டும். ஏனெனில், அரசே கோடலோ பாகுபாடோ பற்றோ இல்லாமல் செயலாற்றலாம்; அறிவை உருவாக்குவதிலும்

பரப்புவதிலும் சமத்துவத்தை நிலைநாட்டலாம்; சமமின்மை இருந்தால் அதை மட்டமாக்கலாம். ஆனால், இந்தியாவில், இப்போதைய அரசுகளும் முந்தைய அரசுகளும் நடுவணரசுகளும் மாநில அரசுகளும் இந்த பொறுப்புகளிலிருந்து தவறிவிட்டன. கல்வியை பெறுமநோக்குள்ள வணிகர்களிடம் விட்டுவிட்டன. இந்த வணிகர்கள் யாரிடம் பணம் இருக்கிறதோ அவர்களுக்கு தகுந்ததும் தேவையானதுமான கல்வியை வழங்குவதில் வியப்பில்லை. இதன் மொத்த விளைவாக, இந்தியச்சமூகம் கல்வியின் உண்மையான நோக்கத்தை மறந்துவிட்டு நாகரிகமற்ற நிலையைநோக்கி போய்க்கொண்டிருக்கிறது. அரசிலக்கணம் தனியார்க்கல்வியும் பெறுமமற்ற அறச்செயலாகவே இருக்கவேண்டும் என்கிறது. அதாவது, இதை நடத்துவோர் ஆசிரியர்களுக்கு

கொடுக்கவேண்டிய ஊதியத்தையும் கல்விதொடர்பான செலவுகளையுமே மாணவர்களிடமிருந்து கட்டணமாக பெறலாம் என்றும், நிதி எஞ்சியிருந்தால் அதை பள்ளியின் வளராக்கத்துக்கே செலவிடவேண்டும், நிகரப்பெறுமம் இருக்கக்கூடாது என்றும் சட்டம் சொல்கிறது. ஆனால் கல்விநிறுவனங்கள் இந்த சட்டத்தை மீற பல வழிகளை வகுத்திருக்கின்றன.

இதற்காக ஒரு இருமட்டக்கட்டமைப்பை உருவாக்கியிருக்கிறார்கள். ஒரு அறக்கட்டளை பள்ளியை நடத்துகிறது. இந்த அறக்கட்டளை பெறுமமற்ற நிறுவனமாக கணக்கில் காட்டப்படுகிறது. பள்ளியின் சொத்துகள் மற்றொரு நிறுவனத்துக்கு சொந்தமாகின்றன. இந்த மற்ற நிறுவனம் பள்ளிக்கு கட்டிடம், மேலாண்மை, தொழினுட்பம்

போன்ற சேவைகளை வழங்குகிறது. பள்ளி இதற்கான வாடகையையும் கட்டணத்தையும் நிறுவனத்துக்கு செலுத்துகிறது. ஆசிரியர்களின் ஊதியமும் மற்ற சிறு செலவுகளும் போக, எஞ்சிய நிதியெல்லாம் இந்த நிறுவனத்துக்கு வாடகை, சேவைக்கட்டணம் என்ற பெயரில் பாய்கிறது. நிறுவனம் பெறுமநிறுவனம் என்பதால் இதற்கு வரும் நிதியை அதன் சொந்தக்காரர்கள் எடுத்துக்கொள்ளலாம்.

ஒரு பள்ளியை நடத்துவதில் நுழைசேர்ப்புகள், கட்டணவசூல், நிதிமேலாண்மை, பணிசேர்த்தல், கணக்கியல், கொள்முதல், இருப்பியக்கம், போக்குவரத்து, வசதியமேலாண்மை போன்ற பல நிர்வாகக்கூறுகள் எழுகின்றன. பெரும்பான்மையான தனியார்ப்பள்ளிகள் நல்ல நிர்வாகக்கொள்கைகளை

பின்பற்றவில்லை. நல்ல நிர்வாகிகளை அமர்த்துவதற்கு தேவையான நிதியை இவர்கள் செலவிட விரும்பவில்லை. ஒரு மளிகைக்கடை நடைபெறுவதைப்போல் ஒரு குடும்பச்செயலாக இந்த கல்விநிறுவனங்கள் செயலாற்றுகின்றன. ஒவ்வொரு குடும்ப உறுப்பினரும் ஒரு செயலை தன் கட்டுப்பாட்டில் எடுத்துக்கொள்கிறார். கல்வியை மேம்படுத்தும் நெகிழ்மையை ஆசிரியர்களுக்கு கொடுப்பதில்லை. குடும்பத்தலைவர் கல்வியின் முடிசூடா மன்னராகிறார். இவரை எந்த ஒழுங்கமைப்பும் சட்டமும் கட்டுப்படுத்த இயலாது. எல்லாவிதமான கையூடாடல்களும் நெசவுகளும் இவருக்கு தெரியும். சட்டத்தின் எல்லா வேட்கோள்களும் நிறைவேறியதாக ஏடுகளில் காட்டிவிடுவார்கள்.

கல்வியை கல்வியாளர்களும்

கற்றறிஞர்களும் கட்டுப்படுத்தாமல் வணிகர்கள் கட்டுப்படுத்துகிறார்கள். பெறுமநோக்குள்ள வணிகத்தில் செலவை இயன்றவரை குறைப்பதும் வருமானத்தை இயன்றவரை அதிகரிப்பதும் இயல்பே. செலவைக்குறைக்க, தகுதிகுறைந்த ஆசிரியர்களை குறைந்த ஊதியத்தில் அமர்த்துவதும் நல்ல வியாபாரத்தின் நல்ல கொள்கை, அன்றோ! இதனால் விளையும் கல்வியின் தரத்தை நீங்களே கற்பனைசெய்துகொள்ளுங்கள்.

# உவபுவின் சேவபொகை

உவபு, சேவபொகை என்பவை நான் தட்டுப்பலகையில் நேர்ந்தவாறாக தட்டிய எழுத்துகளல்ல. இவை முறையே உலக வணிக ஒருங்கமைப்பு, சேவைவணிகத்தில் பொது உடன்படிக்கை என்பவற்றின் சுருக்கங்கள். உவபு அதில் பங்கேற்கும் உலக நாடுகளிடையான வணிகத்தை ஒழுங்குறுத்தி அதற்கான விதிகளையும் உடன்படிக்கைகளையும் உண்டாக்குகிறது. அந்த உடன்படிக்கைகளுள் ஒன்று சேவபொகை. இந்த உடன்படிக்கை உவபுவில் பங்கேற்கும் எல்லா நாடுகளுக்கும் பொதுவான வணிகவிதிகளை வகுத்து வணிகத்தை தாராளமயமாக்குகிறது. பங்கேற்கும் 164 நாடுகளுள் இந்தியாவும் ஒன்று. ஒவ்வொரு நாடும் சேவபொகையின்

பட்டியலிலுள்ள எந்தெந்த சேவைகளை தாராளமயமாக்கலாம் என்று தேர்ந்துகொள்ளலாம்.

சேவபொகை ஒழுங்குறுத்தும் சேவைகளுள் கணினிதொடர்பான சேவை, ஆராய்ச்சியும் வளராக்கமும், நிலைச்சொத்து, குத்தகை, தகவற்றொடர்பு, கட்டுமானம், பரப்பல் போன்றவை அடங்குகின்றன. கல்விச்சேவையும் 1996ஆம் ஆண்டு சேர்க்கப்பட்டது. கல்விச்சேவையை ஒரு வணிகச்சேவையாக சேர்ப்பது தவறு என்று கனடா, அமெரிக்கா, ஐரோப்பா போன்ற பல நாடுகளிலுமுள்ள கற்றறிஞர்க்குழுவினர் எதிர்ப்புதெரிவித்தனர் (சாத்து 2006). எனினும், இந்திய அரசுகள் அந்த எதிர்ப்புகளை பொருட்படுத்தாமல் சேவபொகையை அரவணைத்து ஏற்றுக்கொண்டன.

உயர்கல்வி பொதுமக்களுக்கான சேவை;

அது விற்கத்தகு பொருளன்று. எனவே, அது அந்தந்த அரசுகளின் நேரடி மேற்பார்வையில் இருக்கவேண்டும். முன்னேறிய நாடுகளிலிருந்து முன்னேறும் நாடுகளுக்கு கல்விச்சேவை ஏற்றுமதியானால், அது உண்ணாட்டு கல்வியமைப்பை நீக்கிவிடாமல் அதனுடன் சேர்ந்து பணியாற்றுவதை உறுதிசெய்யவேண்டும் என்பது அந்த அறிஞர்களின் கருத்து. இந்திய அரசுகள் இந்த அறிவுரைக்கும் செவிமடுக்கவில்லை.

உவபு வணிகநோக்குள்ளது என்பது தெளிவு. சென்ற பகுதியில் இந்தியாவிலுள்ள வணிகர்கள் கல்வியை எடுத்துக்கொண்டிருப்பதை கண்டோம். இது உலகெங்கும் நடைபெறுகிறது. அதாவது, உலகெங்குமுள்ள வணிகர்கள் கல்வியையும் விற்று பொருளீட்ட விரும்புகிறார்கள். ஆனால் முன்னேறிய நாடுகளின் அரசுகளும்

மதிக்கத்தக்க பல்கலைக்கழகங்களும் இந்த போக்கை எதிர்த்து கல்வியை காத்துக்கொள்கின்றன. இந்தியாவில் அரசுகளும் கல்விநிறுவனங்களும் அதை செய்யாமல் உவபுவின் சேவபொாகைக்கு அடிபணிகின்றன.

வணிகமும் தகவற்பரிமாற்றமும் மற்றவையும் உலகமயமாகிக்கொண்டுவருகின்றன.

கல்வியும் உலகமயமாவதை தவிர்க்கவியலாது. ஆனால், அதை நாட்டுக்கும் சமூகத்துக்குமான தேவைகளின் அடிப்படையில் செய்யவேண்டும். உண்மையில், இது முன்னேறிய நாடுகளின் வணிகத்தேவைகளின் அடிப்படையில் நடைபெறுகிறது. இதை இந்திய மக்களின் ஆங்கில மோகமும் வெளிநாட்டு மோகமும் மிகவும் வசதியாக்குகின்றன.

சேவபொாகையின் கொள்விதிப்படி, எல்லா

சேவைகளிலும் நான்கு வணிகநிலமங்கள் உள்ளன. கல்வியில் அவை (1) வெளிநாட்டினருக்கு கட்டணத்தை செலுத்தி கல்விபெறல், (2) வெளிநாட்டுக்குச்சென்று கல்விபெறல், (3) வெளிநாட்டு நிறுவனங்கள் கிளைகளை நிறுவி கல்விவழங்கல், (4) வெளிநாட்டு ஆசிரியர்கள் வந்து கல்விவழங்கல் ஆகியவை.

மேலோட்டமாக பார்க்கும்போது இந்த நான்கு நிலமங்களும் நாடுகளிடையில் இருவழியானவை என்பதால், இவை உலகமயமாதலின் கூறுகளாகவே தோன்றுகின்றன. ஆனால், நடைமுறையில் எத்தனை இந்தியர்கள் அமெரிக்காவில் படிக்க விரும்புகிறார்கள், எத்தனை அமெரிக்கர்கள் இந்தியாவில் படிக்க விரும்புகிறார்கள் என்று எண்ணிப்பாருங்கள். இதிலிருந்து முன்னேறிய நாடுகளிலிருந்து முன்னேறும்

நாடுகளுக்கு கல்வியும், அதனால் மொழியும், பண்பாடும் இறக்குமதியாவது விளங்குகிறது. சேவபொகையின்படி, வெளிநாட்டு நிறுவனங்கள் இந்தியாவில் தங்கள் வளாகங்களை அமைக்கலாம். இதுவும் மேலோட்டமாக பார்க்கும்போது இந்தியாவுக்கு நன்மையளிப்பதுபோல் தோன்றுகிறது. ஆனால், உண்மையில், கல்விநிறுவனங்கள் தங்கள் வெளிநாட்டு வளாகங்களில் மிக மோசமான சேவைகளை வழங்குகிறார்கள்; ஏனெனில் அவர்களது நோக்கம் வணிகம் மட்டுமே. அவற்றின் மூல வளாகங்களில் காணப்படும் கல்வித்தரம், பாடத்தொகுப்பு, ஆராய்ச்சி, உட்கட்டமைப்பு போன்றவற்றை அங்குள்ள அரசுகளும் அறிஞர்களும் கட்டுப்படுத்துகிறார்கள். இந்த பல்கலைக்கழகங்களின் அனைத்துலக வளாகங்களில் இந்த தரக்கட்டுப்பாடு

இல்லை. மேலும், பொதுவாக, உயர்தர கல்விநிறுவனங்கள் அதே தரத்தில் மற்ற நாடுகளில் நிறுவுவது கடினம் என்பதால் அதை விரும்புவதில்லை. ஆகவே, மேலான நிறுவனங்கள் தங்கள் மையங்களை இந்தியாவில் நிறுவுவது அரிது; அப்படி நிறுவும் நிறுவனங்கள் தங்கள் நாட்டில் வழங்கும் அதே தரமான கல்வியை வழங்குவதும் அரிது.

வெளிநாட்டிலிருந்து சேவைகளை வாங்க அதிகளவான பணம் தேவையாயிருப்பதால் இந்தியாவின் மேன்மட்டத்தினரே இதனால் பயனடைகிறார்கள். இந்த வெளிநாட்டுச்சேவைகள் இடைமட்டத்தினரையும் தாழ்மட்டத்தினரையும் சென்றடைவதில்லை. இதனால், மேன்மட்டத்தினர் மேனாட்டுப்பண்பாட்டுக்கு மாறிக்கொண்டுவருவதும் ஏழைகள்

கல்வியிலிருந்து மேலும் விடுபடுவதும் தொடர்கிறது.

# எதிர்காலம்

இந்த தனியார்மயமாகும் போக்கு தொடர்ந்தால், எதிர்காலத்தில் ஒருநாள் இது முழுமையடையும். கல்வி முற்றிலும் வணிகமாகி, அரசு பொதுப்பள்ளிகளை நடத்துவதை முற்றிலும் கைவிடும். அப்போது மக்களின் நலத்துக்கான கல்வி பெயரளவிலும் இருக்காது. ஏழைகளுக்கு கல்வியே கிடைக்காது. வழக்கம்போல் அரசு தனியார்நிறுவனங்களை கட்டுப்படுத்தாமல் விடும். தனியார்நிறுவனங்களே மாணவர்கள் செலுத்தவேண்டிய கட்டணங்களை தீர்மானிப்பன. ஆசிரியரிகளை பணிசேர்ப்பது, அவர்களின் ஊதியம், மாணவர்களை நுழைசேர்ப்பது போன்றவற்றை சமூக நன்மைகளுக்காக அரசு மறுவடிவாக்க இயலாது.

தனியார்க்கல்வி மக்களுக்கு தரமான கல்வியை வழங்குவதாக மக்கள் எதிர்பார்க்கின்றனர். இது ஒரு மாயத்தோற்றம். ஆங்கிலக்கல்வி தரமான கல்வியன்று என்பதை அவர்கள் உணரவில்லை. தம் பிள்ளைகளை தனியார்ப்பள்ளிகளுக்கு அனுப்புவதன்மூலம் அவர்களை மேன்மட்டத்தினராக்கிவிடலாம் என்று நடுமட்டமக்கள் எதிர்பார்க்கின்றனர். ஆனால் மேன்மட்டத்தில் எல்லாருக்கும் இடமில்லை. தம் பிள்ளைகளை பொதுப்பள்ளிக்காவது அனுப்புவதன்மூலம் அவர்களை நடுத்தரமக்களாக்கிவிடலாம் என்று கீழ்மட்டமக்கள் எதிர்பார்க்கிறார்கள். அரசின் பொதுக்கல்வி அதையும் செய்யவில்லை. மேன்மட்டத்தினர் பெறும் கல்வியும் அனைத்துலக அளவில் சிறந்த கல்வியன்று.

அங்கொருவரும் இங்கொருவருமாக ‘நன்றாக’ படித்து தன் சமுகமட்டத்தை உயர்த்தலாம். ஆனால் மேன்மட்டத்தினர் மற்றமட்டத்தினர் தங்களுடன் கலக்காமல் பார்த்துக்கொள்வார்கள். கல்வியை அதற்கு தகுந்தவாறு அமைத்துக்கொள்வார்கள். அதாவது அங்கொருவரும் இங்கொருவருமாக உயர்வதையும் தடுக்கும் வகையில் ஆட்சியாளர்களும், அதிகாரிகளும், கல்வியாளர்களும் கல்வியை அமைத்துக்கொள்வார்கள். இப்போதும் மேன்மட்டத்தினரின் பெரும்பான்மையான பிள்ளைகள் படித்து நல்ல வேலையில் அமர்ந்து தம் மேன்மட்ட நிலையை தக்கவைத்துக்கொள்கிறார்கள்.

ஆனால் நடுத்தரமட்டத்திலிருந்தும் கீழ்மட்டத்திலிருந்தும் படித்து மேன்மட்டத்துக்கு உயர்ந்தவர்களின் எண்ணிக்கை மிகச்சிறிது.

இவர்கள் விதிவிலக்காகவே இருக்கிறார்கள். இப்போது நடுத்தர மக்களாயிருப்பவர்கள் போலிக்கல்வியை பெறுவதால் இறுதியில் ஏழைகளாவர். அவர்கள் ஆங்கிலத்தில் படித்தாலும் வேலைவாய்ப்பிலும் மற்ற வாய்ப்புகளிலும் மேன்மட்டத்தினருடன் போட்டியிட இயலாது. இந்தியாவின் நடுவணரசின் கொள்விதிகளும் மாநில அரசுகளின் கொள்விதிகளும் மேன்மட்டத்தினருக்கு சாதகமாக இருப்பது தொடரும். உவபுவின் சேவபொகை போன்ற ஒப்பந்தங்கள் உலகின் மேன்மட்டத்தினரை வணிகத்தால் ஒன்றிணைக்கிறது. நடுத்தரமட்டத்தினரிடமும் கீழ்மட்டத்தினரிடமும் உவபுவின் உறுப்பினர்களுக்கு தேவையான பணம் இல்லாததால் அவர்களை புறக்கணிக்கிறது. உலகமயமாதலின் நிகர இறுதிவிளைவு

என்ன? எல்லா நாடுகளிலுமுள்ள மேன்மட்டத்தினர் ஒரே மொழியை (ஆங்கிலத்தை) பயன்படுத்தி ஒரே (மேற்கத்திய) பண்பாட்டினரராவர். மற்ற எல்லாரும் புறக்கணிக்கப்பட்டு, வெகுகாலத்துக்கு வறுமையில் வாடி, இறுதியில் அழிந்துபோவார்கள். அப்போது ஒரு புது உலகம் பிறக்கும். அதன்பின் எல்லாரும் சுகமாக வாழ்வார்கள்.

# 5. கல்வியும் அரசியலும்

நாட்டிலுள்ள எல்லாருக்கும் கல்வி இலவசமாக கிடைக்கும்படி செய்வது அரசின் பொறுப்பு என்று 4.1ஆம் பகுதியில் பார்த்தோம். கல்வி அவரவரின் தாய்மொழியில் இருப்பதே மக்களுக்கு அறிவூட்டுவதில் மிகுந்த பயனளிக்கும் என்று 3.1ஆம் பகுதியில் பார்த்தோம். தனியார்க்கல்வி சிறந்த கல்வியை வழங்கவில்லை என்று 4.3ஆம் பகுதியிலும் அது மேன்மட்டத்தினருக்கே வேலைவாய்ப்பளிக்கிறது என்று 4.4ஆம் பகுதியிலும் பார்த்தோம். இவற்றையெல்லாம் சேர்க்கும்போது, அரசு தனியார்க்கல்வியை வழக்கொழித்து தரமான பொதுக்கல்வியை எல்லாருக்கும் வழங்கி, அவரவர் விருப்பத்துக்கும் ஆர்வத்துக்குமேற்ற தொழிலை மேற்கொள்ளும்படி ஊக்குவித்து

அவர்களுக்கும் சமூகமுன்னேற்றத்துக்கும் உதவவேண்டும் என்ற முடிவை வந்தடைகிறோம். ஆனால், இந்தியாவில் அரசுகள் அப்படி செய்யவில்லை. ஏன்?

# தனியார்க்கல்வியின் வருமானம்

தனியார்க்கல்வியால் இந்திய வணிகர்களுக்கு நல்ல வருமானம் வருவதை 4.4ஆம் பகுதியிலும் வெளிநாட்டு வணிகர்களுக்கு வருமானம் கிடைப்பதை 4.5ஆம் பகுதியிலும் பார்த்தோம். இவர்களெல்லாம் கொள்ளைகொள்ளையாக பணஞ்சம்பாதிப்பதை பார்த்துக்கொண்டு அரசியல்வாதிகள் சும்மா இருப்பார்களா? அந்த பணத்தில் ஒரு (பெரும்)பகுதி தமக்கு வரவேண்டும் என்று விரும்புவது இயல்பன்றோ!

மிகுந்த ஏழ்மைநிலையிலுள்ளவர்களைத்தவிர வேறு யார் எந்த வழியில் எவ்வளவு சம்பாதித்தாலும் அதன் ஒரு கணிசமான பகுதி அரசுக்கு வரியாக வரவேண்டும் என்று சட்டம் சொல்கிறது. அதிலிருந்தும்

தப்பிக்க ஏராளமான வழிகளை வணிகர்களும் மற்ற பணக்காரர்களும் கண்டுவைத்திருக்கின்றனர்.

நான் இங்கு அந்த வரிவிதிப்பை சொல்லவில்லை. வரி அரசுக்குப்போவது. அரசியல்வாதிகளின் வீட்டுக்கு போக ஏதாவது வழியிருக்கிறதா என்று சிந்திக்கிறேன். இருந்தால், அது மேசைக்குக்கீழாக கமுக்கமாக நடைபெறவேண்டும். ஏனெனில், அது சட்டமுரணானது. இவ்வாறான வழிகள் இருக்கின்றனவா என்று நான் சொல்லமாட்டேன். நீங்களே ஊகித்துக்கொள்ளுங்கள்.

பொதுவாக, அரசை நடத்தும் அரசியல்வாதிகள் மேன்மட்டத்தினருக்கும் பெருவணிகர்களுக்கும் ஏற்புடைய விதிமுறைகளை உண்டாக்குவதில் ஆர்வமுள்ளவர்கள். இதனால் இந்த அரசியல்வாதிகளும் முந்தைய பகுதியில் சொன்னவாறு நன்மையடையலாம். மேலும், உலகநோக்கில் இந்தியா விரைவாக பொருளாதார முன்னேற்றமடைந்து வருகிறது என்றும் இவர்கள் காட்டிக்கொள்ள விரும்புகிறார்கள். அவ்வாறு காட்டி அது தங்கள் கட்சியின் ஆட்சியாலே நிகழ்ந்தது என்று மார்தட்டிக்கொள்வதிலும் இவர்களுக்கு ஆர்வமிருப்பதில் வியப்பில்லை.

ஏழைமக்களின் வாழ்க்கைத்தரம் உயர்வதாலோ அவர்கள் அறிவாளிகளாக

ஆவதாலோ இந்தியாவின் பொருளாதாரம் முன்னேறாது என்பது இவர்களது எண்ணம். பணக்காரர்களிடமே வணிகத்துக்கான மூலதனம் இருப்பதால் அவர்களே நாட்டின் பொருளாதார வளர்ச்சியில் ஈடுபடுகிறார்கள். இதனால் அந்த பணக்காரர்களின் பொருளாதாரம் மேலும் வளர்கிறது. இதுவே பணக்காரர்கள் மேலும் பணக்காரர்களாகி ஏழைகள் மேலும் ஏழைகளாவதான இயங்குமுறை.

உலகமேடையில் இந்தியாவின் பொருளாதார நிலை விரைவாக வளர்ந்துவருவதாக தோன்றுகிறது. அந்த வளர்ச்சி முற்றிலும் இந்தியாவின் மேன்மட்டத்தினரிலே நடைபெறுகிறது. மற்றவர்களை இந்த பொருளாதார வளர்ச்சி புறக்கணிப்பதால் அவர்கள் மேலும் வீழ்ச்சியடைகிறார்கள். இதனால் சமூகத்தில் பொருளாதார

முனையமாதல் (வேறுபடுதல்) மேலும் அகலமாகிறது.

இந்தியாவின் பெருவணிகர்கள் உயர்ந்தாலே இந்தியா பொருளாதாரத்தில் உயரும் என்ற நோக்கில் அவர்களுக்கு சாதகமான உவபுவின் சேவபொாகை போன்ற கொள்கைகளையும் உலகமயமாதலையும் அரசு ஏற்கிறது.

# சமூகப்பெருமைகள்

இந்திய நடுவணரசு இந்தியாவின் பெருமையையும் தமிழ்நாட்டரசு தமிழரின் பெருமையையும் நிலைநாட்ட விரும்புகின்றன. இதனால், நடுவணரசு பழங்கால இந்துக்கொள்கைகளையும் தமிழ்நாட்டரசு தமிழின் தொல்லிலக்கியச்சுவையையும் கல்வியில் புகுத்துகின்றன. இதனால் மக்கள் என்ன பயனை அடைகிறார்கள் என்பதை அவர்கள் சிந்திப்பதாக தெரியவில்லை. இக்கால மொழித்திறமைகளில் பயிற்சியளிப்பதில்லை.

சமூகம் பல மட்டங்களில் செயலாற்றுகிறது என்று முன்பு பார்த்தோம். குடும்பம், உறவினர், ஊர், சாதி, மொழி, மாநிலம், நாடு, உலகம் ஆகியவை சமூகத்தின் வெவ்வேறு மட்டங்களே. ஆனால்

மொழிப்பற்றோ, சாதிப்பற்றோ, மதப்பற்றோ இருப்பது பிரிவினை எனில், நாட்டுப்பற்றும் உலகமக்களிலிருந்து நம்மை பிரிக்கும் ஒரு பிரிவினையன்றோ! நாட்டுப்பற்று என்பது இந்தியாவின் நடுவணரசு உண்டாக்கிய ஒரு செயற்கையான தோற்றப்பாடு. தமிழ்நாட்டரசு தமிழ்ப்பற்றை போற்றுவதும் இவ்வாறே.

சாதியாலும் மதத்தாலும் மொழியாலும் நாட்டாலும் பண்பாட்டாலும் மக்கள் வேறுபடுவது இயல்பு. ஒவ்வொரு பிரிவினரையும் வேறுபடுத்தி பார்ப்பதில் தவறில்லை. அவர்களை ஏற்றத்தாழ்வுடன் பார்ப்பதே தவறு. சாதியடிப்படையிலான ஏற்றத்தாழ்வு இந்தியாவின் மிக ஆழமாக வேரூன்றியது. இது பல சமூகச்சிக்கல்களை உண்டாக்குகிறது.

ஒவ்வொரு நாட்டின் பெருமையையும் உலகமக்களனைவரும் போற்றவேண்டும்.

ஒவ்வொரு மொழியின் பெருமையையும் அனைவரும் போற்றவேண்டும். இவ்வாறே ஒவ்வொரு சாதியினரையும் எல்லாச்சாதியினரும் மதிக்கவேண்டும். அவர்களும் நம்மைப்போன்ற மனிதர்களே என்ற எண்ணம் ஏற்பட்டால் பிரிவினை இருக்காது. சமத்துவமான சமூகத்தில் வெறுப்பும் அதனால் ஏற்படும் பின்விளைவுகளும் இரா.

இந்த நல்லியல்புநிலையை நோக்கி பயணிக்கும் மனப்பக்குவத்தை உண்டாக்குவது கல்வியின் கடமை. அவ்வாறான கல்வியை அமைத்துக்கொடுப்பது அரசின் கடமை. அதை அமைக்கும் அரசியல்வாதிகளை அரசாள தேர்ந்தெடுக்கவேண்டியது மக்களின் கடமை. இந்தியாவில் இன்றிருக்கும் நிலைமை இதற்கு மாறானது. அரசியல்வாதிகள்

சாதியாலோ மதத்தாலோ மொழியாலோ ஏற்படும் ஏற்றத்தாழ்வுகளை விலக்க முயலவில்லை. இந்த வேறுபாடுகளை தங்களுக்கு சாதகமாக எவ்வாறு பயன்படுத்திக்கொள்ளலாம் என்றே சிந்திப்பதாக தோன்றுகிறது. இதனால் இந்த வேறுபாடுகளும் அவற்றின் பின்விளைவுகளும் அதிகரிக்கின்றன.

## மொழிக்கொள்கையும் அரசியலும்

இந்தியா பலவிதமான மக்கள் வாழும் நாடு. குறிப்பாக, பல மொழிகளை பேசும் மக்கள் வாழும் நாடு. இது உலகின் நாடுகளுள் இந்தியாவுக்கே தனித்துவமான ஒரு பண்பு. இவ்வாறிருக்கும்போது இந்த பண்பையும் இதனால் ஏற்படும் பண்பாட்டுப்பன்மயத்தையும் போற்றி கொண்டாடவேண்டும்.

அதே நேரத்தில் இதனால் சில சிக்கல்களும் எழுகின்றன. ஒரு மொழியை பேசுவோர் நாட்டில் மற்ற மொழிகளை பேசுவோருடன் எவ்வாறு உரையாடுவது, நாட்டின் மையச்சேவைகள் எந்த மொழியில் (மொழிகளில்) இருக்கவேண்டும் என்ற கேள்விகள் எழுகின்றன. இதே கேள்வியை நாம் உலகளவிலும் கேட்கலாம். உலகமொழி

என்ற ஒன்று தேவையா? தேவையெனில் அது எந்த மொழியாக இருக்கவேண்டும்?

இந்த சிக்கலின் கோடலற்ற பொதுத்தீர்வு என்னவென்றால், ஒவ்வொரு மொழியிலிருந்தும் மற்ற மொழிகளுக்கு மொழிமாற்றும் சேவைகள் மக்களுக்கு பயனளிக்கும் வகையில் சமூகங்களிடையில் செயலாற்றவேண்டும். இந்தியா விடுதலைபெற்ற நாளிலிருந்து, பாலங்களையும் அணைக்கட்டுகளையும் கட்டத்தொடங்கியதுபோல், மொழியறிஞர்களை திரட்டி மொழிச்சேவைகளை வழங்கும் ஒரு அகக்கட்டமைப்பை நடுவணரசு உருவாக்கியிருக்கலாம். பாலங்களுக்கு செலவிட்ட தொகையை சுங்கவரியாக மீட்பெற்றதுபோல் வணிகநிறுவனங்களும் அரசின் உறுப்புகளும்

மொழிமாற்றச்சேவைகளை பெறும்போது ஒரு சிறு கட்டணத்தை செலுத்துமாறு ஏற்பாடுசெய்திருக்கலாம். செலவுகளை மீட்பெற்றபின் இந்த சேவைகள் அரசின் ஆதரவில் மக்களுக்கு இலவசமாக கிடைக்கும்படி செய்திருக்கலாம். அதை செய்திருந்தால் இன்று அவ்வாறான அமைப்பு நன்கு முதிர்ச்சியடைந்து நாட்டில் மொழி என்ற சிக்கலே இருந்திருக்காது. எந்த இரண்டு மொழிகளிடையிலும் தேவையானபோது தேவையான இடங்களில் எழுத்தாலும் பேச்சாலும் மொழிபெயர்க்கும் திறமையுள்ளவர்கள் இருந்திருப்பார்கள். மக்களுக்கு தத்தம் தாய்மொழியில் சிறந்த திறமை இருந்திருக்கும்.

எல்லா மனிதச்செயல்களிலும் கணினியும் செயற்கையறியியன்மையும் பங்கேற்கும் இந்நாளில் மொழிபெயர்ப்புச்சேவைகளை

எந்திரங்கள் வழங்கலாம். கணினித்தொழினுட்பம் மற்ற துறைகளில் வளரானபோது மொழிபெயர்ப்புச்சேவைகளையும் கணினியேற்றும் செயலை மேற்கொண்டிருக்கலாம். மொழியியலர்கள் இதற்கான ஆராய்ச்சிகளில் ஈடுபட அரசு மானியங்களை வழங்கி ஊக்குவித்திருக்கவேண்டும். அவ்வாறு செய்திருந்தால் இப்போது மொழிபெயர்க்க மனிதர்களே தேவையில்லாமல் நாம் நம் சட்டைப்பைகளிலும் கைப்பைகளிலும் எப்போதும் இருக்கும் அலைபேசி இந்த தேவையை நிறைவுசெய்திருக்கும்.

இவற்றுள் எதுவும் நடைபெறவில்லை. மாறாக, இதுவரை இருந்த அரசுகள் என்ன செய்திருக்கின்றன? நாடுமுழுவதற்கும் ஒரு பொது மொழி இருக்கவேண்டும்

என்ற நடைமுறையற்ற கொள்கையை வைத்துக்கொண்டு நாட்டு மக்களை அலைக்கழித்தனர். நாட்டிலுள்ள எந்த மொழியையும் நாட்டு மொழியாக தேர்ந்தெடுக்க காரணம் இல்லை. அவற்றுள் எதை நாட்டுமொழியாக்கினாலும் மற்ற மொழிகளை பேசும் எல்லாரும் அந்த மொழியை கற்கவேண்டியதிருக்கும். இது அந்த மொழி தாய்மொழியாக இருப்பவர்களுக்கு நன்மையாகவும் மற்றவர்களுக்கு சுமையாகவும் முடியும். இதனால் மற்றவர்களிடமிருந்து வெறுப்பும் எதிர்ப்பும் எழுவது இயல்பு.

இந்தியாவின் நடுவணரசுகள் இந்தியை நாட்டு மொழியாகவும் மற்ற மொழிகள் இல்லாததுபோலவும் கருதி செயலாற்றி வந்திருக்கின்றன. இந்தி தில்லிக்கும் அதைச்சூழ்ந்துள்ள வட்டாரங்களுக்கும்

மட்டுமே தாய்மொழி. இந்த மொழியை இந்தியமொழியாக்க முயலும் அரசியல்வாதிகளுக்கு இந்தியாவின் உண்மையான தன்மை விளங்கவில்லை.

விடுதலைபெற்றவுடன் நடுவணரசுகளும் மாநில அரசுகளும் இணைந்து தொடங்கியிருக்கவேண்டியதை இப்போது தொடங்கினாலும் இன்னும் சில பத்தாண்டு களில் எல்லா இந்தியர்களுக்கும் அவரவரது தாய்மொழி யில் கல்வியூட்டி, இப்போது மேன்மட்டத்தினர் மட்டுமே நாட்டை செலுத்துவதற்கு மாறாக, நாட்டின் எல்லாப் பகுதிகளிலுமுள்ள அறிவாளிகளால் நாடு வளம்பெறும்.

# நீட்டுத்தேர்வு போன்ற தேர்வுகள்

நீட்டுத்தேர்வு என்று பரவலாக அறியப்படும் தநுதேனை (தகுமைக்கும் நுழைவுக்குமான தேசியச்சோதனை) என்ற சோதனை மருத்துவக்கல்வியை பெறவிரும்பும் மாணவர்களுக்கு நாட்டளவில் நடத்தப்படும் ஒரு நுழைவுத்தேர்வு. இந்த தேர்வில் அதிக மதிப்பெண்களை வாங்கும் ஒரு சிறுபகுதியினருக்கே மருத்துவக்கல்லூரியில் இடங்கிடைக்கிறது. இதன் நோக்கம் உயர்ந்ததாக தோன்றுகிறது. இந்த தேர்வு மருத்துவர்களாக தகுதியான அறிவுள்ளவர்களை தேர்ந்தெடுத்து அவர்களை மருத்துவப்படிப்பில் ஈடுபடுத்துகிறது. மருத்துவர்கள் மருத்துவத்தை நன்கு அறிந்தவர்களாக இருப்பது நாட்டுக்கு நல்லதே. ஆனால்

அவர்கள் மருத்துவத்தை படித்தபிறகன்றோ அவர்களது மருத்துவ அறிவை சோதித்துப்பார்க்கவேண்டும்!

பள்ளிக்கல்வியை மாநில அரசுகள் நடத்துகின்றன. ஒவ்வொரு மாநிலத்திலுமுள்ள கவாபமாம (கல்விக்கும் ஆராய்ச்சிக்கும் பயிற்சிக்குமான மாநிலமன்றம்) என்ற மன்றம் அந்த மாநிலமக்களின் மொழி, வரலாறு, பண்பாடு ஆகியவற்றின் அடிப்படையில் அவர்களின் கல்விக்கான பாடத்திட்டத்தை வகுக்கிறது. கவாபதேம (கல்விக்கும் ஆராய்ச்சிக்கும் பயிற்சிக்குமான தேசியமன்றம்) என்ற ஒரு மன்றம் நாட்டளவில் ஒரு பாடத்திட்டத்தை வகுக்கிறது. தேசிய மன்றத்தின் பாடத்திட்டத்தை இகமைவா (இரண்டாமைக்கல்வியின் மையவாரியம்) என்ற வாரியத்தைச்சேர்ந்த மையப்பள்ளிகள்

பின்பற்றுகின்றன. இந்த பள்ளிகள் நடுவணரசில் பணியாற்றும் அலுவலர்களின் பிள்ளைகளுக்காக ஏற்பட்டது.

நீட்டுத்தேர்வு கவாபதேம நாட்டளவில் வகுத்ததும் மையப்பள்ளிகள் பின்பற்றுவதுமான பாடத்திட்டத்தின் அடிப்படையிலானது. ஆகவே, வடிவமைப்பின்படியே இந்த தேர்வு மைய அலுவலர்களின் பிள்ளைகளுக்கு சாதகமானது. அதாவது, இது படையாள அதிகாரிகளுக்கும் மையப்பல்கலைக்கழகங்களின் பேராசிரியர்களுக்கும் நடுவணரசின் இநிசே (இந்தியநிர்வாகச்சேவை), இகாசே (இந்தியக்காவற்சேவை) போன்ற மற்ற சேவைகளின் அதிகாரிகளுக்கும் பயனளிக்கிறது.

மேன்மட்டத்தினரின் பிள்ளைகள்

படிக்கவென்றே ஒரு தனித்துவ பள்ளியமைப்பை நடுவணரசு உண்டாக்கி, அதில் படித்தவர்களுக்கே மருத்துவக்கல்லூரியில் இடங்கிடைக்கும்படி நீட்டுத்தேர்வு என்ற ஒரு நுழைவுத்தேர்வையும் உண்டாக்கியிருக்கிறது.

ஆனால், நடுவணரசின் அதிகாரிகளல்லாத மேன்மட்டத்தினர் என்ன செய்வது? இவர்கள் இதற்காகவே முளைத்திருக்கும் பயிற்சிப்பள்ளிகளுக்கு பெரும் செலவில் தங்கள் பிள்ளைகளை அனுப்பி நீட்டுத்தேர்வுக்கு அணியமாக்குகிறார்கள். ஏழைகளுக்கு நீட்டுத்தேர்வைப்பற்றிய விவரமும் அதற்கு பிள்ளைகள் எப்படி அணியமாவது என்பதும் தெரிவதில்லை. தெரிந்தாலும் அதற்கான பணவசதி இல்லை.

இதைப்போலவே, இந்தியாவின் தலைசிறந்த உயர்கல்விநிறுவனங்களாக மேன்மட்டத்தினர்

கருதும் இதொபங்களுக்கும் (இந்திய தொழினுட்ப பயிலகங்கள்), இவபத்துக்கும் (இந்திய அறிவியற்பயிலகம்) இந்த வகையான நுழைவுத்தேர்வுகள் இருக்கின்றன. அவற்றுளொன்று கூட்டுத்தேர்வு எனப்படும் கூநுவு (கூட்டுநுழைவுத்தேர்வாய்வு). இதனால் எல்லா உயர்கல்வியும் பொருளாதார உயர்மக்களுக்கே என்ற நிலை நிலவுகிறது. சமூகத்தின் ஏழைப்பிள்ளைகளும் கீழ்சாதிப்பிள்ளைகளும் இவற்றில் வெற்றியடைவது விதிவிலக்கு. இவர்கள் மிகச்சிலரே.

இந்த தேர்வுகளாலும் பொதுவாக எல்லாத்தேர்வுகளாலும் மாணவர்களை மதிப்பறிவது எந்திரத்தனமானது. மாணவர்களின் உண்மையான அறியியன்மையையோ அறிவையோ இவை மதிப்பறிகின்றனவா என்பது ஒரு

கேள்வியாக நிற்கிறது. கேள்விகளுக்கு ஒரு மாணவர் எழுதும் விடைகளை சரிபார்த்து மதிப்பெண்வழங்குபவர் அந்த மாணவருக்கு கல்விவழங்கிய ஆசிரியரன்று. அவர் வேறெங்கோ இருப்பவர். அவருக்கு இந்த மாணவரைப்பற்றி ஒன்றும் தெரியாது. கேள்விக்கு எழுதிய விடை என்ற ஒரு குறுங்கழுத்தின் வழியாகவே மாணவர் தம் திறமையை வெளிப்படுத்தவேண்டும். அவர் ஒரு சிக்கலை எடுத்து எவ்வாறு ஆராய்கிறார், தீர்வுகளை எவ்வாறு அணுகுகிறார், ஆழ்ந்து சிந்திக்கிறாரா, தன் கருத்துகளை சொற்களால் (பேச்சாலும் எழுத்தாலும்) எவ்வாறு விவரிக்கிறார் போன்றவற்றையெல்லாம் இந்த மதிப்பறியும் முறை கணக்கிலெடுப்பதில்லை.

கீழ்க்காணும் கேள்வியை கருதுக. முருகன் தன் தோசையில் பாதியை தின்றிருக்கிறான்.

அகமது தன் தோசையில் மூன்றிலொன்றை தின்றிருக்கிறான். முருகனைவிட அகமது அதிகமான தோசையை தின்றிருக்கிறான் என்று சொல்வது சரியாகுமா? விளக்குக.

இந்தக்கேள்விக்கு விடையாக விடைத்தாளில் கொடுக்கப்பட்டது: சரியாகாது. ஏனெனில், மூன்றிலொன்று பாதியைவிட குறைவு.

ஒரு மாணவன் எழுதிய விடை: சரியாகும், அகமதின் தோசை முருகனின்தோசையைவிட ஒன்றரைமடங்குக்குமேல் பெரிதாயிருக்கும்போது.

கேள்வியில் 'அதே அளவுள்ள தோசை' என்ற தொடர் இல்லாததால் மாணவர் எல்லாச்சூழமைவு களையும் சேர்த்து சிந்தித்திருக்கிறார். இவ்வாறான மாணவரை கூரிய சிந்தனையாளர் என்று நாம் போற்றவேண்டும். மாறாக, நம் கல்வியமைப்பு இவருக்கு சுழியமதிப்பெண்ணை

# தேர்தலுக்கு எது நல்லது?

மக்களாட்சி நடைபெறும் ஒரு நாட்டில் நாட்டை ஆள்வதற்கான அரசை தேர்ந்தெடுப்பது மக்களின் கடமை. இந்தியாவில் 18 வயதை அடைந்த ஒவ்வொரு மனிதருக்கும் வாக்களிக்கும் உரிமையை அரசிலக்கணம் வழங்குகிறது. இந்த உரிமையை சரியாக பயன்படுத்தி, தங்கள் சமூகத்துக்கு தகுந்த அரசை மக்கள் தேர்ந்தெடுக்க, அவர்கள் நாட்டின் அரசியலமைப்பையும் அரசின் கட்டமைப்பையும் நிற்பாளர்களை தேர்ந்தெடுக்கும் வழிமுறைகளையும் அதன் பின்விளைவுகளையும் நன்கு அறிந்திருக்கவேண்டும். அவ்வாறு அறியாமல் மக்கள் வாக்குகளை வழங்கும்போது சமூகம் தங்களுக்கு நன்மையளிக்கும் அரசை

தேர்ந்தெடுக்காமற்போகும் வாய்ப்பு உள்ளது.

இப்போது கல்வியற்ற மக்கள் நிறைந்த ஒரு சமூகத்தை கருதுங்கள். இவர்களை அரசியல்வாதிகள் எளிதில் கையாளலாம். மக்களின் தவறான எண்ணங்களை பயன்படுத்தி அதற்குத்தக பேசி தங்களுக்கு வாக்களிக்கும்படி தூண்டலாம். இவ்வாறு தேர்ந்தெடுத்த அரசு எவ்வாறு செயலாற்றும்? மக்களுக்கு கல்வியூட்டும் தன் கடமையை நிறைவேற்றுமா? மக்கள் கல்வியால் அறிவுபெற்றுவிட்டால் அதன்பின் எவ்வகையான அரசை தேர்ந்தெடுப்பார்கள்? சமூகத்துக்கு நன்மையளிக்கும் வேறு அரசை தேர்ந்தெடுக்கும் வாய்ப்பு இருக்கிறதன்றோ! அதனால் மக்களை அறிவற்றவர்களாக வைத்திருப்பதே இவர்களுக்கு நன்மை.

அதாவது, கல்வியறிவற்ற மக்கள் தேர்ந்தெடுக்கும் அரசு அடுத்த தேர்தலிலும்

வெற்றிபெறும் நோக்கத்துடன் மக்களை கல்வியறிவில்லாமலே வைத்திருக்கும். நான் எந்த அரசியற்கட்சியையும் குறிப்பாக சொல்லவில்லை. கழுதைவிட்டையில் முன்விட்டை வேறு, பின்விட்டை வேறா!

# 6. கல்வியும் ஆதிக்கமும்

அதிகாரங்களை தங்கள் கையில் வைத்து தங்கள் விருப்பப்படி முழுவதிகார ஆட்சியை நடத்த விரும்புவோர் கல்வியை தங்களுக்கு சாதகமாக எவ்வாறு பயன்படுத்தலாம் என்பதற்கு இரண்டு சான்றுகளை காண்போம். இவர்கள் தம் இனத்தை உயர்த்தியும் மற்றவர்களை அடக்கியும் ஒடுக்கியும் அரசாள்கிறார்கள். ‘நாட்டுப்பெருமை’, ‘நாட்டுப்பற்று’ போன்றவை இவர்கள் பயன்படுத்தும் மந்திரச்சொற்கள்.

இடாய்ச்சுலாந்தில் (செருமனியில்) அடால்பு இட்டுலர் என்ற ஒரு முழுவதிகாரி இருந்தார். இவரது ஆட்சியை பாசிச ஆட்சி என்று வரலாறு குறிக்கிறது. பாசிசத்தின் அடிப்படை தன் வகையான மக்களின்மீது வெறித்தனமான பற்றும் மற்ற

வகையான மக்களின்மீது வெறித்தனமான வெறுப்பும் என்று சொல்லலாம். இந்த வெறித்தனத்தை ஒரு முழுவதிகாரி தன் அதிகாரத்தால் நிலைநாட்டுவதும் எதிர்ப்பை வலுக்கட்டாயமாக படையாள வலிமையால் அடக்குவதும் பாசிசத்தின் கூறுகள். நிறவினத்தூய்மையும் இடாய்ச்சுப்பெருமையும் இட்டுலரின் பாசிசத்தின் சிறப்புப்பண்புகள்.

கிட்டத்தட்ட அதே காலக்கட்டத்தில் இத்தாலியில் பெனிற்றோ முசோலினி என்பவர் முழுவதிகாரியாக இருந்தார்.

இட்டுலர், முசோலினி போன்ற முழுவதிகாரிகள் செயலாற்றும் விதத்தை புரிந்துகொள்ள தேசம், மாநிலம், நாடு ஆகியவற்றை முதலில் புரிந்துகொள்வோம்.

# தேசம், மாநிலம், நாடு

இப்போது நாம் தேசத்தையும் நாட்டையும் பிரித்தறியவேண்டும். பொதுவழக்கில் இந்த இரண்டு சொற்களையும் நாம் ஒரே பொருளுடையவைபோல் பயன்படுத்துகிறோம். ஆனால், அரசறிவியல் இந்த இரண்டு கருத்துருகளையும் வேறுபடுத்துகிறது. இவற்றுடன் தொடர்பான மாநிலம் என்ற சொல்லின் பொருளையும் பார்ப்போம்.

தேசம் என்பது மதம், மொழி, பழக்கவழக்கங்கள், பண்பாடு போன்ற ஏதோவொரு குறிப்பிட்ட பண்பால் ஒன்றுபட்ட மக்களின் தொகுதியை குறிக்கிறது. ஒரு நிலப்பகுதியின் மக்கள் தங்களுக்கென்று ஒரு அரசாளும் முறையை அமைத்துக்கொண்டு ஒரு சமூகமாக வாழ்வதை மாநிலம்

என்கிறோம். பல மாநிலங்கள் சேர்ந்து ஒரு கூட்டுவ மாநிலமாகலாம். உட்பிரிவுகள் இல்லாத மாநிலத்தை ஒற்றைய மாநிலம் என்கிறோம். இன்றைய நிலையில், முழுவுலகமும் ஒரு மாநிலமாக இல்லை; உலகில் மக்கள் வாழும் நிலப்பகுதி பல நாடுகளாக பிரிந்திருக்கின்றது. ஒரு நாடு ஒற்றைய மாநிலமாகவோ கூட்டுவ மாநிலமாகவோ இருக்கலாம்.

ஒரு தேசத்தினர் ஒரு மாநிலமாக ஒருங்கமைவது தேவையில்லை. ஆனால், அவ்வாறிருந்தால், அதாவது ஒரு தேசம் ஒரு மாநிலமாக செயலாற்றினால், அதை ஒரு தேசியமாநிலம் என்கிறோம். சான்றாக, உலகின் எல்லா தமிழர்களையும் சேர்த்து தமிழ்த்தேசம் எனலாம். ஆனால் தமிழ்மாநிலம் இல்லை. தமிழ்நாட்டை ஏன் தமிழ்மாநிலம் என்று சொல்லவியலாது?

ஏனெனில், தமிழர்கள் உலகின் மற்றப்பகுதிகளிலும் வாழ்கிறார்கள்; தமிழ்நாட்டில் தமிழர் மட்டுமே வாழவேண்டும் என்ற கட்டாயமில்லை. இந்தியாவின் மாநிலங்கள் பெரும்பாலும் மொழியின் அடிப்படையிலே கட்டமைந்திருப்பினும், அவை தேசியமாநிலங்கள் அல்ல.

நாம் பொதுவாக அமெரிக்கா என்றழைக்கும் அமெரிக்க ஒன்றிய மாநிலங்கள் (அவொமா) என்ற நாடு ஐம்பது மாநிலங்களும் சில வட்டாரங்களும் அடங்கிய ஒரு கூட்டுவமாநிலம். இந்தியா 28 மாநிலங்களும் 8 ஒன்றிய வட்டாரங்களும் அடங்கிய ஒரு கூட்டுவமாநிலம்.

தேசத்தையும் நாட்டையும் பிரித்தறிந்தபின், நம் அன்றாட வாழ்வின் நடைமுறையில் இந்த இரண்டு சொற்களையும் இடைமாற்றி பயன்படுத்துவதையும் உணரவேண்டும்.

தேசியகீதம் என்பது உண்மையில் இந்தியா என்ற மாநிலத்தின் (நாட்டின்) பாடல். எனவே அதை நாட்டுப்பாடல் என்பதே பொருத்தமாயிருக்கும்.

# பாசிச ஆட்சி

தேசத்துக்கும் மாநிலத்துக்குமுள்ள வேறுபாட்டை புரிந்துகொண்டபின் பாசிச ஆட்சியின் நோக்கத்துக்கு திரும்புவோம். பாசிச ஆட்சி பலவிதமான மக்கள் வாழும் நாட்டை ஒரு குறிப்பிட்ட வகையான மக்களுக்கான தேசியமாநிலமாக்க முயல்கிறது. ஒரு தேசத்தின் பண்பாடும் முன்னேற்றமும் மற்றவர்களதைவிட உயர்வானது என்ற அடிப்படையில் பாசிச ஆட்சியும் அதன் விளைவான தேசியமாநிலமும் எழுகின்றன. ஒரு தனியாளின் பெருமை ஒரு தேசத்தை சேர்ந்திருப்பதாலே உண்டாகிறது என்பது தேசியக்கொள்கை. அந்த தேசியம் சாதி, மதம், மொழி, நிறவினம், ஒரு நம்பிக்கை போன்றதன் அடிப்படையில் இருக்கலாம்.

இது யாரது சாதியாகவோ மதமாகவோ மொழியாகவோ நிறவினமாகவோ நம்பிக்கையாவோ இருக்கும்? அது அந்த சமூகத்தின் உயர்சாதியரோ பெரும்பான்மையான மதத்தினரோ மொழியினரோ ஆதிக்கமுள்ள நிறவினத்தினரோ நம்பிக்கையினரோ போன்றவர்களதாகவேயிருக்கும்.

இவ்வாறான தேசிய அரசு தாழ்த்தப்பட்டோர், சிறுபான்மையான மதத்தினர் போன்றவர்களின் விழுமங்களையும் பண்பாடுகளையும் மரபுகளையும் உரிமைகளையும் புறக்கணிப்பது மட்டுமல்லாமல் அவர்களை அழிக்கவும் முயலலாம். அவ்வாறே இட்டுலரின் செருமனியில் நிகழ்ந்தது.

இட்டுலர் இடாய்ச்சுலாந்தை ஆரியர்களின் நாடாக ஆக்க முயன்றார். மற்றவர்களை

தன் முழுவதிகாரத்தாலும் படையாள வலிமையாலும் கொடுமைக்குள்ளாக்கினார். ஆரியர்களில் அவர்கள் உயர்ந்தவர்கள் என்ற பெருமையை உண்டாக்க முயன்றார்.

முசோலினி சமூகத்தின் ஒவ்வொரு உறுப்பினரும் மற்ற உறுப்பினர்களுடனும் சமூகத்தின் வரலாற்றுடனும் பண்பாட்டுடனும் இணைந்திருப்பதாகவும் சமூகத்தின் ஒன்றிய மனம் குடிமக்கள்மூலம் வெளிப்படுவதாகவும் கருதினார். இத்தாலியின் மனமாக அவர் கருதியதை நாட்டின் எல்லா மக்களும் பின்பற்றும்படி செய்ய முயன்றார். உரோமானியப்பேரரசின் பெருமையை குடிமக்கள் உணர்ந்து நாட்டுப்பற்றுடன் நாட்டுக்கு உழைக்கவேண்டும் என்று எதிர்பார்த்தார்.

இந்த முயற்சிகளெல்லாம் ஒரு காலக்கட்டத்தில் வெற்றியடைந்ததுபோல்

## பாசிசத்தின் கருவியாக கல்வி

இட்டுலரும் முசோலினியும் பிள்ளைகளுக்கு சிறுவயதிலே பாசிசக்கொள்கைகளை ஊட்ட கல்வியை பயன்படுத்தினர். நாட்டை ஒரு குறிப்பிட்ட வகையான மக்களின் தேசியமாநிலமாக ஆக்கும் கருவியாக கல்வியை பயனுறுவகையில் பயன்படுத்தலாம் என்பதை இவர்கள் உணர்ந்திருந்தனர்.

இவர்கள் வழங்கிய கல்வி பிள்ளைகளின் அறியியன்மையை கூர்மையாக்கி அறிவை வளர்த்து சிந்தனையை ஊக்கவில்லை. மாறாக, தாமாக சிந்திக்காமல் நாட்டுப்பெருமையையும் நாட்டுப்பற்றையும் பற்றி ஆசிரியர்கள் சொல்வதையே கேட்கும்படி இருந்தது. ஒரு குறிப்பிட்ட மக்களின் தேசியக்கொள்கைகளை புகுத்தும்

இவ்வகையான கல்வியை தேசியக்கல்வி என்கிறோம்.

இட்டுலர் ‘குருதித்தூய்மையின் அவசியத்தையும் முக்கியத்துவத்தையும் முற்றிலும் உணராமல் ஒரு பையனோ பெண்ணோ பள்ளியைவிட்டு வெளியேறக் கூடாது’ என்றார். நிறவினப்போராட்டங்கள், இடாய்ச்சுப்பெருமை, மாற்றியெழுதிய இடாய்ச்சு வரலாறு, சமூகக்கோட்பாடு ஆகியவை பள்ளிப்படிப்பை ஆட்கொண்டன. பாடத்தொகுப்புகள் தேசிய அரசின் தேவைகளுக்கு ஏற்றவாறு சரிசெய்யப்பட்டன. அறிவியற்பாடங்களின்போது, துப்பாக்கிச்சுடுவதன் கொள்கை, விமானப்பறத்தல், பாலங்கட்டுதல், நச்சுவளிமங்களின் விளைவுகள் ஆகியவற்றை படிப்பது அவசியமானது.

முசோலினியும் கிட்டத்தட்ட இட்டுலரையே

பின்பற்றி கல்விமூலம் பாசிச தேசியத்தை உருவாக்க முயன்றார். இவரது ஆட்சியின்போது, கிவானி சென்றிலே கல்வியை சீர்திருத்தினார். ஒரு சமூகத்தின் மனம் அதன் மக்களால் வெளிப்படுகிறது என்ற கொள்கை பாலர்வகுப்பிலிருந்து பல்கலைக்கழகம்வரை எல்லா பொதுப்பள்ளிகளிலும் தனியார்ப்பள்ளிகளிலும் கல்வியின் அடிப்படையானது. கல்விநிறுவனங்களுக்கு வீரியம், வீரச்செயல், நாட்டுப்பற்று போன்ற நாட்டின் பண்பாட்டு விழுமங்களை மாணவர்களில் விதைக்கும் கடமை வழங்கப்பட்டது. திசம்பர் 1925இல் இயற்றிய ஒரு சட்டம் பாசிசத்தை தழுவாத ஆசிரியர்களை பெருமளவில் பணிநீக்கியது. தேசியக்கல்வியமைச்சகம் உருவானபோது முசோலினி படிப்படியாக கல்வியை

மையப்படுத்தியது முற்றுப்பெற்றது. பாசிச நல்லியல்புகளுடன் இணங்கிய நாட்டுப் பாடநூல்கள் கட்டாயமாயின.

# இந்தியக்கல்வியில் பாசிசம்

தேசியக்கொள்கைகளை கருத்தேற்ற கல்வியை ஒரு கருவியாக பயன்படுத்திவரும் மரபு தேசிய அரசுகளுக்கு இருப்பது வரலாற்று உண்மை. தேசியம் என்பது மேலாதிக்க சமூகக்குழுவினரின் நோக்குநிலையின் அடிப்படையில் வற்புறுத்திய ஒரு ஒழுங்குணர்வும் மனப்பான்மையுமே. தேசிய அரசுகளின் கல்வி மேலாதிக்க சமூகக்குழுவின் நன்மைகளையே முதன்மையான கல்விப்பாடங்களாக எப்போதும் பேணியிருக்கிறது.

இதனாலே சிந்திக்காமலும் கேள்விகேட்காமலும் சொன்னதை மனப்பாடஞ்செய்யும் கல்விமுறையை அவர்கள் வளர்த்திருக்கிறார்கள். சமூகத்தாலும் பொருளாதாரத்தாலும்

தாழ்த்தப்பட்டவர்கள் சிந்திக்கும் அளவுக்கு கல்விபெற்றால் இருக்கும் நிலையின்மீது கேள்விகளை எழுப்பி அந்த நிலையிலிருந்து மீறி எழ வாய்ப்பு உண்டாகும், அன்றோ? அவர்களது அறியியன்மையை மழுக்கி, ஒரு வலுவான மேலிருந்து கீழான கீழ்ப்படியும் கல்வியணுகுமுறையை ஆதிக்கவாதிகள் உண்டாக்குகிறார்கள். இதனால் மக்கள் உண்மையான கல்வியை பெறாதது மட்டுமல்லாமல், ஆதிக்கத்தை செலுத்துவோரின் கோண்மைகளையே கல்வி என்ற பெயரில் பெறுகிறார்கள்.

இப்போது இந்தியாவில் நடைபெறும் கல்வியில் இத்தகைய கூறுகள் இருக்கின்றன. புதிய கல்விக்கொள்விதிகள் இந்த கூறுகளை மேலும் அதிகரிக்கின்றன. இந்த கொள்விதிகள் இந்தியாவின் பன்மயத்தை மறைத்து இந்தியா என்ற ஒரு

தேசத்தையும் இந்து என்ற ஒரு மதத்தையும் உயர்சாதியைச்சேர்ந்த இந்துக்களையும் இந்தி என்ற ஒரு மொழியையும் சிறப்பிக்கின்றன. ஒரு நாடு ஒரு மொழி, ஒரு மதம், ஒரு சாதி, ஒரு வரி, ஒரு கல்விக்கொள்விதி என்பது இன்றைய இந்திய அரசின் மந்திரம்.

இந்தியக்கல்வி இந்தியப்பெருமையை சிறப்பிப்பது இட்டுலர் இடாய்ச்சுப்பெருமையையும் முசோலினி இத்தாலியப்பெருமையையும் சிறப்பித்ததற்கு ஈடானது. இவை உண்மையான நாட்டின் பெருமைகள் அல்ல. தேசியப்பெருமை என்ற பெயரில் தம்மைத்தாமே உயர்ந்த வகுப்பினராக வைத்து மற்றவர்கள்மீது ஆதிக்கஞ் செலுத்தவே தங்கள் பெருமையை தேசியப்பெருமையாக இவர்கள் கல்வியின்மூலம் கருத்தேற்றுகிறார்கள். இந்தியா வின் உண்மையான பெருமை

இந்தியாவின் பன்மயம். அதைப்பற்றி இந்தியக்கல்வி மூச்சுவிடவில்லை.

பன்மயத்தில் ஒற்றுமை என்பதே இந்தியாவின் மந்திரமாயிருக்கவேண்டும். அதாவது, இந்தியாவில் பலவகையான மக்கள் வசிப்பினும் அவர்கள் ஒருவரையொருவர் மதித்து ஒற்றுமையாக வாழ்கிறார்கள் என்ற நிலை வேண்டும். இந்த நிலையை கல்வி உருவாக்கவேண்டும். மாறாக, அந்த பலவகையான மக்களுள் ஒரு வகையினர் தங்கள் ஆதிக்கத்தை செலுத்தி மற்ற சாதியினரையும் மதத்தினரையும் தாழ்ந்த பொருளாதார மட்டத்தினரையும் சிற்றூர்வாசிகளையும் புறக்கணித்து மேலும் தாழவிடும் போக்கை இன்றைய இந்தியக்கல்வி உருவாக்கி வைத்திருக்கிறது.

# 7. தேசியக்கல்விக்கொள்விதி

இந்தியாவின் இன்றைய கல்வியமைப்பு மத்திய அரசு வெளியிட்ட 'தேசிய கல்விக்கொள்விதி 2020' என்ற ஆவணத்தின் அடிப்படையிலானது. பேராசிரியர்களும் சட்டவல்லுநர்களும் மட்டுமே புரிந்துகொள்ளும் வகையில் ஆங்கிலத்தில் எழுதப்பட்ட இந்த ஆவணத்தின் கருத்துகளை பொதுமக்கள் புரிந்துகொள்ள தமிழில் (மற்ற மொழிகளிலும்) எடுத்துரைப்பது கற்றறிஞர்களின் கடமை. இது இந்தியாவின் எல்லா மூலைமுடுக்குகளிலுமுள்ள ஒவ்வொரு பிள்ளையின் எதிர்காலத்தின்மீதும் விளைவை ஏற்படுத்துகிறது. இதே காரணத்தால் இந்த ஆவணத்தின் உள்ளுரைகளை நன்கு புரிந்துகொண்டு செயலாற்றுவது இந்தியாவின் ஒவ்வொரு

குடிமகனுக்கும் ஒவ்வொரு குடிமகளுக்கும் கடமையும் பொறுப்பும் ஆகின்றன.

தரமான பள்ளிக்கல்வியை இலவசமாகவும் தரமான உயர்கல்வியை தக்க செலவிலும் பெறுவது இந்தியாவிலுள்ள ஒவ்வொரு பிள்ளைக்குமான உரிமை. எல்லாச்சாதியினருக்கும் எல்லா மதத்தினருக்கும் எல்லா மொழியினருக்கும் கல்வியில் (மட்டுமல்லாமல் எல்லாவற்றிலும்) சமத்துவம் இருக்கவேண்டும் என்று இந்திய அரசியலமைப்புக்கான அடிப்படைச்சட்டம் (அரசிலக்கணம்) கூறுகிறது. சமத்துவம் இல்லாத இடங்களில் இட ஒதுக்கீடு போன்ற சலுகைகளை வழங்கி சமத்துவத்தை நிலைநாட்ட முயல்கிறது. இவ்வாறான ஒதுக்கீடுகள் சமத்துவத்தை அடையும்வரையில் நீடிக்கவேண்டும். இப்போது மத்திய அரசு முன்வைத்திருக்கும்

புதிய கல்விக்கொள்விதி இட ஒதுக்கீடு போன்ற சமத்துவமாக்கும் கொள்கைகளை நிலைநாட்ட எந்த திட்டத்தையும் முன்வைக்கவில்லை.

தேசிய கல்விக்கொள்விதி 2020 (தேகதி) என்பது 484 பக்கங்களில் ஆங்கிலத்தில் உள்ள ஒரு ஆவணம். இதன் வரைபை மிகவும் நுணுக்கமாக ஆராய்ந்து அதன் குறைகளையும் அவற்றுக்கான மாற்றுகளையும் விளக்கி சவகர் நேசன் (நேசன் 2019) 271 பக்கங்களில் ஒரு நூலை ஆங்கிலத்தில் வெளியிட்டிருக்கிறார். அந்த நூலிலுள்ள சில கருத்துகளை பொதுமக்கள் எளிதில் விளங்கிக்கொள்ளும் வகையில் இந்த நூலில் சேர்த்திருக்கிறேன். பேராசிரியர் நேசன் பல நாடுகளில் நேரில் கண்டும் பல அறிஞர்களின் கருத்துகளை படித்தும் அறிந்த கல்வித்தத்துவத்தின் அடிப்படையில்

இந்த கல்விக்கொள்கையை ஆராய்ந்து தன் கருத்துகளை வெளியிட்டிருக்கிறார்.

அவர் தன் கடமையை செய்திருக்கிறார். நான் இந்த நூலை உங்கள் முன் வைப்பதன் மூலம் என்னால் இயன்றதை செய்கிறேன். உங்கள் பிள்ளைகளின் எதிர்கால நல்வாழ்வை ஆதிக்கவாதிகள் ஒடுக்காமல் பாதுகாக்க நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்?

மேற்சொன்ன தேசகதி இந்தியப்பண்பாட்டை மையமாகக்கொண்ட ஒரு கல்வியை முன்மொழிகிறதாம். ஆனால் இந்த கொள்விதியை இயற்றியவர்கள் இந்தியப்பண்பாடு என்று எதை குறிப்பிடுகிறார்கள் என்பதை நாம் சற்று ஊன்றிக்கவனிக்கவேண்டும். பிறகு இது யாருக்கு பயன்படும் என்பதும் யார் பின்தங்க விடப்படுவார்கள் என்பதும் நன்கு விளங்கும். இந்தியா என்பது பலவகையான பண்பாட்டு மரபுகளுள்ள மக்கள் வாழும் நாடு. சாதிப்பிரிவினைகளால் ஏற்றத்தாழ்வுகள் உள்ள நாடு. பல மதத்தினர் வாழும் நாடு. வெவ்வேறு மொழிகள் பேசும் பல வட்டாரங்கள் அடங்கிய நாடு. இவ்வாறு பன்மயமான ஒரு நாட்டில் இந்தியப்பண்பாடு

என்று எதைச்சொல்வது? திருக்குறளும் தொல்காப்பியமும் வகுத்த தமிழ்ப்பண்பாட்டை சொல்வதா, பெங்காலியிலும் தெலுங்கிலும் மராத்தியிலும் உள்ள இலக்கிய மரபுகளை சொல்வதா? நகரத்தில் வசிப்பவர்களின் வாழ்க்கைமுறையை சொல்வதா, சிற்றூர்வாசிகளின் எளிய வாழ்க்கையை சொல்வதா? கைம்பெண், உடன்கட்டையேறுதல் போன்ற தொன்மைமரபுகளை பெருமையுடன் சொல்வதா, இக்காலத்தின் புதுமைப்பெண்கள் சமமதிப்புக்காக அன்றாடம் எதிர்கொள்ளும் சிக்கல்களை சொல்வதா? அடுக்குமாடிக்கட்டிடங்களில் எல்லா வசதிகளுடனும் வாழும் செல்வந்தர்களினதா, தினக்கூலிக்கு வேலைசெய்து குடிசைகளிலும் குப்பைமேடுகளிலும் வாழும் ஏழைகளினதா?

சைவர், சமணர், புத்தர், சைனர், கிறித்துவர், இசுலாமியர் போன்ற பல மதங்களை பின்பற்றுவோருள் ஒருவரினதா? அந்தணர்களின் பழக்கவழக்கங்களை சொல்வதா, தீண்டத்தகாதவர் என்று ஒதுக்கப்பட்ட மக்களின் வரலாற்று வேதனைகளை குறிப்பதா? இடைப்பட்ட ஆயிரக்கணக்கான சாதியினர் ஒவ்வொருவருக்கும் ஒரு தனித்துவ பண்பாடும் விழுமங்களும் பழக்கங்களும் உள்ளனவே, இவற்றுள் எது இந்தியப்பண்பாடு? அனைத்தையும் ஒன்றுசேர்க்கும் இந்தியா என்ற ஒற்றைப்பண்பாடு ஏதும் உண்டா? எதை இந்தியப்பண்பாடு என்று சொல்லி பிள்ளைகளுக்கு கற்பிக்கப்போகிறார்கள்? இந்தக்கேள்வியின் விடை தேகதியில் இருக்கிறது. இந்தியாவின் பெருமையை

மாணவர்கள் உணர்வதற்காக, சமக்கிருதப்படிப்பையும் அதன் இலக்கியத்தைப்பற்றிய அறிவையும் அவர்களுக்கு வழங்கவேண்டும் என்று தேகதி பரிந்துரைக்கிறது. இந்தியாவின் தொன்மையான அறிவியலையும் அறியியன்மையையும் எடுத்துரைக்க ஆரியபட்டர், சாணக்கியர், சரகர் போன்றவர்களை மேற்கோளிடுகிறது. காதம்பரியிலும் (64 கலைகள்) இலலிதவிசுத்தராவிலும் (86 கலைகள்) யசோதராவின் செயமங்களத்திலும் (512) பரதரின் நாட்டியசாத்திரத்திலும் காட்டியபடி இசை, நடனம், ஓவியம், சிற்பம், மொழிகள், இலக்கியம் உட்பட்ட பல கலைகளிலும் தொன்மை இந்தியா சிறந்துவிளங்கியதை இது பெருமையுடன் காட்டும் என்கிறது. இந்தியாவில்

பல்லாயிரமாண்டுகளாக செறிந்து நீடித்த மரபுகளையும் நீதிநெறிகளையும் பாடத்தொகுப்பில் உள்ளடக்கச்சொல்கிறது. அதாவது, தேகதியை பொறுத்தவரையில் இந்தியா என்பது வேதப்பண்பாட்டின் உயர்சாதியரின் சந்ததிகளால் ஆனது. இவர்களது பெருமையையே இந்தியப்பெருமை என்று தேகதி குறிப்பிடுகிறது. வேறு சாதியினருக்கும் மதத்தினருக்கும் மொழியினருக்கும் பெருமை இல்லை போலும். தேகதி வழங்கும் மேற்கோள்களிலும் சான்றுகளிலும் இப்போது இந்தியர்கள் என்று மொத்தமாக அழைக்கப்படும் மற்ற சமூகங்களிலிருந்து ஒரு சொல்லும் இடம்பெறவில்லை. ஏழைகளின் பொருளாதாரத்தேவைகளையோ தாழ்த்தப்பட்டோரின் சமூகச்சமத்துவத்தையோ எதிர்கொள்ளும் அறிகுறி இல்லை.

இந்தியாவின் பல்வேறு வட்டாரங்களில் வழங்கும் உள்ளூர்க்கலைகளையும் பண்பாடுகளையும் பேசவில்லை. உயர்த்தப்பட்டோரின் பெருமையையே இந்தியப்பெருமை என்ற பெயரில் இந்தியாவின் எல்லாப்பிள்ளைகளுக்கும் இது கற்பிக்கப்போகிறது.

பழங்காலத்தில் இந்துநெறிகள் என்ற பெயரில் இந்திய மக்களுக்கு கற்பிக்கப்பட்ட காவியங்கள், புனைவுகள், கதைகள் ஆகியவையும் வேதங்கள் உட்பட்ட ஆன்மீக நூல்களும் மூடநம்பிக்கைகள் நிறைந்தவை. உயர்த்தப்பட்டோர் (அதாவது சமூகத்தில் தங்களை உயர்ந்தவர்களாக அறிவித்துக்கொண்டவர்கள்) இவற்றை புனிதமானவை என்று சொல்லி தாழ்த்தப்பட்டோர் அவற்றில் கேள்விகளை எழுப்பாத வகையில் அவர்களை ஒடுக்கி

வைத்திருந்தனர். இதுவே இந்திய மையமான கல்வி. இதையே தேகதி இன்றும் தொடர விரும்புகிறது.

இவ்வாறான கல்வி இப்போதிருக்கும் சமூக ஏற்றத்தாழ்வுகளை மாற்றாது. மாறாக இவ்வாறான பெருமை இல்லாத மற்ற சமூகங்களிலுள்ள பிள்ளைகளின் மனங்களில் முரண்பாடுகளை உண்டாக்கும். அவர்கள் இவ்விதமான கல்வியை தங்கள் வாழ்க்கைக்கு தொடர்பில்லாததாக காண்பார்கள். எனவே, அவர்களுக்கு கல்வி மீதும் அது கற்பிக்கும் பண்பாட்டின் மீதும் வெறுப்பே ஏற்படும். இதனால் சமூகப் பிளவுகள் மேலும் விரிவடைவன.

## ஒற்றை அடையாளம்

இந்தியா ஒரு நாடாக இருக்கவேண்டுமெனில், அது ஒற்றைப்பண்பாடும் ஒற்றை அடையாளமும் ஒற்றை மொழியும் உள்ள நாடாக வேண்டும் என்ற அடிப்படையில் இந்தியாவின் நடுவணரசுகள் செயலாற்றி வருவதை நாம் அறிவோம். அண்மையில் நாடெங்கும் ஒரே வரி என்ற கொள்கையை சட்டமாக்கி வரிவிதிக்கும் உரிமையை மாநிலங்களிடமிருந்து பிடுங்கிக்கொண்டது நமக்கு இன்னும் மறக்கவில்லை. நிதிபெற மையத்திடன் கையேந்தி நிற்கவேண்டிய நிலையில் மாநிலங்கள் இருக்கின்றன. இதே நிலையை கல்விக்கும் கொண்டுவர மையம் விரும்புவதில் வியப்பில்லை. கல்வியில் முழு அதிகாரத்தை பெற்றால் பிறகு

நடுவணரசை நடத்தும் உயர்சாதி இந்துக்கள் தங்கள் பண்பாட்டையும் விழுமங்களையும் மாணவர்களுக்கு தடையின்றி ஊட்டலாம். மற்ற சாதியினரையும் மதத்தினரையும் அடக்கியே வைத்திருக்கலாம்.

இந்தியாவில் பலவிதமான மக்கள் வாழ்வது நடுவணரசுக்கு தெரியாமலா இருக்கும்? ஆனால், அந்த உண்மையை மறுத்து, கல்வியின்மூலம் ஒரு குறிப்பிட்ட வாழ்க்கைமுறையை மக்கள்மீது திணிக்க முயல்கிறது. இந்த அடிப்படையிலான கல்வியின் விளைவு மேற்சாதி இந்து ஆண்கள் கீழ்ச்சாதியினர்மீதும் மற்ற மதத்தினர்மீதும் பெண்கள்மீதும் ஏழைகள்மீதும் சிற்றூர்வாசிகள்மீதும் ஆதிக்கஞ்செலுத்துவதிலே முடியும். தொன்மையான இந்திய மரபு என்று இவர்கள் அழைக்கும் வாழ்க்கைமுறை அதையே

செய்துவந்திருக்கிறது.

ஒற்றைப்பண்பாடும் ஒற்றையடையாளமும் ஒற்றைமொழியும் இந்திய ஒருமைப்பாட்டுக்கு அவசியம் என்று சிலர் வாதிடலாம். ஆனால் அது உண்மையன்று. நாட்டின் பாதுகாப்புக்கும் பொருளாதார முன்னேற்றத்துக்கும் எல்லா சமூகத்தினரும் எல்லா மொழியினரும் எல்லா மதத்தினரும் ஒற்றுமையாக செயலாற்றவேண்டும் என்பது உண்மை. ஒரே மத்ததினரோ ஒரே மொழியினரோ மட்டுமே ஒற்றுமையாக செயலாற்ற இயலும் என்பது உண்மையன்று.

ஒவ்வொரு இந்தியக்குடிமகரும் இரட்டை அடையாளமுள்ளவர். ஒன்று இந்தியன் என்பது, மற்றொன்று அவரது மாநில அடையாளம். இதன்படி அவர் ஒரு மராட்டியராகவோ வங்காளியாகவோ மலையாளியாகவோ தெலுங்கராகவோ

இருக்கலாம். இதனாலே இந்தியா விடுதலைபெற்றபோது மொழியடிப்படையான பல மாநிலங்களாலான ஒரு கூட்டுவ ஆட்சிமுறையை நிறுவினர் சான்றோர். இந்திய மக்களில் ஆண்களும் பெண்களும் இருப்பதுபோலவும் சிறுவர்களும் முதியோரும் இருப்பதுபோலவும் தெலுங்கரும் தமிழரும் இந்தி பேசுவோரும் இருக்கின்றனர்.

உண்மையில் ஒவ்வொரு இந்தியருக்கும் பல அடையாளங்கள் உள்ளன. ஒரு பொருளுக்கு தோற்றம், வடிவம், அளவு, நிறம், சுவை, மணம் போன்ற பல பண்புகள் இருப்பதுபோல், ஒருவருக்கு நாடு, மாநிலம், சாதி, மதம், மொழி போன்ற பல அடையாளங்கள் இருக்கின்றன. ஒரு பொருளுக்கு ஒரு பண்பே இருக்கவேண்டும் என்பது மடத்தனமன்றோ? இதையே இந்திய நடுவணரசு செய்துகொண்டிருக்கிறது.

இந்திய மக்கள் அந்த மடத்தனத்தை அமைதியாக ஏற்றுக்கொண்டிருக்கின்றனர். சாதி, மதம், மொழி போன்ற அடையாளங்கள் கெட்டவை எனில், இந்தியன் என்ற தேசிய அடையாளம் மட்டும் ஏன் தனித்து நிற்கிறது? அது மட்டும் ஏன் உயர்வானது? எல்லா நாட்டினரும் ஒற்றுமையாக உலகில் வாழும் நிலையை நோக்கி நாம் பயணிக்கவேண்டாமா? இந்தியன், அமெரிக்கன், நிப்போனியன், பாகிசுத்தானியன் போன்ற பிரிவினைகள் ஏன்? ஒவ்வொரு மனிதருக்கும் பல அடையாளங்கள் இருப்பது தெளிவு. இந்தியன் என்பது ஒருவரின் நாட்டு அடையாளம். தமிழ் என்பது ஒருவரின் தாய்மொழிக்கான அடையாளம். இந்து என்பது ஒருவரின் மத அடையாளம். இந்த அடையாளங்களால் மக்களில் உயர்வுதாழ்வை காண்பதே

தவறானது. ஒரு மொழியையோ ஒரு பண்பாட்டையோ அனைவர்மீதும் திணித்து மற்ற மொழிகளையும் பண்பாடுகளையும் அழிப்பது சமூகத்துக்கு எதிரான செயல். இதற்கு கல்வியை ஒரு ஆயுதமாக பயன்படுத்துவது மன்னிக்கவியலாதது.

இந்தியாவைப்போன்ற பன்மயமான நாடு உலகில் வேறு எதுவும் இல்லை. மொழி, பண்பாடு, மத நம்பிக்கை, வரலாற்றுச்செறிவு போன்றவற்றால் மிகவும் வேறுபட்ட மக்கள் இந்தியாவில் வாழ்கிறார்கள். வேறுபட்ட மனிதர்கள் ஒரே நாடாக ஒற்றுமையாக வாழ்வதே இந்தியாவின் சிறப்பு. 'பன்மயத்திலும் ஒற்றுமை' என்பதே இந்தியாவின் சொலவமாக வேண்டும். இதுவே இந்தியாவின் தனித்துவமான பண்பு. இதுவே வேறு எந்த நாட்டுக்கும் இல்லாத ஒருத்துவமான பண்பு. இதுவே இந்தியாவின்

பெருமை. இந்த பன்மயத்தையே இந்தியா கொண்டாடவேண்டும். இந்தியாவின் பல பாகங்களும் வெவ்வேறு வகையான இசை, நடனம், கலைகள் போன்றவற்றில் சிறந்து விளங்குகின்றன. உண்மையான கல்வி இவையெல்லாவற்றையும் போற்றக்கூடியதாய் இருக்கவேண்டும். இவற்றுள் ஒன்றை தேர்ந்தெடுத்து அதை இந்தியப்பண்பாடாக பரப்புரைப்பது இந்தியாவின் அடிப்படையையே அவமானப்படுத்துகிறது.

# கல்வியில் மாநிலங்களின் பங்கு

சமூக அடிப்படையான கல்வி சமூகத்தின் பன்மயத்துக்கு உகந்தவாறு இருக்கவேண்டும் என்பது தெளிவு. அதாவது எல்லாருக்கும் ஒரே விதமான கல்வி என்பது பொருந்தாது. ஒவ்வொரு வட்டாரத்தினருக்கும் அவர்களது சமூகத்துக்குத்தொடர்பான கல்வியை வழங்கவேண்டும். ஒவ்வொருவரும் அவரவர் தாய்மொழியின் இலக்கியங்களை கற்கவேண்டும். வட்டாரக்கலைகளை கற்கவேண்டும். முக்கியமாக அந்த வட்டாரத்தில் நிலவும் சிக்கல்களையும் தேவைகளையும் எதிர்கொள்வதாக இருக்கவேண்டும்.

இதற்கிணங்க, ஒவ்வொரு மாநிலத்திலும் கவாபமாம (கல்விக்கும் ஆராய்ச்சிக்கும் பயிற்சிக்குமான மாநிலமன்றம்) என்ற

அமைப்பு இருக்கிறது. இந்த மன்றம் மாநிலத்திலுள்ள பள்ளிகளுக்கான பாடத்திட்டங்களை வடிவமைத்து பாடநூல்களை எழுதி வழங்கி, தேர்வுகளையும் நடத்திவந்திருக்கிறது.

தேகதி இந்த நிலையை மாற்றுகிறது. இந்தியாமுழுவதற்கும் ஒரே பாடத்தொகுப்பு, ஒரே பாடநூல், ஒரே தேர்வு என்பனபோன்ற கருத்துருகளை புகுத்தி நடைமுறையாக்குகிறது. கவாமதேமவின் பாடத்திட்டத்தையும் பாடநூல்களையுமே நாடுமுழுவதும் பின்பற்றச்செய்கிறது. இவ்வாறு செய்யும்போது மாநிலங்களின் மொழிகளையும் தனித்துவங்களையும் அழித்து ஆட்சியிலுள்ள உயர்சாதி இந்துக்கள் இந்தியப்பெருமையாக கருதும் வேதப்பண்பாட்டை பாடங்களில் புகுத்துவது அவர்களுக்கு எளிதாகிறது. இது சமூக

அடிப்படையான கல்விக்கு எதிரானது. ஆதிக்கவாதிகளின் கல்வி முறை.

முன்னேற்றமடைந்த நாடுகள் மையமகன்ற கல்வியை மேற்கொள்கின்றன. சான்றாக, அமெரிக்காவும் இந்தியாவைப்போல் பல மாநிலங்களின் கூட்டுவத்தால் ஏற்பட்ட நாடு. இங்கு கூட்டுவரசு நாடு முழுவதும் பின்பற்ற வேண்டிய கல்விக்கொள்விதிகளை மட்டும் வெளிக்கோடிடுகிறது. அந்த கொள்விதிகளுக்கிணங்க கல்வித்தொகுப்பை இயற்றுவதும், பாடத்திட்டங்களை அமைப்பதும், கற்றலின் விளைவுகளை மதிப்பிடுவதும் மாநிலங்களின் பொறுப்புகள். மேலும், பல மாநிலங்களில் பள்ளி மாவட்டங்கள் உள்ளன.

இந்தியாவின் அரசிலக்கணமும் கல்வியை மாநிலங்களின் பொறுப்பிலே விடுகிறது. அரசிலக்கணத்தின் ஒரு

பகுதியான ஏழாம் துணைப்பட்டியலில் உடனடப்புப்பட்டியல் எனப்படும் ஒரு பட்டியல் இருக்கிறது. இது நடுவணரசுக்கும் மாநிலங்களுக்கும் பொதுவான 47 உருப்படிகளை பட்டியலிடுகிறது. கல்வி இந்த பட்டியலிலே இருக்கிறது. நாடுமுழுவதும் ஒரே விதமான கல்வியை பின்பற்றாமல் கல்வியில் நடுவணரசுடன் மாநில அரசுகளும் பங்கேற்கவேண்டும் என்கிறது. ஆனால் மைய அரசு தேகதியின்மூலம் இந்த கொள்கையை நேரடியாக மீறியிருக்கிறது. இது இந்திய மக்களுள் பெரும்பான்மையோருக்கு தெரியவில்லை. ஏனெனில் நடுவணரசு இந்த கல்விக்கொள்விதியை மக்களுக்கு தெளிவாக தெரிவிக்காமலும் அறிஞர்கள் கருத்துரைக்க போதுமான வாய்ப்புகளையோ நேரத்தையோ தராமலும் மிக விரைவாக செயலாக்கிவிட்டது. நடுவணரசு அதிக உரையாடல்கள் இல்லாமல்

விரைவாக செயலாக்கிய மற்றொரு திட்டம் மருத்துவ நுழைசேர்ப்புக்கான நீட்டுத்தேர்வு எனப்படும் நுழைவுத்தேர்வாய்வு. இது நாடுமுழுவதும் பெரும் பரபரப்பை ஏற்படுத்தினாலும், தமிழ்நாட்டில் அதுவரை இருந்த ஒரு சிறந்த அமைப்பை தலைகீழாக திருப்பிப்போட்டது. அதுவரை தமிழ்நாட்டுத்திட்டத்தில் கல்விகற்ற மாணவர்கள் முன்னறிவிப்பின்றி நடுவணரசின் பாடத்திட்டத்தின் அடிப்படையிலான இந்த நுழைவுத்தேர்வை எழுதவேண்டிய தேவை ஏற்பட்டது. இதனால் தமிழ்நாட்டின் கல்வியமைப்பில் அதிக மதிப்பெண்களை பெற்றிருந்த மாணவர்களும் நீட்டுத்தேர்வில் குறைந்த மதிப்பெண்களை வாங்கி மருத்வதுப்படிப்பின் வாய்ப்பை இழந்தார்கள்.

இவ்வாறான மாணவர்களுள் அனிதா

என்பவரும் ஒருவர். இவரின் பெற்றோர் தாழ்த்தப்பட்ட சாதியைச்சேர்ந்த ஏழைகள். இவர் பன்னிரண்டாம் வகுப்பில் 1200க்கு 1176 மதிப்பெண்களை வாங்கியிருந்தார். ஆனால் 2017ஆம் ஆண்டின் நீட்டில் இவர் 720க்கு 86 மதிப்பெண்களை பெற்றார். அந்த அளவுக்கு நீட்டின் தேர்வுமுறை வேறுபட்டிருக்கிறது. தாழ்த்தப்பட்ட சாதியினருக்கான இடவொதுக்கீட்டிலும் 2018ஆம் ஆண்டுக்கான மருத்துவப்படிப்பில் அவருக்கு நுழைசேர்வு கிடைக்கவில்லை.

நீட்டின் அடிப்படையில் நுழைசேர்ப்பது சிற்றூரிலுள்ளவர்களுக்கும் தாழ்த்தப்பட்டவர்களுக்கும் ஏழைப்பிள்ளைகளுக்கும் எதிராக செயலாற்றுகிறது என்று இவரும் மற்றவர்களும் வாதிட்டதை இந்தியாவின் உச்சநீதிமன்றம் ஏற்காமல் மறுத்தபின் இவர்

தற்கொலைசெய்துகொண்டார்.
நீட்டுடன் தொடர்பான இதுபோன்ற தற்கொலைகள் இன்னும் தொடர்கின்றன (கார் 2021). இது தமிழ்நாட்டில் அதிகமாக நடைபெறுகிறது.
இந்தியாவிலுள்ள வளமான பண்பாடுகளின் பன்மயத்தையும் விழுமங்களையும் எதிரொளிக்கக்கூடிய ஒரே பாடத்தொகுப்பை யாரும் உருவாக்க இயலாது. நடுவணரசு அவ்வாறு செய்ய முயல்வது போலிப்புனிதமான ஒரு தேசியத்தின் நோய்க்குறி. ஒரு உயர்த்தப்பட்ட வகுப்பினர் தங்களை இந்தியச்சமூகம் என்று அழைத்துக்கொண்டு ஒற்றை அடையாள, ஒற்றை பண்பாட்டு, ஒற்றை மொழியான ஒரு நாட்டை கனவுகாண்கிறார்கள். பள்ளிப்பிள்ளைகளின்மீது இந்த கனவை திணிக்கும் நோக்கம் தேகதியின்

குறிக்கோளுரையில் தெளிவாக தெரிகிறது. இதன் ஆபத்தான பின்விளைவுகளை இந்திய மக்களும் சமூக நலனில் அக்கறையுள்ள அறிஞர்களும் உணரவேண்டும்.

கல்வி அறிவாளிகளின் கட்டுப்பாட்டில் இருக்கவேண்டும். அரசியலாளரின் கட்டுப்பாட்டில் இருக்கக்கூடாது.

# 8. மக்களாட்சியக்கல்வி

இந்த படலத்தில் தமிழ்நாட்டுக்கான ஒரு கல்விமுறையை விவரிக்கிறேன். இது அமெரிக்காவில் நான் கண்ட கல்விமுறையின் அடிப்படையிலும் மாணவர்களுக்கு நன்மையளிக்கும் கொள்கைகளின் அடிப்படையிலும் எழுந்தது. இதை இந்தியாவின் ஒவ்வொரு மாநிலத்துக்கும் சிறு மாற்றங்களுடன் தகவமைத்துக்கொள்ளலாம். சொல்லப்போனால், உலகின் கல்வியமைப்பு இக்கால வாழ்க்கைமுறையின் ஒப்பளவில் மிகவும் பழமையானது. அது வரலாற்றில் படிமலர்ந்து நாம் இன்று காணும் நிலையை வந்தடைந்திருக்கிறது. இங்கு நான் விவரிப்பது எதிர்காலத்தை நோக்கியது. இப்போது கல்வி இருக்கும் நிலையை மறந்துவிட்டு இன்றைய தொழினுட்ப

வாழ்க்கைமுறையின் அடிப்படையில் ஒரு புதிய கல்விமுறையை வடிவமைத்தால் அது எவ்வாறு இருக்கும் என்று சிந்திப்போம். இப்போதிருக்கும் நிலையிலிருந்து நான் இங்கு விவரிக்கும் நிலையை படிப்படியாகவே வந்தடையலாம். எனினும், ஒரு நல்லியல்பான இலக்கை நம் குறிக்கோளாக வைத்துக்கொண்டாலே நாம் பயணிக்கவேண்டிய திசையை அறிவோம். இல்லாவிட்டால் திசையறியாமல் அலைக்கழிவோம்.

# சிந்தனையை தூண்டல்

கல்வியின் நோக்கம் மாணவர்களை (மக்களை) சிந்திக்கவைப்பது என்றும் அவர்களின் அறியியன்மைக்கு பயிற்சியளித்து அறிவை வளர்ப்பது என்றும் முன்பு கண்டோம்.

மக்கள் தம் வாழ்க்கையில் எழும் சிக்கல்களை சமாளித்து தீர்வுகாணும்படி கல்வி அறியியன்மைக்கு பயிற்சியளிக்கவேண்டும். சான்றாக, கல்வியறிவில்லாத ஏழைகள் தங்களுக்கு பணம் தேவைப்படும்போது வட்டிக்கு கடன்வாங்கி பின்பு துயரத்துக்குள்ளாவதை நாம் வெகுவாக காண்கிறோம். ஏழைகளின் உழைப்புக்கு தகுந்த ஊதியம் கிடைக்கவில்லை என்பது ஒரு பக்கம் இருக்கட்டும். அது சமூகச்சிக்கல். அதையும் நாம் எதிர்கொள்ளவேவேண்டும்.

ஆனால், பொதுவாக, தம் வருமானத்துக்குள் எவ்வாறு ஒரு வாழ்க்கைமுறையை அமைத்துக்கொள்வது என்பதும் எதிர்பாராத செலவுகளை எதிர்கொள்ளும் ஏற்பாடுகளும் ஒவ்வொரு மனிதருக்கும் தெரிந்திருக்கவேண்டும். தம் அன்றாட வாழ்வுக்கான நிதித்திட்டத்தை அமைக்கும் திறமை ஒவ்வொருவருக்கும் கட்டாயத்தேவை. இந்த நிதித்திட்டத்தின்படி கடன்வாங்க முடிவுசெய்தால், வட்டிவீதம் எவ்வளவு, நாளடைவில் எவ்வளவு வட்டியை செலுத்தவேண்டியதிருக்கும், நம் வருமானத்தால் அதை செலுத்த இயலுமா என்பதுபோன்ற கேள்விகளுக்கு விடைகளை வகுத்தபின்பே கடன்வாங்க துணியவேண்டும். வாழ்வில் ஏற்படும் இதைப்போன்ற பல சிக்கல்களை தீர்க்கும் திறமையை கல்வி வழங்கவேண்டும்.

அதாவது, கல்வி நம் வாழ்க்கையை சிறந்த வழியில் செலுத்த தேவையான அறிவை வழங்கவேண்டும். வேலைபெறுவதே கல்வியின் நோக்கமாயிருந்தால், அது வேலைவழங்குவோரின் வசதிக்காகவே இருக்கும். அது நமக்கு பயனளிக்காது. இதனாலே ‘ஏட்டுச்சுரைக்காய் கறிக்குதவாது’ என்பதுபோன்ற பழமொழிகள் உண்டாகியிருக்கின்றன.

மற்றவர்களை அறிவாளிகளாக கருதி அவர்கள் சொல்வதற்கு கீழ்ப்படியும் மனப்பான்மையை இந்திய மரபு உருவாக்கி மக்களை அதற்கு பழக்கியிருக்கிறது. இந்த மற்றவர்கள் உயர்சாதியினராகவோ, ஆசிரியர்களாகவோ, படித்தவர்களாகவோ இருக்கலாம். அறிவாளிகள் சொல்வதை கேட்பது நன்று. ஆனால் அவ்வாறு கேட்டபின் கேட்ட செய்தியை தன் அறியியன்மையால்

சிந்தித்து ஏற்பதா விடுவதா என்று முடிவுசெய்யவேண்டும். அதன்பிறகே அது அறிவாகிறது.

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்

மெய்ப்பொருள் காண்ப தறிவு (திருக்குறள் 422)

ஆசிரியர் சொல்வது நமக்கு புரியாவிட்டாலோ அது தவறாக தோன்றினாலோ நாம் கேள்விகளை எழுப்பலாம். இவ்வாறு கேள்விகேட்டு தெரியாததை தெரிந்துகொள்வது ஆசிரியரையோ பெரியோரையோ அவமதிப்பதாக ஆகாது.

‘நான் சொல்வது சரி; இது புனிதமானது; இதில் நீ கேள்வியெழுப்பக்கூடாது’ என்பது முழுவதிகாரிகளின் நோக்குநிலை என்றும் அது பாசிசம் என்றும் முன்பு பார்த்தோம். அது சமூகத்தை தங்கள்

கட்டுப்பாட்டுக்குள் வைத்து ஆதிக்கஞ்செலுத்த விரும்புவோரின் கூற்று. சமூகக்கட்டுப்பாடு சமூகத்தின் எல்லாப்பகுதியினரும் சேர்ந்து பின்பற்றுவதாக இருக்கவேண்டும்; ஒரு முழுவதிகாரியோ ஆதிக்க வகுப்பினரோ செலுத்துவதாக இருக்கக்கூடாது.

சாதகம்பார்த்தல், சாமிகும்பிடல், பூசையிடல், பேயோட்டல் போன்ற செயல்கள் நம்பிக்கையின் அடிப்படையானவை என்கிறோம். நம்பிக்கை என்பது என்ன? வேறு யாரோ சொன்னதை நம் மனத்தால் அலசிப்பார்க்காமல் நம்புகிறோம் என்றன்றோ பொருள்! இவற்றுள் ஒவ்வொன்றைப்பற்றியும் சிந்திக்கும்போது அவற்றுக்கான எந்த அடிப்படையையும் மனித மனம் காணவியலாது. மூடநம்பிக்கைகள் நிறைந்த சமூகத்தில் சிந்தனைத்திறன் குறைவாயிருப்பதால் அதனால் ஆக்குமையும்

குறைவாயிருந்து அறிவியலாராய்ச்சியும் தொழினுட்பமுன்னேற்றமும் பொருளாதாரமேம்பாடும் குறைவாயிருக்கின்றன.

கல்வி மக்களின் மூடநம்பிக்கைகளை களைந்து சிந்தனைத்திறனை வளர்ப்பதாயிருக்கவேண்டும்.

## கல்வியில் தொழினுட்பம்

இப்போது நாம் மின்காலத்தில் வாழ்கிறோம். மிகவும் ஏழையானவர்களைத்தவிர, கணினியும் இணையமும் அலைபேசியும் பெரும்பாலும் எல்லா வீடுகளிலும் உள்ளன. நம் கைகளிலுள்ள அலைபேசிகளுக்கு பல்வேறுவிதமான மற்ற பயன்களும் இருக்கின்றன. அவற்றில் இசைகேட்கலாம், படம்பார்க்கலாம், படமெடுக்கலாம், விளையாடலாம், உரையையும் ஒலியையும் ஒளிப்படங்களையும் பிறருக்கு அனுப்பலாம், பிறரிடமிருந்து பெறலாம். இந்த பயன்மிகளெல்லாம் வெறும் பொழுதுபோக்குக்காக மட்டுமல்லாமல் கல்விக்கும் ஆராய்ச்சிக்கும் பயன்படுகின்றன. கற்றறிஞர்களும் ஆராய்ச்சியாளர்களும்

தங்களுக்குள் கலந்துரையாடவும் கருத்துகளை பகிர்ந்துகொள்ளவும் பயன்படுத்துகிறோம்.

பிள்ளைகள் இந்த கருவிகளுடனே பிறந்துவளர்வதால் அவர்களுக்கு இந்த தொழினுட்பங்கள் உலக வாழ்வின் இயல்புகளாக தோன்றுகின்றன. நமக்கு தாளில் எழுதுவது எவ்வாறோ அவ்வாறே பிள்ளைகளுக்கு ஒரு கணினியையோ ஒரு அலைபேசியையோ பயன்படுத்துவது. இவ்வாறிருக்கும்போது, பிள்ளைகளின் அறிவை வளர்க்க இந்த கருவிகளை சிறந்த வழிகளில் பயன்படுத்தலாம்.

பள்ளிக்குச்செல்லும் முன்பே பிள்ளைகள் தொலைக்காட்சியை பார்க்கிறார்கள். அலைபேசியில் விளையாடுகிறார்கள். அவர்களுக்கு ஆர்வமான இந்த ஊடகங்களில் விளையாட்டுடன் சேர்ந்து அறிவூட்டலும்

இருந்தால் அவர்கள் அலுப்படையாமல் அறிவை பெறுவார்கள். விளையாட்டுக்கும் கல்விக்கும் வேறுபாடு இல்லாத வகையில் இந்த கல்விப்பயன்மிகளை வடிவமைக்கவேண்டும். அப்போது கல்வி அவர்களுக்கு விளையாட்டின் ஒரு இயல்பான தொடர்ச்சியாகும். இதைப்போலவே எழுதப்படிக்க தெரிந்த பிள்ளைகளை அவர்களுக்கு பிடித்தமான அறிவுநூல்களை படிக்க ஊக்குவிக்கவேண்டும்.

என் பெற்றோர் பள்ளிக்குச்சென்றபோது மணலில் விரலால் எழுதிப்பழகினார்கள்ளாம். நான் பள்ளியில் சிறுபலகையில் எழுதுகுச்சியால் எழுதினேன். என் பிள்ளைகள் தாளில் பேனாவால் எழுதிப்பழகினார்கள். வருங்காலத்தில் மக்கள் கணினியிலே எழுதுவார்கள். தாள் இப்போதே வழக்கொழியத்தொடங்கிவிட்டது.

அறிவு வாய்வழியாக கடத்தப்பட்ட ஒரு காலம் இருந்தது. பிறகு பனையோலையில் எழுதத்தொடங்கினார்கள். தாளை உருவாக்கியபின் ஓலைச்சுவடிகள் வழக்கொழிந்தன. இப்போது மின்னூடகங்கள் தாளை கீழொதுக்குகின்றன. இந்த போக்குடன் ஒத்துப்போக, கல்வியமைப்பிலிருந்து தாளை நீக்கிவிட்டு எல்லா கல்விப்பொருள்களையும் தேர்வுமுறைகளையும் மின்வடிவில் வழங்கவேண்டும். இதை படிப்படியாகவே அடையவேண்டியதிருக்கலாம். ஆனால் இதுவே இறுதிக்குறிக்கோளாகவேண்டும்.

பிள்ளைகளை முதலில் வாசிக்கவும் எழுதவும் அறிமுகமாக்கும்போது, அவர்களுக்கு மின்கருவிகளை வழங்கவேண்டும். ஏழைப்பிள்ளைகளுக்கு அரசு இலவசமாக வழங்கவேண்டும். இந்த மின்கருவிகள்

மடிக்கணினியின் எல்லா பண்புக்கூறுகளும் இல்லாத எளிய அமைகருவிகளாயிருக்கலாம். இந்த கருவிகளில் மாணவர்கள் எழுத்துகளை இனங்காணவும் எளிய சொற்களை வாசிக்கவும் கற்பிக்கவேண்டும். அடுத்த கட்டத்தில், எழுத்துகளையும் இந்த சொற்களையும் தட்டச்சி பழகவேண்டும்; கையால் எழுதி பழகவேண்டியதில்லை. அவர்கள் தொடக்கத்திலிருந்தே தமிழ்99 என்ற தட்டுப்பலகையில் பழகவேண்டும். நுண்ணுந்துவத்திறமை கையால் எழுதும்போது மேம்படுகிற அதே அளவுக்கு தொட்டச்சும்போதும் (தொடுதட்டச்சும்போதும்) மேம்படுகிறது. இதில் ஒரு இடர்ப்பாடு என்னவென்றால், ஆசிரியர்களுக்கும் கல்விக்கொள்விதிகளை உருவாக்குவோருக்கும் தொட்டச்சுவதில், முக்கியமாக தமிழில் தொட்டச்சுவதில்,

பழக்கமில்லை. அவர்கள் தங்கள் ஆசிரியர்கள் அவர்களுக்கு கற்பித்ததையே பிள்ளைகளுக்கு கற்பிக்கிறார்கள். இவ்வாறிருந்தால் உலகம் உருப்... முன்னேறுமா?

அடுத்த கட்டத்தில், கணினியையும் மென்பொருட்டொழினுட்பத்தையும் பயன்படுத்தி வாசித்தல், எழுதுதல், பேசுதல், எண்கணக்கிடல் போன்ற திறமைகளை வளராக்கவேண்டும். வேற்றுக்கால கற்றல், மாணவரின் வேகத்திலே கற்றல், தொலைகற்றல், மிக முக்கியமாக பிள்ளைகளுக்கு ஆர்வமான கற்றல் ஆகியவை எண்ணிமத்தொழினுட்பத்தால் சாத்தியம்.

மாணவர்களுக்கு இலக்கணத்தில் வழிகாட்டவும் பிழைதிருத்தவும் தேவையான தொழினுட்பங்களை வளராக்கவேண்டும்.

அப்போது ஆசிரியர் மாணவர்கள் எழுதிய உள்ளடக்கத்தில் கவனஞ்செலுத்தி பின்னூட்டத்தை வழங்கலாம்.

எண்ணிமத்துக்கு மாறுவதே எதிர்காலப்போக்கு. இவ்வாறான அமைப்பு உலகில் எங்கும் நடைமுறையில் இப்போது இல்லை என்பது உண்மை. தமிழ்நாடு மற்றவர்களை பின்பற்ற காத்திராமல் முன்செல்லலாமே!

# திணிப்பற்ற கல்வி

இப்போதிருக்கும் கல்வியமைப்பில், பிள்ளைகள் படிப்பு தங்கள்மீது திணிக்கப்படுவதாக காண்கிறார்கள். ஒருமுறை நான் தொடர்வண்டியில் பயணித்தபோது உடன்பயணித்தவர்களுள் ஒரு பள்ளிச்சிறுவனும் அவன்பெற்றோரும் இருந்தனர். அவனது கையில் ஒரு ஆங்கில நூல் இருந்தது. அது பாடநூலன்று, கதைநூல். பலமணிநேரம் ஆகியும் அவன் அந்த நூலை திறந்து நான் பார்க்கவில்லை. பிறகு, “தம்பி, நல்ல புத்தகத்தை வைத்திருக்கிறாயே, அதிலிருந்து ஏதாவது ஒரு கதையை படித்துக்காட்டேன்” என்றேன். அவன் முகம் சுருங்கிவிட்டது. அவனின் அப்பா சிரித்து, “வீட்டில் ஒரு தாத்தா படி படியென்று தொல்லைப்படுத்துவதுபோல்

இங்கும் ஒரு தாத்தா வந்துவிட்டார்” என்றார். அப்போதே புரிந்துகொண்டேன். பையன் தன்னார்வத்தினால் நூலை கொண்டுவரவில்லை. அது அவனின் தாத்தா திணித்தது.

இவ்வாறில்லாமல், ஒரு நூலை எடுத்து வாசித்து தகவல்களை அறிந்துகொள்வதிலும் கதைகளை சுவைப்பதிலும் தாமாகவே ஆர்வமடையும் வகையில் பெற்றோர்களும் ஆசிரியர்களும் பிள்ளைகளை திசையமைக்கவேண்டும்.

நான் பள்ளிமாணவனாயிருந்தபோது இவ்வாறு படிப்பதில் மிகவும் ஆர்வமாயிருந்தேன். அக்காலத்தில், நூல்களை விலைகொடுத்து வாங்கியோ நூலகத்திலிருந்து எடுத்தோ மட்டுமே படிக்கவியலும். இப்போதெல்லாம் எங்கும் எப்போதும் தேவையானபோது

நூல்களை பதிவிறக்கி அலைபேசியில் படித்துக்கொள்ளும் வசதிகள் இருக்கின்றன. எங்களுக்கு ஆர்வமிருந்தது, வசதியில்லை; இப்போது வசதியிருக்கிறது, ஆர்வமில்லை.

ஆர்வமிருந்தாலும் பெற்றோர் ஊக்குவிக்காமல் தடுக்கவும்செய்கிறார்கள். மற்றொருமுறை ஒரு பையன் “கதிரவனுக்கும் மற்ற வான்பொருள்களுக்கும் செல்லாமல் அவை இருக்கும் தொலைவுகளை இங்கிருந்தே எவ்வாறு அளவிடுகிறார்கள்?” என்று கேட்டான். அவன் அரைகுறைத்தமிழில் சொன்னதை முற்றிலும் தமிழாக்கி நான் இங்கு தருகிறேன்.

பதிநான்கு வயதான ஒரு பிள்ளையிடமிருந்து எவ்வளவு ஆழ்ந்த கேள்வி! நான் “நோக்குமயக்கம் என்ற ஒரு முறையால் அளவிடுகிறார்கள்” என்ற சொல்லி, நோக்குமயக்கம் என்பது என்ன என்பதையும்

அது இங்கு எவ்வாறு பயன்படுகிறது என்பதையும் விளக்கினேன்.

அதையடுத்து தொடர்ந்த உரையாடலின்போது, அவன் “தஞ்சைப்பெரியகோவிலின் கோபுரத்தில் கற்களை அடுக்கி உச்சியில் கலசத்தை கவிழ்த்திருக்கிறார்கள். கலசமே கோபுரத்தை உலையாமல் காக்கிறது” என்றான்.

நான் வியப்புடன் “இதையெல்லாம் நீ எப்படி தெரிந்துகொள்கிறாய்?” என்றேன்.

“இணையத்தில் ஆங்காங்கு படித்தே.”

“ஏதும் புத்தகத்தை வைத்திருக்கிறாயா?”

“இல்லை. அப்பா புத்தகம்வாங்கித்தரமாட்டார். பள்ளிப்பாடங்களையே படிக்கவேண்டும் என்பார்.”

“இவற்றையெல்லாம் ஆங்கிலத்தில் படிக்கிறாயா, தமிழிலா?”

“ஆங்கிலத்தில் படித்து தமிழில் புரிந்துகொள்

கிறேன்.”

“கதிரவனின் தொலைவை அளவிடும் முறையை ‘ஒன்று, இரண்டு, மூன்று, முடிவிலி’ என்ற நூலில் சார்சு கேமாவு என்ற ஆசிரியர் எளிய சான்றுகளில் தொடங்கி படிப்படியாக விளக்கியிருக்கிறார். இந்த நூல் தமிழிலும் இருக்கிறது.”

“எனக்கு தமிழ்படிக்க தெரியாது.”

பார்த்தீர்களா கொடுமையை? இவ்வளவு ஆர்வமுள்ள பையனுக்கு பெற்றோர் படிக்க நூல்களை வாங்கிக்கொடுப்பதில்லை. ஆங்கிலப்பள்ளியில் சேர்த்திருக்கிறார்கள். எனினும் இவன் தமிழிலே புரிந்துகொள்கிறானாம். இவன் தமிழ்ப்பையன் என்ற உண்மையை மாற்ற இயலவில்லை. தமிழில் வாசிக்கத்தெரியாது. ஆங்கிலத்தில் பேசத்தெரியாது.

## கட்டற்ற கல்வி

ஒரு குறிப்பிட்ட வயதுள்ள மாணவர்களுக்கு வேறுபட்ட இயற்றிறனும் திறமைகளும் இருக்கலாம். ஆனால் ஒரு வகுப்புக்கு ஒரு ஆசிரியர் கற்பிப்பதால் அந்த வகுப்புக்கான பாடத்திட்டமும் கற்பிக்கும் அணுகுமுறையும் எல்லா மாணவர்களுக்கும் ஒன்றாயிருக்கிறது. கணினியையும் மென்பொருளையும் பயன்படுத்தும்போது, ஒரு மாணவனின் தனிப்பட்ட தேவைக்குத்தக்க கற்பித்தலை தகவமைக்கலாம்.

இன்றைய கல்வி பிள்ளைகளை ஒரு கட்டமைப்புக்குள் மந்தையாக அடைத்துவைத்து பாடங்களை அவர்களுக்குள் திணிக்க முயல்கிறது. பிள்ளைகள் அறிவாளியாவதற்கு குறிப்பிட்ட நான்கு சுவர்களுக்குள் குறிப்பிட்ட நேரம்முதல்

குறிப்பிட்ட நேரம்வரை இருக்கவேண்டியது தேவையில்லை. அவர்களது மனங்களுக்கு எந்த கட்டுப்பாடும் இல்லாமல் வாசிக்கவும் சிந்திக்கவும் வாய்ப்பை வழங்கவேண்டும். இவ்வாறு ஒரு கட்டுப்பாட்டுக்குள் அடைபடுவதை ஒழுக்கமாக நீங்கள் கருதலாம். ஒழுக்கம் என்பது இதுவன்று. தன் செயலுக்கான பொறுப்பை தானே ஏற்று அதற்குரிய நேரத்துக்குள் தவறாமல் தன் விருப்பப்படி செய்வதே ஒழுக்கம். மக்களை ஒரு கட்டத்துக்குள் ஒடுக்கி வைத்திருப்பது ஆதிக்கர்களின் செயல் என்பது இன்னுமா உங்களுக்கு விளங்கவில்லை? முற்காலத்தில் குறிப்பிட்ட இடத்தில் குறிப்பிட்ட நேரத்தில் பிள்ளைகளை திரட்டி பாடஞ்சொல்லிக்கொடுப்பது வசதியாயிருந்திருக்கலாம். ஆனால் அந்த வசதியை ஆதிக்கர்கள் தவறாக

பயன்படுத்தும் வாய்ப்பும் இருக்கிறது. இக்காலத்தில் இதுபோன்ற தேவையற்ற கட்டுப்பாடுகளை நீக்கும் வழிகளை தொழினுட்பம் நமக்கு தருகிறது.

உலகெங்கும் பள்ளிகளிலும் அலுவலகங்களிலும் ஒரு குறிப்பிட்ட நேரத்துக்கு சென்று குறிப்பிட்ட நேரத்துக்கு வீடுதிரும்பும் வழக்கம் இருந்துவருகிறது. 2020ஆம் ஆண்டில் கொவைநோ (கொரோனாவைரசால் ஏற்படும் நோய்) என்ற நோய் உலகெங்கும் இருந்ததால் அது பரவுவதை தடுப்பதற்காக பள்ளிகள் மூடப்பட்டன; பல நிறுவனங்கள் தங்கள் பணிக்குழுவினர்களை வீட்டிலிருந்தே இணையமூலம் வேலைபார்க்க சொன்னார்கள். அவ்வாறு செய்ய இயலாத வேலையுள்ள நிறுவனங்கள் மூடப்பட்டன. மருத்துவமனை போன்ற

கட்டாயத்தேவையான நிறுவனங்கள் மட்டுமே நோய்க் காப்புக்கான முன்னெச்சரிக்கைகளுடன் செயலாற்றின. பிறகு, கொவைநோ முடிந்தபின்னும் பல நிறுவனங்கள் பணிக்குழுவினர் வீட்டிலிருந்தே வேலைபார்ப்பதை அனுமதித்தனர். கொவைநோவால் பணிக்குழுவினர் வீட்டிலிருந்து வேலைபார்த்தபோது அது பணியாளர்களுக்கு மிகவும் வசதியாகவும் வேலையின் பயன்றிறன் குறையாமலும் இருந்ததை இந்த நிறுவனத்தின் மேலாளர்கள் கண்டனர். அதனாலே இந்த ஏற்பாட்டின் தேவை நீங்கியபின்னும் அந்த முறையை தொடர்ந்தனர். கொவைநோ வரும்முன்பே பல நிறுவனங்கள் பணிக்குழுவினர் வேலைபார்ப்பதில் மிகுந்த நெளிவுமையையும் தாராளத்தையும்

வழங்கியிருந்தனர். இவ்வாறான நிறுவனங்கள் மிகவும் வெற்றிகரமாக நடைபெற்றதற்கு கூகிள் ஒரு சிறந்த சான்று. பொதுவாக, கட்டுப்பாடு இல்லாதபோது பணியாளர்கள் தங்கள் ஊக்கத்தாலே செயலாற்றுகின்றனர். இவ்வாறிருக்கும்போது மக்கள் தன்னார்வத்தால் அதிக நேரத்துக்கு வேலைசெய்யும் போக்கையே காண்கிறோம்; வேலை சிறப்பாகவும் நடைபெறுகிறது. இதை கல்விக்கும் நீட்டலாம். மாணவர்கள் பெற்றோருக்காகவோ ஆசிரியருக்காகவோ படிப்பதாக உணராமல், தங்களுக்காக படிப்பதாக உணர்ந்தால், மிகுந்த ஆர்வத்துடன் படிப்பார்கள். தேவையானபோது பெற்றோரும் ஆசிரியர்களும் வழிகாட்டலாம். வழிகாட்டல் என்பது கண்டிப்பதாகவோ தண்டிப்பதாகவோ இருக்கக்கூடாது. ஆர்வமோ ஊக்கமோ

இல்லாதவர்களுக்கு அவற்றை ஊட்டுவது கடினம்.

பிள்ளைகளுக்கு வீட்டிலிருந்தே படிப்பதற்கான வசதிகளும் மென்பொருள்களும் இணையவசதியும் இருக்கவேண்டும். மற்ற பிள்ளைகளுடனும் ஆசிரியருடனும் இடைவினையாற்ற அவர்கள் விரும்பியபோது பள்ளி போன்ற ஒரு பொதுவிடத்துக்கு செல்லலாம். வீட்டில் படிக்க வசதியில்லாத மாணவர்களுக்கு அவர்கள் விரும்பினால் விரும்பும் நேரத்தில் பள்ளிகளில் படிக்க வசதிசெய்துகொடுக்கலாம். சோதனைச்சாலை, பட்டறை, உடற்பயிற்சி போன்ற பயிற்சிகளுக்கும் பள்ளிக்கு செல்லவேண்டியதிருக்கும்.

ஓராண்டுக்குள் ஒரு குறிப்பிட்ட பாடங்களை முடிக்கவேண்டும் என்ற கட்டுப்பாடும்

தேவையில்லை. அதையும் மாணவர்களின் விருப்பத்துக்கும் இயன்மைக்கும் விட்டுவிடலாம். இதனால் விரைவாக முன்னேற இயலும் மாணவர்கள் முன்னேறலாம். வேகங்குறைந்த மாணவர்கள் இகழ்ச்சியுறாமலும் தன்னம்பிக்கையை இழக்காமலும் தங்கள் வேகத்திலே தொடரலாம்.

கல்வி சாதி, மதம், பொருளாதாரம் போன்ற வேறுபாடு இல்லாமல் எல்லாருக்கும் சமமாக கிடைத்தால் மட்டுமே திருவள்ளுவரின் ‘உள்ளத்தனையது உயர்வு’ என்பது நிறைவேறும். சமத்துவமற்ற கல்வி மனிதர்கள் தம் உள்ளத்தின் தன்மைக்கேற்ப முன்னேறுவதை தடுக்கிறது. உள்ளத்தின் தன்மை என்பது அறியியன்மை, திசையமைவு, உள்ளூக்கம் என்று முன்பு பார்த்தோம். ஒரு சமூகத்தின் சிறந்த திறமையானவர்கள் அந்த சமூகத்தின் முக்கியமான பொறுப்புகளில் இருப்பது அந்த சமூகத்தை முன்னேறச்செய்யும்.

இப்போதிருக்கும் நிலையில், பொறுப்பான பதவிகளில் தனியார்ப்பள்ளிகளில் ஆங்கிலவழி கற்றவர்களே

அமர்த்தப்படுகிறார்கள். இந்த பள்ளிகளில் மேன்மட்டத்தினரும் பணக்காரரர்களுமே படிக்கிறார்கள். மேலும், மருத்துவம், பொறியியல் போன்ற துறைகளில் மேற்படிப்புகளுக்கான நீட்டுத்தேர்வு, கூட்டுத்தேர்வு போன்ற தேர்வுகளுக்கான கேள்விகள் மைய அரசின் பாடத்திட்டத்திலிருந்து எடுக்கப்படுகின்றன. இந்த பாடத்திட்டத்தை மேன்மட்டத்தினர் படிக்கும் பள்ளிகளே பின்பற்றுகின்றன.

அப்படியெனில், ஏழைகள் படிப்பதற்கான அரசுப்பள்ளிகளும் மைய அரசின் பாடத்திட்டத்தை பின்பற்றலாமே என்று கேட்கலாம். அப்படிச்செய்தால் கல்வியின் நோக்கம் இந்த தேர்வுகளில் வெற்றிபெறுவதே என்றாகும். மேலும், மைய அரசின் பாடத்திட்டம் இந்தியத்தேசியத்தை வலியுறுத்துவதால் மாநிலங்களுக்கு ஏற்புடையதன்று.

எனினும், நீட்டுத்தேர்வை மைய அரசு முன்னறிவிப்பின்றி புகுத்தியபோது தமிழ்நாட்டரசு தன் பாடத்திட்டத்தை மையப்பாடத்திட்டத்தை ஒட்டி இருக்குமாறு மாற்ற முயன்றது. அதை மிகுந்த அவசரமாக செய்யவேண்டியதிருந்ததால், இந்த முயற்சி வெற்றியடையவில்லை. இதன் விளைவாக, இப்போது தமிழ்நாட்டின் பாடத்திட்டம் இரண்டுங்கெட்டானாக முன்பிருந்ததைவிட மேலும் மோசமாக இருக்கிறது.

கல்வி எல்லாருக்கும் சமமாக கிடைக்கவேண்டும் எனில், பணங்கொடுத்து கல்வியை வாங்கும் நடைமுறை சமூகத்திலிருந்து முற்றிலும் நீங்கவேண்டும். அதாவது தனியார்க்கல்விகள் சமூகத்துக்கு எதிரானவை. அரசு தரமான கல்வியை எல்லாருக்கும் வழங்கவேண்டும். கல்வியின் பாடத்திட்டங்களையும்

பாடநூல்களையும் வகுத்து வழங்கும் பணியை கல்வியாளர்களும் மற்ற அறிஞர்களும் செய்யவேண்டும். அரசின் பங்கு அதற்கான நிதித்திட்டத்தை வழங்குவது மட்டுமே.

சொல்லப்போனால், உலக மக்களனைவரும் இலவசமாக கல்விபெறவேண்டும். உலக வணிக ஒருங்கமைப்பும் உலக வாழ்நல ஒருங்கமைப்பும் இருக்கின்றன. உலக கல்வி ஒருங்கமைப்பு எங்கு?

# முழுமக்கல்வி

கல்விக்கான பாடப்பகுதிகளுள் சில உலகின் எல்லா மக்களுக்கும் பொதுவானவை. வேறு சில அந்தந்த சமூகத்தை சார்ந்தவை. கணிதத்தில் நாம் படிக்கும் கோட்பாடுகளும் தேற்றங்களும் கணக்கீடுகளும் படிக்கும் மக்களை சார்ந்திருப்பதில்லை. மாறாக, வெவ்வேறு மொழிகளை பேசும் சமூகத்தினர் அவரவரது மொழியை முதன்மை மொழியாகவும் மற்ற மொழிகளை வேற்று மொழியாகவும் காண்கிறார்கள். அவர்கள் விரும்பும் வேற்றுமொழிகளை கற்றுக்கொள்ளலாம்.

எல்லா மக்களுக்கும் பொதுவான பாடப்பகுதியை முழுமப்பாடப்பகுதி என்றும் ஒரு குறிப்பிட்ட இடத்தைச்சார்ந்ததை அருகிடப்பாடப்பகுதி என்றும் அழைக்கிறோம்.

கணிதம், அறிவியல், மருத்துவம் போன்றவை முழுமப்பாடப்பகுதிகள். மொழி, பண்பாடு, கலை போன்றவை அருகிடப்பாடப்பகுதிகள். சில பாடப்பகுதிகளில் முழுமப்பகுதியும் அருகிடப்பகுதியும் உள்ளன. பொருளாதாரத்தின் கோட்பாடுகள் முழுமமானது எனினும் ஒரு வட்டாரத்தின் பொருளாதாரம் அருகிடமானது. எல்லார்க்கும் பொதுவான உலகவரலாற்றை அனைவரும் படித்து, நாடுகளின் வரலாற்றை அந்தந்த நாட்டினர் படிக்கிறோம். ஒரு நாட்டின் மாநிலம், மாவட்டாரம் போன்ற ஒவ்வொரு பகுதிக்கும் ஒரு தனிவரலாறு இருக்கிறது. பண்பாட்டிலும் உலகப்பண்பாடு, நாட்டுப்பண்பாடு, மாநிலப்பண்பாடு, மாவட்டப்பண்பாடு என்றவாறு ஒரு விவரமான படிவரிசையை நாம் காணலாம். ஒரே மொழியை பேசும் வட்டாரத்திலும் பல

கிளைமொழிவட்டாரங்களை காணலாம். இசை, நடனம் போன்ற கலைகளில் ஒவ்வொரு வட்டாரத்துக்கும் சிறப்பான ஒரு நடை இருக்கிறது. நடனத்தில் பரதநாட்டியம், குச்சிப்புடி, மோகினியாட்டம், ஒடிசி, கதக்கு, மணிப்புரி, கதகளி, பாலே, பிளமெங்கோ, கபுக்கி, தாங்கோ, பங்கிரா, இரம்பா, சம்பா, சல்சா, சாச்சா போன்ற மிகப்பல வகைகள் உள்ளன.

இந்தியாமுழுவதற்கும் ஒரே கல்வி ஏன் இருக்கவியலாது என்பதை இப்போது நாம் புரிந்துகொள்ளலாம். இந்தியாவுக்கு பொதுவானவை சில பாடப்பகுதிகளே. முழுமப்பாடப்பகுதிகள் இந்தியாவுக்கு பொதுவானவை. இந்தியவரலாறும் இந்தியப்புவியியலும் அவ்வாறே. ஒவ்வொரு மாணவரும் இந்தியவரலாற்றுடன் தன் மாநிலவரலாற்றையும் அருகிட

வரலாற்றையும் படிக்கவேண்டும். இந்தியப்புவியியலுடன் மாநிலத்தின் புவியியலையும் அருகிடத்தின் புவியியலையும் படிக்கவேண்டும். இந்தியப்பண்பாடு என்ற ஒன்று இல்லை. இந்திய மொழி என்ற ஒன்று இல்லை. மைய அரசுகள் இந்தியப்பண்பாடு என்பதையும் இந்திய மொழி என்பதையும் செயற்கையாக உருவாக்குகின்றன. ஏதோவொரு மொழியை எடுத்து அதை இந்திய மொழி என்கின்றன. ஏதோவொரு பண்பாட்டை எடுத்து அதை இந்தியப்பண்பாடு என்கின்றன. மையப்பாடத்திட்டங்கள் இந்த செயற்கையான கருத்துவங்களின் அடிப்படையிலே அமைந்திருக்கின்றன. இந்தியாவின் பன்மயத்தை அமுக்கி மறைத்துவிடுகின்றன. தன்மானமுள்ள எந்த மாநில அரசும் இதை ஏற்குமா? தன்மானமுள்ள எந்த இந்தியரும்

இதை ஏற்பாரா? நீட்டுத்தேர்வு, கூட்டுத்தேர்வு போன்றவை இந்த பாடத்திட்டத்தின் அடிப்படையில் இருப்பது நியாயமா?

இந்திய ஒருமைப்பாடு என்பது என்ன? நாட்டின் பாதுகாப்பிலும் பொருளாதார மேம்பாட்டிலும் கல்வியிலும் இந்தியர்கள் ஒருமித்து ஒற்றுமையுடன் உழைக்கவேண்டும் என்பதே ஒருமைப்பாடு. இதற்கு ஒரு மொழி, ஒரு பண்பாடு, ஒரு வரி, ஒரு கல்வி போன்றவை தேவையில்லை. நாட்டுப்பற்று நன்றே. அதனால் மொழிப்பற்று தீதாகுமா? பண்பாட்டுப்பெருமை தீதாகுமா?

இந்தியாமுழுவதற்கும் ஒரே கல்விமுறை இருக்கவியலாது என்பதாலே கல்வியில் மைய அரசும் மாநில அரசும் சேர்ந்து செயலாற்றவேண்டும் என்று இந்தியாவின் அரசிலக்கணம் கூறுகிறது. பொதுவான முழுமப்பாடப்பகுதிகளில் மைய அரசு

பாடத்திட்டத்தை வகுத்து பாடநூல்களை வெளியிடலாம். மாநில அரசுகள் தத்தம் மொழிகளில் மொழிபெயர்த்துக்கொள்ளலாம். அருகிடப்பாடப்பகுதிகளுக்கு மாநில அரசுகளும் அருகிட அரசுகளும் முழுப்பொறுப்பாகவேண்டும்.

மையமாக்கிய தேர்வுகள் வேண்டுமெனில், முழுமப்பாடப்பகுதிகளில் மட்டுமே அவை இருக்கவியலும். அப்போதும், மையமாக்கிய பாடப்பகுதிகளை எல்லா மாநிலங்களும் பின்பற்றும் நிலை வந்தபின்பே மையமாக்கிய தேர்வுகளை நடைமுறைக்கு கொண்டுவரவேண்டும். அவ்வாறு இல்லாததால், தற்கொலைசெய்துகொள்ள துணிவில்லாத இருமடியாயிரக்கணக்கான அனிதாக்கள் இப்போது இந்தியாவில் நடைப்பிணமாக வாழ்கிறார்கள்.

# மதிப்பறிதல்

கல்வியின் நோக்கம் அறிவை வளர்ப்பது எனில், தேர்வுகளை வைத்து ஒவ்வொரு மாணவரையும் மதிப்பறிவதன் நோக்கம் என்ன? ஒவ்வொரு மாணவரும் தம் அறிவை எந்தளவுக்கு வளர்த்துக்கொண்டிருக்கிறார் என்று காண்பது! யார் காண்பது? அதாவது, மதிப்பறிதல் யாரின் நன்மைக்காக? மாணவருக்கா, ஆசிரியருக்கா, பெற்றோருக்கா, வேலையளிப்போருக்கா? முதன்மையாக அது மாணவரின் நன்மைக்காகவே இருக்கவேண்டும். ஒரு மாணவர் தாம் எவ்வளவு கற்றிருக்கிறார் என்பதை அறிந்து அடுத்த கட்டத்தில் தான் படிக்கவேண்டியதை திட்டமிட அது உதவுகிறது. ஆசிரியருக்கும் பெற்றோருக்கும் இந்த மதிப்பறிதல் தேவையில்லை. அவர்கள் இதை

அறிவதால் மாணவர் கற்பதில் எவ்விதமான மாற்றத்தையும் ஏற்படுத்த இயலாது. அவ்வாறான முயற்சிகளெல்லாம் மாணவரை ஊக்கமிழக்கச்செய்யவே வாய்ப்பிருக்கிறது. மாணவர் தாமாகவே வந்து தம் மதிப்பெண்களை காட்டினால் பாராட்டலாம். அது அவருக்கு ஊக்கமளிக்கும். மாணவர்கள் விரும்பினால் தங்களுக்குள் மதிப்பெண்களை ஒப்பிட்டுப்பார்த்துக்கொள்ளலாம்.

ஒவ்வொரு பாடத்தை படித்து முடித்தபின்னும் அதிலுள்ள பயிற்சிகளை செய்து மாணவர் தம் கற்றலை சோதித்துக்கொள்ளலாம். ஒரு மட்டத்திலுள்ள பல பாடங்களுக்கான விரிவிளக்கப்பயிற்சிகள் இருக்கலாம். இவ்வாறான பயிற்சிகளும் மதிப்பறிதல்களும் மாணவர்களின் கற்றலுக்கு உதவியாக இருக்கவேண்டும்; தடங்கலாகக்கூடாது. மாதத்தேர்வு, காலாண்டுத்தேர்வு,

அரையாண்டுத்தேர்வு, முழுவாண்டுத்தேர்வு போன்ற தேர்வுகளை ஆசிரியர் நடத்தி மாணவர்களை துன்புறுத்தவேண்டியதில்லை. தேர்வுகளில் குறைந்த மதிப்பெண்களை வாங்குகிறவர்கள் தங்களை குறைவாக கருதவேண்டியதில்லை. வெள்ளத்தனைய மலர்நீட்டம். நீண்ட மலரும் குறுந்தண்டுள்ள மலரும் அழகானவையே! எல்லாரும் மனிதர்களே.

வேலையளிப்போர் தாம் வேலைக்கு எடுக்கும் ஆட்களின் கற்றறிவை அளவிட விரும்புவது இயல்பே. ஆனால் வேலைபெறுவது மட்டுமே கல்வியின் நோக்கமன்று என்று முன்பு பார்த்தோம். ஒரு மாணவர் தாம் மனநிறைவடையும் அளவுக்கு அறிவை பெற்று அந்த அறிவை பயன்படுத்தி ஒரு தொழிலை தாமே மேற்கொள்ள நினைத்தால் அவர் வேறு யாருக்கும் தம் மதிப்பை அறியுறுத்துவது

தேவையில்லை.

முழுமப்பாடப்பகுதிகளில் பொதுவான மதிப்பறிதல்களை நடத்தலாம் என்று முன்பு கண்டோம். நடத்தலாம், ஆனால் நடத்தித்தான் ஆகவேண்டும் என்பதில்லை. அவ்வாறு நடத்தவேண்டுமெனில், அந்த தேர்வுகளை எடுக்கும் எல்லா மாணவர்களும் அந்த பொதுவமாக்கிய பாடங்களை படித்திருக்கவேண்டும். நாட்டிலுள்ள எல்லாப்பிள்ளைகளுக்கும் இதற்கான வளமுலங்கள் கிடைக்கும் நிலையிலே பொதுத்தேர்வை நடத்தலாம். எல்லா மாநிலங்களின் கல்வியமைப்புகளும் ஒரே பாடத்திட்டத்தை பின்பற்றும்போதே ஒரே தேர்வை நடத்தலாம்.

பிள்ளைகளை தேர்வின் தொடக்கநேரத்திலிருந்து முடிவுநேரம்வரை ஒரு அறையில் அடைத்துவைத்து

மேற்பார்வையுடன் விடையெழுதச்செய்யும் முறைக்கு எழுத்துத்தேர்வு என்று பெயர். இந்த ஒரே ஒரு தேர்வுமுறையே இந்தியாவில் வழக்கிலுள்ளது. தகவலறிவை மதிப்பறிய இது சிறந்த முறை. மாணவர்கள் தகவல்களை மனப்பாடஞ்செய்து அவற்றை அப்படியே தேர்வுகளில் எழுதுகிறார்கள். இந்த விடைகளை மதிப்பறிந்து மதிப்பெண்வழங்குவது ஆசிரியர்களுக்கு எளிது.

மாணவர்களின் மனப்பாடத்திறமையை தவிர கோட்பாடுகள், கொள்கைகள், கருத்துகள் ஆகியவற்றை எந்தளவுக்கு புரிந்துகொண்டார்கள் என்பதையும் மதிப்பறியவேண்டும். இதில் பொருளுணர்தல், சான்றளித்தல், சுருங்கவுரைத்தல், ஒப்பிடல், விளக்கல் போன்றவை அடங்குகின்றன. படித்து

புரிந்துகொண்டதை அலசல், பயனாக்கல், தொகுத்தாக்கல் ஆகியவற்றை மதிப்பறியவேண்டும். இவற்றை பிறருக்கு சொற்களால் பேச்சாலும் எழுத்தாலும் விளக்கத்தெரிகிறதா என்றும் மாணவர்கள் தங்களைத்தாங்களே மதிப்பறியவேண்டும். இவ்வாறான மதிப்பறிதல் இருந்தாலே மாணவர்கள் தம் கற்றலை இந்த திறமைகளுக்கு நீட்டுவார்கள்.

இதற்காக வேறு பல சிறந்த மதிப்பறியும் முறைகள் இருக்கின்றன. எழுத்துத்தேர்வில் சிறுவிடை, பெருங்கட்டுரை, பன்மத்தெரிவு போன்ற கேள்விகளை கேட்கலாம். பன்மத்தெரிவுவினாக்கள் புரிதலையும் பயனாக்கலையும் ஓரளவுக்கு மதிப்பறிகின்றன. மனப்பாடஞ்செய்வது தேவையில்லாமல் புரிதலையும் பயனாக்கலையும் மட்டும் மதிப்பறிய திறந்த

தேர்வுகளை பயன்படுத்தலாம். திறந்த தேர்வுக்காக மாணவர்கள் தேர்வுக்கூடத்துக்கு நூல்களையும் குறிப்புகளையும் வேறெந்த வளமூலங்களையும் கொண்டுவரலாம்.

ஆழ்ந்து சிந்தித்து விடைகளை தயாரிக்கவேண்டிய கேள்விகளை கேட்க மதிப்பாய்வாளர் வீட்டுத்தேர்வை வழங்குகிறார். அதாவது மாணவர்கள் கேள்வித்தாளை வீட்டுக்கு எடுத்துச்சென்று அதிலுள்ள சிக்கல்களை தீர்க்கின்றனர். இதற்கு சுமார் ஒரு வார காலம் அனுமதிக்கப்படலாம்.

மற்றொரு முறை ஒவ்வொரு மாணவரும் ஒரு கொடுக்கப்பட்ட தலைப்பிலோ தானே தேர்ந்த தலைப்பிலோ தகவல்களை சேகரித்து அதை மற்றவர்கள் எளிதாக அறிந்துகொள்ளம்படி ஒரு பருவ அறிக்கையாக எழுதுவது.

மாணவர்களின் பேச்சுத்திறமையை

வளர்க்க, ஆசிரியர்கள் வாயால் கேள்விகேட்டு மாணவர்கள் வாயால் விடைசொல்லக்கேட்பதுண்டு. இதற்கு வாழ்மொழித்தேர்வு என்று பெயர். மேலும், மாணவர்கள் சிறுவயதிலிருந்தே பொழிவுரைகளை வழங்கவும் பழகவேண்டும். இவ்வாறு பலவிதமான தேர்வுகளால் மாணவர்கள் தங்களை மதிப்பறியவும் வேலைவழங்குவோர் மாணவர்களுள் மிகுந்த அறியியன்மை உள்ளவர்களை தேர்ந்தெடுக்கவும் வழிகள் இருக்கின்றன. இது கல்வியின் கொள்விதிகளை இயற்றுவோருக்கு தெரியாதா? பட்டிக்காட்டானான எனக்கே தெரிகிறதென்றால் அவர்களுக்கு நிச்சயமாக தெரியும். தெரிந்திருந்தும், பணத்தால் பயிற்சிபெற்று மதிப்பெண்வாங்கும் தேர்வுகளையே இவர்கள் நடத்தும் காரணம்

என்ன? இதன் விடையை நீங்களே சிந்தித்துக்கொள்ளுங்கள்.

# 9. கல்வியின் படிநிலைகள்

மனிதர்களுக்கு, குறிப்பாக பிள்ளைகளுக்கு. இயல்பாகவே அறியார்வம் இருக்கிறது. கல்வி இந்த அறியார்வத்தை நிறைவேற்றி ஊக்குவிக்கவேண்டும். கல்வி என்பது வெளியிலிருந்து திணிப்பதாக இல்லாமல், உள்ளூக்கத்தால் அறிவை உட்கவர்வதாயிருக்கவேண்டும். ஆசிரியர்களும் பெற்றோரும் இந்த உட்கவர்வுக்கு உதவலாம். மாணவர்களை தள்ளவோ இழுக்கவோ செய்யாமல் உடன்சென்று வழிநடத்தவேண்டும்.

பிள்ளைகள் வளர வளர அவர்களது அறிவும் வளர்ந்து அடுத்தடுத்த மட்டங்களில் அறிவுபெற விரும்புகின்றனர். தொன்மைக்கல்வியில் பிள்ளைகளை வயதின் அடிப்படையில் வகுப்புகளாக பிரித்து

கற்பிப்பது வழக்கம். இதன்படி பன்னிரண்டாம் வகுப்புவரை பள்ளிக்கல்வி என்றும் அதற்கு மேற்பட்டதை உயர்கல்வி என்றும் இரண்டு பெரும் பிரிவுகளாக பிரிக்கிறார்கள். பள்ளிக்கல்வியில் மழலைக்கல்வி, தொடக்கக்கல்வி, இரண்டாமைக்கல்வி, உயர் இரண்டாமைக்கல்வி ஆகிய பிரிவுகள் இருக்கின்றன.

முந்திய படலத்தில் விவரித்த மாற்றுக்கல்வியில் தொழினுட்ப வசதியை பயன்படுத்தி ஒவ்வொரு மாணவருக்கும் அவருக்கேற்ற கல்வியை அவரது வேகத்திலே வழங்கலாம் என்றும் மாணவர்களுக்கு கட்டின்மை இருக்கவேண்டும் என்றும் தேர்வுமுறைகள் ஒவ்வொரு மாணவரையும் அவரால் இயன்ற அளவுக்கு மேற்செல்லும்படி சவாலளிக்கவேண்டும் என்றும் பார்த்தோம். இவ்வாறான கல்வியில் வயதுக்கேற்ற

வகுப்புகள் தேவையில்லை. ஒரு மாணவர் ஒரு மட்டத்தை முடித்தபின் அடுத்த மட்டத்துக்கு தாமாகவே செல்லலாம். யாரும் வாயிற்காப்போராக நின்று திறந்துவிடுவது தேவையில்லை.

ஒரு குறிப்பிட்ட வயதுள்ள பிள்ளைகளுள் அறிவை எளிதில் உட்கவரும் பிள்ளைகளும் இருக்கிறார்கள். அவ்வாறு உட்கவர்வதை மிகவும் கடினமாக காணும் பிள்ளைகளும் இருக்கிறார்கள். அது அவரவரது உள்ளத்தை சார்ந்தது. அதாவது, அறியியன்மை, திசையமைவு, உள்ளூக்கம் ஆகியவற்றை சார்ந்தது. இப்போதிருக்கும் கல்வி அந்த வயதுள்ள ஒரு சராசரியான பிள்ளையின் தேவைக்காக வடிவமைக்கப்பட்டது. இவ்வாறான கல்வியில் எல்லாப்பிள்ளைகளும் ஈடுபடும்போது, மிகுந்த அறியியன்மையுள்ள பிள்ளைகளை

இந்த கல்வி நிறைவுசெய்வதில்லை; அறியியன்மை குறைந்த பிள்ளைகள் இந்த கல்வியை கடினமாக காண்கிறார்கள். எனவே, ஒவ்வொரு மட்டத்திலும் ஒருவர் தன்னால் இயன்ற அளவுக்கு அறிவை உட்கவரும்படியான பெரும் வளமூலங்கள் இருக்கவேண்டும்.

மாணவர்கள் வெவ்வேறு வேகங்களில் முன்னேறினாலும், கல்வி படிநிலைகளிலே தொடர்கிறது. பிள்ளைகளின் வயது அதிகரிக்க அவர்கள் அறிவின் அடுத்தடுத்த படிநிலைகளுக்கு ஏறிச்செல்வார்கள். ஆனால், வெவ்வேறு மாணவர்கள் வெவ்வேறு வேகத்தில் முன்னேறுவார்கள். இந்த முன்னேற்றத்தில் பெற்றோரும் பிறகு ஆசிரியர்களும் பிள்ளைகளின் இயல்பான ஆர்வத்தின் அடிப்படையிலே வழிநடத்தவேண்டும்.

இத்தகைய வழிகாட்டல்கள் மாணவர்கள் ஆசிரியர்களுடன் இடைவிடாத நேர்முகத்தொடர்பில் இருப்பதால் நிகழவேண்டியதில்லை. ஒவ்வொரு மாணவருக்கும் வெவ்வேறு அளவில் வழிகாட்டல் தேவைப்படுகிறது. சிலருக்கு இடைவிடாத தொடர்பு தேவையாகலாம். அதுவும் அந்த மாணவர் கேட்பதாலே இருக்கவேண்டும். நான் சொல்வது என்னவென்றால், ஆசிரியர்களும் பெற்றோரும் மாணவரில் தன்னார்வத்தை உண்டாக்கவேண்டும்; படிக்கும்படி வற்புறுத்தக்கூடாது. வெவ்வேறு படிநிலைகளில் தன்னார்வத்தை உண்டாக்கி வழிநடத்துவது எவ்வாறு என்று இந்த படலத்தில் காண்போம்.

## கற்றலின் தொடக்கம்

மொழித்திறமையே கற்றலின் அடிப்படை என்று 3.1ஆம் பகுதியில் பார்த்தோம். இந்த மொழித்திறமை பிள்ளைகளுக்கு எந்த வயதில் வளராகத்தொடங்குகிறது? இதன் விடையைக்கேட்டு நீங்கள் வியப்படைவீர்கள். கருப்பையில் தொடங்குகிறது! ஆம், குழந்தை பிறப்பதற்கு சில வாரங்களுக்கு முன்பே தாயின் வயிற்றிலிருந்து தாய் பேசுவதையும் பாடுவதையும் கேட்கிறது. இது எனக்கு எப்படி தெரியும்? ஆராய்ச்சியாளர்கள் சொல்வதால்! ஆராய்ச்சியாளர்களுக்கு எப்படி தெரியும்? குழந்தைகள் பிறப்பதற்கு சுமார் ஆறு வாரங்களுக்கு முன்பிருந்து தாய் ஒரு தாலாட்டுப்பாடலை அடிக்கடி பாடினால், குழந்தை பிறந்தபின் அதே தாலாட்டுப்பாடலை கேட்டு அமைதியடைகிறது

என்று இந்த ஆராய்ச்சியாளர்கள் (சாத்து 1984) தாய்மாருடன் சேர்ந்து ஆராய்ச்சிசெய்ததால் கண்டறிந்திருக்கின்றனர். தாய் வேறு புதிய பாடலை பாடுவதைவிட கருப்பையிலிருந்தே குழந்தை கேட்டுப்பழகிய பாடலுக்கு எளிதாக அமைதியடைகிறது. இதுபோன்ற பல கண்டறிதல்கள் மொத்தமாக சேர்ந்து இந்த உண்மையை நிலைநாட்டுகின்றன. அதாவது, இந்த தாய்மொழியின் ஒலிகளுக்கு குழந்தை பழக்கமாகிறது.

இதை நீங்களே சரிபார்க்கலாம். வயிற்றிலுள்ள முதிர்ந்த குழந்தை எப்போது தூங்குகிறது, எப்போது விழித்திருந்து கைகாலை ஆட்டுகிறது என்று தாய் உணரலாம். அமைதியான ஒரு சூழலில் அமர்ந்து தாய் ஒரு பாட்டை பாடும்போதெல்லாம் வயிற்றிலுள்ள குழந்தையின் நடத்தையில் ஏதும் மாறுதல்

ஏற்படுகிறதா என்று கவனிக்கலாம். குழந்தை பிறந்தபின் அதே பாடலை பாடுவதற்கும் வேறு பாடலை பாடுவதற்கும் குழந்தையின் மறுவினையில் வேறுபாடு இருக்கிறதா என்றும் கவனிக்கலாம். இந்த வேறுபாடு மிகச்சிறிதாயிருக்கலாம். இதை ஆராய்ச்சியாளர்கள் பல தாய்மாருடன் இணைந்து கட்டுப்படுத்திய சூழல்களில் கண்டுபிடித்திருக்கின்றனர். எல்லாக்குழந்தைகளிலும் எல்லாத்தாய்மாரும் காண்பது கடினமாயிருக்கலாம். எனினும், இது உங்கள் குழந்தையுடன் உறவாட ஒரு ஆர்வமான வழி. வயிற்றிலிருக்கும்போதே குழந்தை தாயும் மற்றவர்களும் பேசுவதையும் மற்ற ஒலிகளையும் கேட்டுக்கொண்டிருக்கிறது என்பதில் எவ்வித ஐயமுமில்லை.

அடுத்ததாக, குழந்தை எப்போது பேச

கற்றுக்கொள்கிறது என்று பார்ப்போம். ஒன்றிலிருந்து ஒன்றரை வயதுக்குள் பேசத்தொடங்குகிறார்கள் என்று நீங்கள் விடையளிக்கலாம். இந்த வயதில் குழந்தையின் பேச்சு நீங்கள் கேட்கும்வகையில் வெளிப்படுகிறது. ஆனால் குழந்தையின் கற்றல் பிறக்கும்முன்பே தொடங்கி பிறந்தவுடன் தொடர்கிறது. வயிற்றிலிருக்கும்போதே குழந்தை தன் சுற்றுச்சூழலிலுள்ள ஒலிகளை கேட்கிறது. தாய் பேசும் ஒலி அவளுடலின் உட்பக்கமாகவே கடத்தப்பட்டு பிறக்காத குழந்தைக்கு கேட்கிறது. பிறந்தவுடன் தாயும் மற்றவர்களும் பேசும் ஒலி மேலும் தெளிவாக குழந்தைக்கு கேட்கத்தொடங்குகிறது.

குழந்தை வளர வளர பேச்சுப்பாங்குகள் குழந்தையின் மூளையில் பதிகின்றன. வெவ்வேறு பொருள்களை வேவ்வேறு

ஒலிகளால் குறிக்கிறோம் என்பதையும் குழந்தை உணர்கிறது. பல விலங்குகளின் உருவங்களை காட்டி ஒவ்வொரு விலங்கின் பெயரையும் சொல்லி சுட்டிக்காட்டி பல நாட்களாக பயிற்சியளித்து, பிறகு ‘எது குரங்கு?’ என்றோ ‘எது புலி?’ என்றோ கேட்டால் பேசாத குழந்தையும் அந்தந்த உருவத்தை எடுக்கிறது. இதிலிருந்து பேசுவதற்கு பல மாதங்களுக்கு முன்பே குழந்தை சொற்களை அறிந்துகொள்கிறது என்பது தெளிவாகிறது. இப்போது குழந்தை கேட்கும் இந்த ஒலிகள் எந்த மொழியில் இருக்கின்றன என்று சிந்தியுங்கள். இவை குழந்தை வாழும் இடத்தின் இயலிடமொழியின் ஒலிகள். தமிழ்நாட்டில் வாழ்வோருக்கு இவை தமிழொலிகள். ஒருவர் தன் பிள்ளைக்கு ஆங்கிலம் தெரியவேண்டும் என்பதற்காக பிள்ளையுடன் ஆங்கிலத்திலே பேசுகிறார்

என்று வைத்துக்கொள்வோம். ஆனால் மற்றவர்களுடன் எந்த மொழியில் பேசுகிறார்? அதையும் குழந்தை கேட்கிறதன்றோ! உங்கள் பிள்ளை ஆங்கிலத்தில் செயலாற்றவேண்டும் என்று நீங்கள் விரும்பினால், அவர்களை ஆங்கிலம்பேசும் சமூகத்தில் வளர்க்கவேண்டும். தமிழ்நாட்டில் வளரும் பிள்ளைகளுக்கு ஆங்கிலம் வேற்றுமொழியே.

தக்காளிவிற்பவர், துணிதுவைப்பவர், பாற்காரரர் போன்றவர்களுடன் ஒரு மொழியிலும் தன்னுடன் வேறு மொழியிலும் பேசினால் அவர்களிலிருந்து தான் வேறுபட்டவர் என்ற எண்ணம் குழந்தையின் மனத்தில் படிகிறது. இது மக்களில் பிரிவை உண்டாக்குகிறது. இதனால் ஏற்றத்தாழ்வுகளையும் வெறுப்பையும் நீங்கள் அறியாமலே

அந்த பிஞ்சுமனத்தில் விதைக்கிறீர்கள். இதன் மறுபக்கமாக, தக்காளிவிற்பவர், துணிதுவைப்பவர், பாற்காரர் போன்றோரின் பிள்ளைகள் தாங்கள் கீழானவர்கள் என்ற எண்ணத்துடன் வளர்கிறார்கள். உங்கள் பிள்ளை பெரியவரானபின் சாலையில் அடிபட்டுக்கிடந்தால் இந்த ‘மற்ற’ப்பிள்ளைகள் கையிலும் கழுத்திலும் கிடப்பதை கழற்றிக்கொண்டு ஓடுவார்கள். ‘இவர் அந்த வகுப்பை சேர்ந்தவரன்றோ! எக்கேடாவது கெட்டுப்போகட்டும்’ என்ற எண்ணமே மேலோங்கும்.

நீங்கள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் தாய்மொழி குழந்தையின் மனத்தில் படிந்துவிடுகிறது. அதை மாற்ற முயல்வது தாம் வேறுபட்டவர் என்ற உணர்வையே பிள்ளைகளின் மனங்களில் உண்டாக்குகிறது. எல்லாருக்கும் சமமான கல்வி இருப்பது

சமூகத்தில் சமத்துவத்தை நிலைநாட்டுகிறது. மேலும், கல்வி வேற்றுமொழியிலோ வேற்று நடையிலோ இருந்தால் வாழ்க்கையிலிருந்து பிரிந்து நிற்கிறது என்பதை முன்பே பார்த்தோம்.

கல்வி பிள்ளைகள் பள்ளிக்குச்செல்வதற்கு பல ஆண்டுகளுக்கு முன்பே தொடங்கிவிடுகிறது. சொல்லப்போனால், மனிதன் பிறந்ததிலிருந்து இறக்கும்வரை கல்வி நடைபெறுகிறது. குறிப்பாக பெற்றோரே முதல் ஆசிரியர்கள். வீட்டிலுள்ள மற்றவர்கள் துணையாசிரியர்கள். குழந்தையின் முகத்தைப்பார்த்து ஆ, ஈ, ஊ, ஓ என்றெல்லாம் சொல்லும்போது குழந்தை நம் முகத்தை ஆர்வத்துடன் பார்ப்பதை நீங்கள் கவனிக்கலாம். இந்த ஒலிகளை சொல்லும்போது நம் வாய் வெவ்வேறு அமைவடிவங்களில் இருப்பதையும் அசைவதையும் குழந்தை கவனித்துக்கொள்கிறது. இதனால் பெறும்

அறிவு பின்பு குழந்தை பேசும்போது உதவுகிறது.

அடுத்த படியாக, பேசாத குழந்தையிடமும் கா, தா, பா, மா போன்ற ஒலிகளையும் காக்கா, தாத்தா, பாப்பா, அம்மா, அப்பா போன்ற எளிய சொற்களையும் சொல்லிக்காட்டவேண்டும். இதனால், இந்த ஒலிகள் பிள்ளையின் மூளையில் சிறுவயதிலே பதிந்து மூளையின் வளர்ச்சியையும் அறியியன்மையின் வளராக்கத்தையும் மேம்படுத்துகின்றன.

குழந்தை பிறந்ததிலிருந்தே தாலாட்டையும் மற்ற குழந்தைப்பாடல்களையும் பாடவேண்டும். இதற்கு நீங்கள் பெரும் பாடகராகவோ இசை வல்லுநராகவோ இனிய குரலுள்ளவராகவோ இருக்க தேவையில்லை. எளிய தாளமுள்ள பாடலை அதே தாளத்துடன் குழந்தையை தட்டிக்கொண்டே பாடுவது குழந்தை உறங்குவதற்கும் குழந்தையின்

மொழித்திறமை வளர்வதற்கும் பெரிதும் உதவுகின்றன. மறுவழியாக, பண்ணுள்ள தாலாட்டுப்பாடல்களை தொட்டிலை ஆட்டிக்கொண்டே பாடலாம். இந்த பாடல்களெல்லாம் தாய்மொழியில் இருந்தாலே மூளையில் ஆழமாக பதிவன என்பதை நினைவில் கொள்க. தமிழில் இதற்காக, ‘நிலா நிலா ஓடிவா’, ‘காக்கா கண்ணுக்கு மைகொண்டுவா’ போன்ற பல பாடல்கள் உள்ளன.

பெரிய படங்களும் சில சொற்களும் உள்ள நூல்களை வாசித்துக்காட்டவேண்டும். நாம் படித்துக்காட்டும்போது குழந்தைகள் அந்த நூல்களை பிடித்து விளையாட விரும்புவார்கள். அதற்குத்தக்க குழந்தைகளின் கைகளில் கிழிந்துவிடாத அட்டையாலான நூல்கள் ஆங்கிலத்தில் பல இருக்கின்றன. காலத்தின் கொடுமையால்

இவை தமிழில் பெருமளவில் இல்லை. இவ்வாறான நூல்களை தமிழிலும் அறிஞர்கள் உருவாக்கவேண்டும். மக்கள் அவற்றை வரவேற்று பயன்படுத்தவேண்டும். பிள்ளைகள் வளர வளர, கதைகளையும் படித்துக்காட்டலாம். படிக்கும்போதே சொற்களை விரலால் சுட்டிக்காட்டி படித்துக்காட்டினால், எழுத்துகளுக்கும் சொற்களுக்கும் பொருளுக்கும் தொடர்பிருக்கிறது என்பதை பிள்ளைகள் உணர்வார்கள். இந்த செயல்களையெல்லாம் குழந்தைகள் பேசும்முன்பே தொடங்கிவிடலாம் என்பதை நினைவுகொள்க.

குழந்தைகள் முதலில் பொருளற்ற ஒலிகளை எழுப்புகிறார்கள். பெரியவர்கள் பேசுவதைப்பார்த்து அவர்களும் அதைப்போல் ஒலியெழுப்புகிறார்கள். இதை நாம் மழலை என்கிறோம். பிறகு பொருளுள்ள

ஒலிகளை எழுப்பத்தொடங்குகிறார்கள். இந்த ஒலிகள் பெரியவர்கள் சொல்லும் சொற்களைப்போல் இல்லாமலிருக்கலாம். பால்குடிக்கும்போதும் உண்ணும்போது வாய் அம் அம் என்று அசைவதால் பசிக்கும்போது பல குழந்தைகள் அந்த ஒலியை எழுப்புகின்றன. இதனால் பல குடும்பங்களில் அம்மம், யம் யம், மம்மம் போன்ற ஒலிகள் உணவுக்கான மழலைச்சொற்களாகின்றன. பசிக்கும்போதெல்லாம் தாய் பாலூட்டுவதால் குழந்தை முதலில் தாயை உணவாகவே பார்க்கிறது. (தாயின் அன்பை புரிந்துகொள்ளும் பக்குவம் குழந்தைப்பருவத்தின் பிற்பகுதியிலே ஏற்படுகிறது.) இதனால் பல மொழிகளில் அம்மாவுக்கான சொல் அம், மம் என்பனபோன்ற ஒலிகளிலிருந்து உருவாகியிருக் கின்றன. இவ்வாறு,

‘அம்மா’ குழந்தையின் பொருளுள்ள முதற்சொல்லாகிறது.

பிள்ளைகள் சொற்களையும் சிறு சொற்றொடர் களையும் பேசத்தொடங்கும்போது பெற்றோருடன் மட்டுமல்லாமல் அண்மையத்திலுள்ள மற்ற பிள்ளைகளுடனும் பெரியவர்களுடன் விளையாடவும் பேசவும் வாய்ப்பளிக்கவேண்டும். இவ்வாறு பேசிப்பழகுவது கல்வியின் ஒரு முக்கியப்பகுதி.

பிள்ளைகள் ஓரளவுக்கு பேசத்தொடங்கியபின், அச்சுநூல்களிலோ திரைகளிலோ எழுத்துகளை காட்டி அவற்றின் ஒலிகளை சொல்லலாம். தமிழ் ஒரு ஒலியனிய மொழி என்பதால், எழுத்துக்கும் ஒலிக்குமிடையில் நேரடியான தொடர்பு இருக்கிறது. இதற்கிடையில் கதைகளை படித்துக்காட்டுவது தொடரவேண்டும்.

குழந்தைகளுக்கான நூல்கள் உட்பட எல்லா நூல்களும் எதிர்காலத்தில் மின்னூல்களாகவே இருக்கப்போகின்றன. அதற்கான மென்பொருள்களை அறிஞர்கள் உருவாக்கவேண்டும். கணினியிலோ அலைபேசியிலோ எழுத்துகளை ஒவ்வொன்றாக காட்டி ஒலிக்கும் மென்பொருள்கள் உருவாகவேண்டும். கணினியிலும் அலைபேசியிலும் பிள்ளைகள் காணொளிவிளையாட்டுகளை விளையாட பெரிதும் விரும்புவதை நாம் காண்கிறோம். இது அவர்களுக்குள்ள இயல்பான ஆர்வம். இந்த ஆர்வத்தை நாம் கல்வியில் பயன்படுத்தவேண்டும். ‘விளையாடாதே, படி’ என்று அவர்களை திசைதிருப்ப முயல்வது படிப்பின்மீது அவர்களுக்கு வெறுப்பையே உண்டாக்குகிறது. மாறாக, நாம் ‘விளையாடுவதால் அறிவைப்பெறு’

என்று ஏன் சொல்லக்கூடாது? கல்வியை ஏன் ஒரு விளையாட்டாக மாற்றக்கூடாது? சான்றாக, ‘படம்’ என்ற சொல்லை ஒலித்து அதிலுள்ள எழுத்துகளை கண்டுபிடிக்க சொல்லலாம். முதலெழுத்துக்கு பல தெரிவுகளை கொடுத்து சரியான எழுத்தை கண்டுபிடித்தபின் அடுத்த எழுத்துக்கான தெரிவுகளை வழங்கலாம்.

பிள்ளைகள் கணினியுடன் விளையாடுவது மட்டுமல்லாமல் மற்ற பிள்ளைகளுடனும் பெற்றோ ருடனும் ஆசிரியருடனும் விளையாடும் விளையாட்டுக ளையும் உருவாக்கலாம். பெற்றோர் ‘வீட்டுப்பாடத்தை செய்தாயா?’ என்று கேட்பதையும் ‘செய்துமுடி’ என்ற கட்டளையிடுவதையும்விட ‘வா, நாம் விளையாடலாம்’ என்று அழைப்பது பிள்ளைகளுக்கு எவ்வளவு மகிழ்ச்சியை அளிக்கும் என்று எண்ணிப்பாருங்கள்.

இந்த விளையாட்டு படிப்புசார்ந்தது என்று தெரிந்தாலும் அவர்கள் மகிழவேசெய்வார்கள். அதாவது படிப்பு அவர்களுக்கு இன்பமளிப்பதாக இருக்கவேண்டும்.

# தொடக்கக்கல்வி

கல்வி குழந்தை பிறக்கும்முன்பே தொடங்குகிறது என்று கண்டோம். இங்கு தொடக்கக்கல்வி என்பது நன்றாக பேசத்தெரிந்த பிள்ளைகள் முதலில் வாசிக்கவும் பிறகு எழுதவும் தொடங்குவது.

குழந்தைக்கு பேசும் ஆர்வமே முதலில் எழுகிறது. அதன்பின் நாம் வாசிக்கும் திறனை கற்றுக்கொடுக்கலாம். எளிய சொற்களுள்ள சிறு கதைகளை தமிழில் வாசித்துக்காட்டவேண்டும். அதற்கான நூல்களை அறிஞர்கள் தமிழில் உருவாக்கவேண்டும். அவற்றை பிள்ளைகள் தாங்களாகவே வாசித்து புரிந்துகொள்ளும் ஆர்வத்தை தூண்டவேண்டும்.

ஒரு சொல்லை சொல்லி அதில் வரும் எழுத்துகளை வரிசையாக காண்பதை

ஒரு விளையாட்டாக்கலாம் என்று முந்திய பகுதியில் பார்த்தோம். காணொளிகளையும் காட்டலாம். எழுத்துகளுக்கு அசைவுகளை அளித்து அவை சேரும்போது அவற்றின் ஒலிகள் சேர்ந்து சொற்கள் உண்டாவதை காட்டலாம். தமிழ் ஒலியனிய மொழி என்பதை மீண்டும் நினைவுகொள்வோம். சொல்லின் ஒலி எழுத்தொலிகளின் நேரடிச்சேர்க்கையால் உண்டாகிறது. எழுத்துகளுக்கும் எண்களுக்கும் மனிதர்களைப்போன்ற தற்பண்புகளை வழங்கி தன் ஒலிகளை சொல்லும்படி செய்யலாம். சான்றாக, பகரம் இவ்வாறு தன்னை அறிமுகமாக்கிக்கொள்ளலாம்: ‘வணக்கம். என் பெயர் பகரம். நான் ப என்ற ஒலியை உண்டாக்குகிறேன். படம் என்ற சொல்லில் முதலில் வருகிறேன், பார்த்தீர்களா! பம்பரத்தில் இரண்டுமுறை வருகிறேன்.

முதலிலும் இடையிலும் வருகிறேன்’ என்ற சொல்லும்போதே அந்த இரண்டு பகரங்களையும் அசைத்தோ பெரிதாக்கியோ ஒளிரச்செய்தோ காட்டலாம். அட, நான் முதியவன். எனக்கு தோன்றுவது இவ்வளவே. தமிழ்நாட்டில் இந்த தொழினுட்பங்களுடன் வளர்ந்த எத்தனையோ இளம் அறிஞர்கள் இருக்கிறார்கள். அவர்கள் தங்கள் கற்பனைகளை முடுக்கி எத்தனையோ வழிகளில் குழந்தைகளை கவரும்படி கதைகளை உருவாக்கலாம்.

இதுபோன்ற கதைகளில் வரும் ஒரு பாத்திரத்துக்கு எண்கள் மிகவும் பிடித்தமானவை. எதையெடுத்தாலும் எண்ணிப்பார்க்கும் பழக்கம் இவருக்குண்டு. ஒரு அறையில் இருக்கும்போது அங்கு எத்தனை விளக்குகள் இருக்கின்றன, எத்தனை நாற்காலிகள் இருக்கின்றன,

சமையலறையில் எத்தனை தட்டுகள் இருக்கின்றன என்றெல்லாம் எண்ணிப்பார்ப்பார். இதைப்போல் ஒரு வகையான எழுத்துகளை விரும்பும் ஒரு பாத்திரம் இருக்கலாம். ஒருவருக்கு த, தா, தி, ... ஆகிய எழுத்துகள் மிகவும் பிடித்தமானவை. எந்த சொற்களிலெல்லாம் இந்த எழுத்துகள் வருகின்றனவோ அங்கெல்லாம் அவற்றை சுட்டிக்காட்டுவார். வேறொருவருக்கு ஏ என்ற ஒலி பிடித்தமானது. அவர் கே, சே, வே, ... போன்ற எழுத்து களைக்கண்டு மயங்குவார். இதெல்லாம் உங்களுக்கு சிறுபிள்ளைத்தனமாக தோன்றலாம். ஆனால் இது சிறுபிள் ளைகளுக்கான கல்வி. குழந்தைகளைப்போல் குழந்தையா சிரியர்களும் கற்பனைமிகுந்தவர்களாக இருக்கவேண்டும்.

எழுத்துகளை பிள்ளைகளுக்கு

அகரவரிசையில் அறிமுகமாக்குவது தேவையில்லை. உண்மையில் அவ்வாறு இல்லாமலிருப்பதே மேல். அகரவரிசையை மேனிலைக்கல்வியில் கற்றுக்கொள்ளலாம். உயிரெழுத்து, மெய்யெழுத்து, உயிர்மெய்யெழுத்து என்ற பாகுபாடெல்லாம் இந்த நிலையில் தேவையில்லை. அந்த முறைமையில் சொல்லிக்கொடுப்பதும் தேவையில்லை. ப, பா, பி, பீ, பு, பூ, ... என்ற எழுத்துவரிசையில் ப என்ற பாங்கு பொதுவாக இருப்பதையும், கா, சா, பா, வா, ... என்ற வரிசையில் ஆகாரத்தை குறிக்கும் கால் பொதுவாக உள்ளதையும் பழக்கத்தாலே உணர்ந்து அந்தந்த ஒலியுடன் தொடர்புறுத்திக்கொள்வார்கள். இவ்வாறு உணர்வதற்கு கணினியறிவியலில் பாங்கறிதல் என்று பெயர். இந்த பாங்கறிதல் சிறு பிள்ளைகளில் இயல்பாகவே

அமைந்துள்ளது.

இவ்வாறு தொடங்கி எல்லா எழுத்துகளையும் இனங்காணச்செய்யலாம். பிறகு எழுத்துகளால் சொற்கள் உண்டாவதை காட்டி வாசிக்கச்சொல்லலாம். பிறகு எளிய கதைநூல்களை வாசிக்கச்சொல்லவேண்டும். நன்றாக வாசிக்கத்தெரிந்த பிள்ளைக்கு எழுத கற்றுக்கொடுக்கலாம். இப்போது எதிர்கால நோக்குடன் நாம் தட்டச்ச கற்றுக்கொடுக்கலாம். எந்த வயதில் பிள்ளைகள் தட்டச்சத்தொடங்கலாம்? இந்த கேள்விக்கு எல்லாப்பிள்ளைகளுக்கும் பொருத்தமான விடை இல்லை. அந்தந்தப்பிள்ளை எப்போது அணியமாகிறார் என்று பெற்றோரும் ஆசிரியரும் கவனிக்கவேண்டும்.

தமிழ்99 என்ற விசைப்பலகையில் எழுத தொடக்கத்திலிருந்தே பிள்ளைகளை

பழக்கவேண்டும். தமிழில் பாடநூல்களையும் அறிவுநூல்களையும் எழுதவேண்டும் என்று இந்த நூலின் பலவிடங்களில் சொல்லிவந்திருக்கிறேன். அப்படி எழுதவேண்டுமெனில் சிறந்த எழுத்தாளர்கள் தேவை என்பது தெளிவு. அந்த எழுத்தாளர்களை எவ்வாறு உருவாக்குவது? அவர்களுக்கு சிறுவயதிலிருந்தே பயிற்சியளிக்கவேண்டும். உரையின் வடிவத்தில் மட்டுமல்லாமல் அதை உருவாக்கும் எந்திரவியச்செய்நுட்பங்களிலும் பழக்கவேண்டும். இதற்காக, தமிழ்99 விசைப்பலகையுள்ள கணினிகளையும் எழுதுவதற்கான எளிய எந்திரங்களையும் தமிழ்நாட்டரசு வழங்கவேண்டும்.

எந்திரம் சொல்லும் சொல்லை மாணவர் தட்டச்சியதும் சரிபார்க்கும் மென்பொருள்கள் உருவாகவேண்டும். இவ்வாறே படிப்படியாக

உயர்நிலைச்சொற்களுக்கும் சிறு சொற்றொடர்களுக்கும் மாணவர்களை கணினி எடுத்துச்செல்லவேண்டும். தேவையானபோது ஆசிரியர்களும் பெற்றோரும் வழிநடத்தவேண்டும்.
சொற்களை சொல்லச்சொல்லி கணினி சரிபார்க்கவேண்டும். றகரரகர வேறுபாடு, நகரனகர வேறுபாடு, லகரளகர வேறுபாடு போன்றவற்றை மாணவர் தெளிவாக ஒலிக்கிறாரா என்று சரிபார்க்கவேண்டும். பிறகு நீண்ட தொடர்களையும் கதைகளையும் வாசித்துக்காட்டச்சொல்லி தவறுகளை திருத்தவேண்டும்.
இப்போது தமிழ்நாட்டில் எல்லாரும் றகரத்தை தவறாக ஒலிக்கிறார்கள் என்பதையும் நகரத்துக்கும் னகரத்துக்கும் வேறுபாடின்றி ஒலிக்கிறார்கள் என்றும் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். ஒவ்வொரு மெல்லின

எழுத்தும் ஒரு வல்லின எழுத்துக்கு நிகராவதை நாம் அறிவோம். ஙகரம் ககரத்தின் நிகரெழுத்து. தங்கம் என்ற சொல்லில் இவை சேர்ந்து வருகின்றன. இவ்வாறே, பஞ்சம், வண்டி, பந்தம், கம்பம், மன்றம் ஆகியவற்றில் மற்ற நிகர்களை காணலாம். பகரத்தை ஒலிக்கும்போது வாய் எந்த அமைவடிவத்தில் இருக்கிறதோ அவ்வாறே மகரத்தை ஒலிக்கும்போதும் இருக்கிறது. வேறுபாடு என்னவென்றால் பகரத்தின்போது காற்று வாயின்வழி ஒரு வெடிப்புடன் வெளிப்படுகிறது; மகரத்தின்போது மூக்கின்வழியும் செல்கிறது. மூக்கைப்பொத்திக்கொண்டு மகரத்தை ஒலிக்க முயலுங்கள். அப்போது இதை நன்கு விளங்கிக்கொள்ளலாம். இவ்வாறே மற்ற இணைகளும்.

இப்போது றகரம் னகரத்தின் நிகரெழுத்து

என்பதால் னகரத்தை ஒலிக்கும்போது நாக்கு எங்கு எந்தக்கோணத்தில் இருக்கிறதோ அங்கே அதே கோணத்திலே றகரத்தை ஒலிக்கும்போதும் நாக்கை வைத்து காற்றை வாயின்வழி மட்டும் வெளியிட வேண்டும். நாக்கு பின்வளையக்கூடாது என்பதை நோக்குக. இதை நான் என் கருத்தாக சொல்லவில்லை. தொல்காப்பியம் இவ்வாறே சொல்கிறது. நான் சிறுவனா யிருந்தபோது திருநெல்வேலி, தூத்துக்குடி மாவட்டங் களின் சிற்றூர்களில் இவ்வாறே சொல்வோம். இப்போது அந்த ஊர்க்காரர்களும் நகரத்தினரைப்போல் ஒலிப்பதே நாகரிகம் என்றெண்ணி தவறாக ஒலிக்கின்றனர்.

இதே காரணத்துவத்தால், நகரத்தின் சரியான ஒலிப்பையும் நாம் உணரலாம். தகரத்தை ஒலிக்கும்போது நாநுனி மேற்பல்லின் அடியில் இருப்பதுபோலவே

நகரத்துக்கும் இருக்கவேண்டும். சிலருக்கு ஙகரத்தையும் ஞகரத்தையும் வேறுபடுத்துவது கடினமாயிருந்தால் மேற்சொன்ன காரணங்களால் அவற்றை பிரித்தறியலாம்.

பிள்ளைகள் எழுத்துகளை அறியும்போதே எண்களும் எண்ணிக்கையும் சிறு கூட்டற்கணக்குகளும் அறிமுகமாகவேண்டும். எண்களை வரிசையாக சொல்வதும் இரண்டு எண்களுள் எது பெரிது எது சிறிது என்று சொல்வதும் இந்த கல்வியில் அடங்குகின்றன. அதிகம், குறைவு என்ற கருத்துகளையும் புகுத்தலாம். எண்வரிசையில் முன்பு வருவதை சிறிது என்றோ குறைந்தது என்றோ சொல்கிறோம் என்றும் பின்பு வருவதை பெரிது என்றோ அதிகமானது என்றோ சொல்கிறோம் என்றும் சொல்லிக்கொடுக்கலாம். இந்த கருத்துகளை விளக்க வெவ்வேறு எண்ணிக்கையான

பொருட்குவியல்களை படமிட்டு காட்டலாம். எண்களை அறிந்தபின் சிறு எண்களை கூட்டுவதை கற்பித்து படிப்படியாக கழித்தல், பெருக்கல், மீதியின்றி வகுத்தல் ஆகியவற்றை கற்பிக்கவேண்டும். பின்ன எண்களையும் பதின்மப்பின்னங்களையும் அறிமுகமாக்கி அவற்றில் கணக்கீடுகளை செய்வது தொடக்கக்கல்வியின் இறுதியில் இடம்பெறவேண்டும்.

எண்களை வரிசைப்படுத்தும்போது எழுத்துகளின் அகரவரிசையையும் அறிமுகமாக்கலாம். எண்களில் இருப்பதுபோலவே எழுத்துகளிலும் முன்பு வருவதும் பின்பு வருவதும் இருப்பதை காட்டலாம். உயிரெழுத்துகள் அகரமுதலாகவும் மெய்யெழுத்துகள் ககரமுதலாகவும் இருப்பதை காட்டி இறுதியில் உயிர்மெய்யெழுத்துகளின் முழு

அட்டவணையை காட்டவேண்டும்.

பிறகு மாணவர்கள் தாங்களே கற்பனைசெய்த கதைகளை சொல்லவும் எழுதவும்வேண்டும். அவர்களது எண்ணங்களை எழுத்தில் வடிக்கச்செய்யவேண்டும். அவர்கள் விரும்பும் தலைப்பில் கட்டுரைகளை எழுதச்செய்யவேண்டும். தொடக்கத்தில் இந்த எழுத்துகள் ஓரிரு முழுத்தொடர்களாக இருக்கலாம். நாளடைவில் அளவில் பெரிதாகலாம். இந்த கதைகளில் எண்களும் எண்கணக்கீடுகளும் இடம்பெறலாம்.

இதற்கிடையில் இசை, நடனம் போன்ற கலைகளில் சுவை எற்படும்படி பல நிகழ்ச்சிகளை பார்க்கச்செய்யலாம். கர்நாடக இசை என்ற ஒரு கலை இருக்கிறது. பரதநாட்டியம் என்ற மற்றொரு கலை இருக்கிறது. இந்த கலைகளில் சிறந்து விளங்கும் மேதாவிகள் சென்னையிலுள்ள

சங்கீத வித்துவத்து சபை என்றும் மியூசிக்கு அகாடெமி என்றும் அழைக்கப்படும் ஒரு கட்டிடத்தின் நான்கு சுவர்களுக்குள் மட்டுமே தங்கள் கலைகளை வெளிப்படுத்துவார்களாம். எனினும், பல இரண்டாந்தரக்கலைஞர்களும் சில முற்போக்கான கலைஞர்களும் தங்கள் பாடல்களையும் நடனங்களையும் இணையத்தில் கிடைக்கச்செய்கிறார்கள். நகரங்களில் நடக்கும் சில நிகழ்ச்சிகளுக்கும் பிள்ளைகளை இயன்றால் அழைத்துச்செல்லலாம்.

தொடக்கக்கல்வியின் முடிவில் மாணவர்கள் தமிழில் நன்கு எழுதப்படிக்கவும் கூட்டல், கழித்தல், பெருக்கல், வகுத்தல் ஆகிய கணக்கீடுகளை செய்யவும் அறிந்திருக்கவேண்டும். பேரெண்களின் கணக்கீடுகளை கணிப்பானால் செய்ய தெரியவேண்டும். ஆங்கிலம் போன்ற

ஒரு வேற்றுமொழியை இன்னும் நாம் புகுத்தவில்லை என்பதை நோக்குக. அதை இரண்டாமைக்கல்வியில் தொடங்குவோம்.

## இரண்டாமைக்கல்வி

தொடக்கக்கல்வியின் நோக்கம் மாணவர்களை எழுதப்படிக்கவும் எண்கணக்கீடுகளை செய்யவும் அணியமாக்குவது. இந்த மொழித்திறமையையும் கணக்குத்திறமையையும் பயன்படுத்தி அறிவை பெறத்தொடங்குவது இரண்டாமைக்கல்வியில். இரண்டாமைக்கல்வியில் மாணவர்கள் பல துறைகளுக்கு அறிமுகமாகவேண்டும். கணிதம், அறிவியல், தொழினுட்பம், மருத்துவம், வரலாறு, புவியியல், பொருளியல், கலைகள் போன்ற பல பாடப்பகுதிகளின் தொடக்கநிலைகளை படிக்கலாம். ஒரு குறிப்பிட்ட நூலை படித்து அதிலிருந்து கேள்விகளை படிக்கும் பழக்கத்தை விட்டு,

மாணவர்கள் பொதுவாக விரும்பிய துறைகளில் அறிவைப்பெற வாய்ப்பு இருக்கவேண்டும். இதற்கான வளமூலங்கள் ஏராளமாக அவர்களுக்கு கிடைக்கவேண்டும். இந்த வளமூலங்கள் இப்போது தரமான தமிழில் இல்லை. இவற்றை அறிஞர்கள் உருவாக்கியபின்பே இந்த கல்விமுறையை செயலாக்கவேண்டும்.

பாடத்திட்டத்தில் அகலமும் ஆழமும் இருக்கவேண்டும். எல்லாப்பாடங்களும் எல்லாருக்கும் கிடைக்கவேண்டும். மாணவர்கள் தாம் விரும்பும் பாடங்களில் விரும்பும் ஆழத்துக்கு செல்ல வாய்ப்பு வேண்டும். ஒரு பாடத்திட்டத்தின் ஒரு மட்டம் அடுத்தமட்டத்துக்கு அடிப்படையாக அமையவேண்டும். எல்லா பாடப்பகுதிகளிலும் உயர்நிலைப்பாடங்களை படிக்க உயர்நிலையான மொழித்திறமையும் தேவை.

இதனால் மொழித்திறமையும் இணையாக முன்னேறவேண்டும்.

பிள்ளைகள் பாடப்பகுதிகளில் தாங்களாகவே ஆய்வுலாவும் கட்டின்மை இருக்கவேண்டும். இளம்பிள்ளைகளுக்கு எதை முதலில் படிப்பது எது உயர்நிலைப்பாடம் என்ற அறிவும் தேர்ந்தெடுக்கும் திறமையும் இருக்கின்றனவா என்ற கேள்வி எழலாம். தேவையானபோது வழிநடத்தவும் கண்காணிக்கவும் பெற்றோர்களும் ஆசிரியர்களும் இருக்கிறார்கள் என்பதை மறந்துவிடவேண்டாம். இங்கு கவனிக்கவேண்டியது என்னவென்றால், வழிநடத்தல்கள் விளைவுநோக்கியதாக இல்லாமல் பிள்ளைகளின் இயல்பான ஆர்வத்தின் அடிப்படையில் இருக்கவேண்டும். எல்லா தொழில்களும் சமமாக மதிக்கப்பட்டு எல்லாருக்கும் ஒரு அடிப்படையான

வாழ்க்கைமுறை கிடைக்கும் சமூகத்தில் விளைவுநோக்கிய கல்வி இருக்காது. இசை, நடனம், விளையாட்டுகள் போன்றவற்றிலும் பழக்கம் ஏற்படவேண்டும். ஒவ்வொரு தொழிலிலும் அதற்கான அறிவும் இயற்றிறனும் உள்ளவர்களே ஈடுபடுவார்கள்.

ஆங்கிலத்தை படிக்க விரும்புவோருக்கு அதை தமிழின்வழி சொல்லிக்கொடுக்கலாம். அதில் ஆர்வமுள்ளவர்கள் இப்போது ஆங்கிலப்பள்ளிகளில் படிப்பதைவிட மிகவும் நன்றாக அந்த மொழியை கற்றுக்கொள்வார்கள். முதலில் இருமொழிகளிடையான வேறுபாடுகளை மாணவர்கள் புரிந்துகொள்ளவேண்டும். தமிழில் ஒரு எழுத்துக்கு ஒரு ஒலியும் (ஒலியன் எனப்படும் ஒரு ஒலித்தொகுதி) ஒரு ஒலிக்கு ஒரு எழுத்தும் என்ற நியதி இருக்கிறது; ஆங்கிலத்தில் அது இறுக்கமாக

இல்லை. ஒவ்வொரு ஆங்கிலச்சொல்லுக்கும் எழுத்துகளை மட்டுமல்லாமல் அதை எவ்வாறு ஒலிக்கவேண்டும் என்பதையும் தனியாக கற்கவேண்டும். முழுத்தொடர்க் கட்டமைப்பு தமிழில் எழுவாய், வேற்றுமைத்தொடர்கள், வினைச்சொல் என்ற முறைமையில் இருப்பினும் இந்த முறைமையை மாற்றிக்கொள்ளலாம். செயப்படுபொருள் இரண்டாம் வேற்றுமை என்பதை நோக்குக. ஆங்கிலத்தில் முழுத்தொடர்க்கட்டமைப்பு எழுவாய், வினைச்சொல், செயப்படுபொருள் என்ற முறைமையிலே எப்போதும் இருக்கிறது; மாற்றவியலாது. தமிழில் பின்னொட்டுகளான வேற்றுமையுருபுகள் ஆற்றும் பங்கை ஆங்கிலத்தில் முன்னமைவிகள் என்ற தனிச்சொற்கள் ஆற்றுகின்றன. செயப்படுபொருளுக்கு முன்னமைவி இல்லை. அதை இடத்தாலே

அறியவேண்டும். இதனாலே முறைமையை மாற்ற இயலாது. இந்த வேறுபாடுகளை இன்றைய ஆசிரியர்களும் கற்றறிஞர்களும் உணர்ந்ததாக தோன்றவில்லை. இவற்றை உணராததால் தமிழையும் ஆங்கிலத்தையும் ஒரேவிதத்தில் பேசியும் எழுதியும் குழப்புகிறார்கள். ஆங்கிலத்தில் பெயர்ச்சொற்கள் பின்னொட்டில்லாமல் தனியாக நிற்பதுபோலவே தமிழிலும் எழுதுகிறார்கள். ஆனால் சொற்றொடரின் கட்டமைப்பால் இது தமிழில் பல குழப்பங்களை ஏற்படுத்துகிறது.

எளிய சொற்றொடர்களில் தொடங்கி ஒரு கருத்தை தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுதிக்காட்டவேண்டும். இதனால் மாணவர்கள் தமிழிலும் ஆங்கிலத்திலும் புலமைபெறுவதுடன் இரண்டுக்குமான வேறுபாடுகளை புரிந்துகொள்வார்கள். ஒரு

மொழியிலிருந்து மற்றொரு மொழிக்கு அந்தந்த மொழியின் கட்டமைப்பின்படி மொழிபெயர்ப்பார்கள். இவ்வாறான மொழியறிஞர்கள் தமிழுக்கும் வேறு பல மொழிகளுக்குமிடையிலும் தோன்றவேண்டும். அவர்கள் அந்தந்த மொழியைப்பேசும் சமூகங்களுடன் தமிழர்களின் பாலங்களாக பணியாற்று வார்கள். நாளடைவில் இந்த பணியை எந்திரங்கள் செய்யலாம்.

இப்போதிருக்கும் கல்வி தமிழுடன் தொடர்பில்லாமல் ஆங்கிலத்தை கற்பிக்க முயல்கிறது. தமிழை மட்டமாகவும் ஆங்கிலத்தை உயர்வாகவும் கருதுகிறது. இதனால் ஆங்கிலப்பள்ளிகளில் படிப்பவர்கள் தமிழை முற்றிலுமாக இழந்துவிடுகிறார்கள். ஆங்கிலம் தாமரையிலைத்தண்ணீரைப்போல்

தனியாக நிற்கிறது. சில தலைசிறந்த பள்ளிகளைத்தவிர, தமிழ்நாட்டின் ஆங்கிலப்பள்ளிகளில் படித்த பெரும்பான்மையான மாணவர்களுக்கு ஆங்கிலமும் சரியாக தெரியவில்லை.

உயர் இரண்டாமைக்கல்வியில் மாணவர்கள் தங்களுக்கு பிடித்தமான பாடப்பகுதிகளில் தனித்துவமடைய தொடங்குகிறார்கள். இங்கும் கட்டின்மை வேண்டும். பாடப்பகுதிகளை மூன்று தொகுதிகளாக பிரித்து முதற்றொகுதி பொறியியலுக்கும் இரண்டாந்தொகுதி மருத்துவத்துக்கும் மூன்றாந்தொகுதி சட்டத்துக்கும் அணியமாக்குகிறது என்ற இன்றைய நிலை மாறவேண்டும். பொறியியலருக்கும் மருத்துவருக்கும் சட்டம் தெரிந்திருக்கலாம். ஆர்வமுள்ள எல்லாரும் கணிதத்தையும் பொறியியலையும்

அறிவியலையும் அறியலாம்.

அறிவை பல துறைகளாக செயற்கையாக பிரித்துவிட்டோம். இப்போது, பல துறைகளிலிருந்து அறிவும் திறமையும் தேவைப்படும் சமூகச்சிக்கல்களை தீர்க்கவியலாமல் திண்டாடுகிறோம். பல்கலைக்கழகங்கள் துறையிடை ஆராய்ச்சிகளை ஊக்குவிக்க முயல்கின்றன. ஒரு சமூகத்தின் கற்றறிஞர்கள் பல துறைகளையும் அறிந்திருக்கும்போது பலவிதமான சமூகச்சிக்கல்களை தீர்க்கும் இயன்மை அந்த சமூகத்துக்கு இருக்கும்.

நான் பல துறைகளிலும் ஆர்வமெடுத்து வாசித்து பணியாற்றுபவன். எழுத்தாளர்கள் தமிழில் எழுவதில் ஒரு சீர்மை வேண்டும் என்பதற்காக, பல துறைகளிலுமுள்ள கலைச்சொற்களை திரட்டி ஒரே இடத்தில் வழங்கும் முயற்சியில்

ஈடுபட்டிருக்கிறேன். ஒரு முறை சட்டத்துறையின் கலைச்சொற்களை தமிழில் ஆக்கும் முயற்சியைப்பற்றி அறிந்து அதன் பொறுப்பாளரிடம் பேசி அதில் நானும் பங்கேற்க விரும்புவதாக சொன்னேன். அவர் என் கல்வியையும் பட்டங்களையும் கேட்டார். நான் அவற்றையும் கலைச்சொற்களை தொகுப்பதில் நான் எடுத்த முயற்சிகளையும் சொன்னேன். ஆனால் அவர், ‘நீங்கள் அறிவியல்; நாங்கள் சட்டம்’ என்று சொல்லிவிட்டார். சட்டத்தைப்பற்றி எனக்கு ஏதும் தெரிந்திருக்க வாய்ப்பில்லையாம். சட்டவல்லுநர்களும் அறிவியலர்களும் சேர்ந்து பணியாற்றும் சாத்தியத்துக்கே இடமில்லையாம். மேலும், இவர் சட்டத்தில் ஒன்றும் தமிழில் ஒன்றுமாக இரண்டு முனைவர்ப்பட்டங்களை பெற்றவர் என்றும் சொன்னார். ஒருவரை

சான்றிதழ்களே அறிவாளியாக்கவில்லை என்பதை இவர் உணரவில்லை. இவர் சான்றிதழ்களுக்கு அப்பால் செல்ல மறுக்கும் குறுகிய நோக்குள்ளவர். நான் இப்போது அறிந்தவற்றுள் பெரும்பான்மையானவை முனைவர்ப்பட்டத்தை பெற்றபின் தொழிலாற்றும்போது கற்றவையே. முனைவர்ப்பட்டத்தை கல்வியின் தொடக்கமாகவே நான் கருதுகிறேன். இவர் முனைவர்ப்பட்டமே கல்வியின் உச்சம் என்று எண்ணுகிறார்போலும்.

## உயர்கல்வி

தொடக்கக்கல்வியை அரசுகள் இலவசமாக வழங்குவது இந்தியாவின் அரசிலக்கணப்படி கட்டாயம் என்று முன்பு பார்த்தோம். நடைமுறையில் உயர் இரண்டாமைக்கல்விவரை இலவசமாக உள்ளன. உயர்கல்வியும் இலவசமாகவே வழங்கப்படவேண்டும். ஏனெனில், சமூகத்துக்கு தேவையான பொறியியலர்கள், மருத்துவர்கள், பேராசிரியர்கள் போன்ற தொழில்களுக்கு தகுந்த ஆட்களை தேர்ந்தெடுத்து அவர்களுக்கு பயிற்சியளித்து அமர்த்துவதே சமூகத்துக்கு நல்லது. அப்போது, அந்த தொழில்களுக்கான அறியியன்மையும் திசையமைவும் உள்ளூக்கமும் யாருக்கு அதிகமாக இருக்கிறதோ அவர்கள் அந்த

தொழில்களுக்கு வருவார்கள்.

இப்போது யார் அதிக விலையை கொடுக்க முன்வருகிறார்களோ அவர்கள் வருகிறார்கள். விலைக்கு கல்வியை வாங்கியபின் அவர்கள் செலவிட்ட தொகையை தொழிலில் மீட்டெடுப்பதே அவர்களது முதல் நோக்கமாகிறது. மருத்துவர்கள் நோயாளிகளின் நலத்துக்கு முதன்மையளிக்க இயலாது. பொறியியலர்களுக்கு தாங்கள் கட்டும் பாலங்கள் நெடுங்காலம் நிலைத்திருக்கவேண்டும் என்ற பேரவா இருக்காது. மாறாக, மருத்துவர்கள் பணக்கார நோயாளிகளுக்கே பணியாற்றுவார்கள். அவர்களுக்கு விலையுயர்ந்த சிகிச்சைகளை பரிந்துரைப்பார்கள். நோய் எதனால் குணமாகும் என்பதைவிட தமக்கு எதனால் அதிக வருவாய் வரும் என்பதே அவர்களுக்கு முக்கியமாகும். பொறியியலர்கள்

ஈடுபடும் கட்டுமான ஒப்பந்தங்களில் ஊழல்களும் முறைகேடுகளும் தரமின்மையும் இருக்கும். இதெல்லாம் கல்வியை வணிகப்பொருளாக்குவதால் வரும் விளைவுகள்.

சுருங்கச்சொன்னால், மருத்துவர்களை உருவாக்கி சமூகத்துக்கு சேவையளிக்க அமர்த்துவது ஊருக்கு நடுவில் ஒரு கிணற்றை வெட்டுவதைப்போன்ற ஒரு சமூகச்செயல். கிணறுவெட்டும் செயலை தனியாரிடம் ஒப்பந்தமாக விட்டாலும் அதை அரசே கட்டுப்படுத்தவேண்டும். தனியார் தம் விருப்பப்படி கிணற்றை வெட்டி வைத்துக்கொண்டு ஒவ்வொரு வாளிநீரையும் தான் விரும்பிய விலைக்கு விற்கவிட்டால் அதை வாங்க இயலாதவர்களுக்கு நீர் கிடைக்காது. இதைப்போலவே இன்றைய நிலையில் ஏழைகளுக்கு பல வசதிகள்

கிடைக்கவில்லை.

மருத்துவம் போன்ற உயர்கல்வியை வழங்க மிகவும் செலவாகும். எனவே அதற்கான உள்ளம் (அறியியன்மை, திசையமைவு, உள்ளூக்கம்) உள்ளவர் களை தேர்ந்தெடுத்து அவர்களுக்கு பயிற்சியளிப்பது சமூகத்துக்கு நல்லது; சமூகத்தின் வரிப்பணத்துக்கும் நல்லது. இதற்கே நுழைவுத்தேர்வுகள் தேவையாகின்றன.

நான் இங்கு விவரிக்கும் கல்விமுறையில், மாணவர்கள் தம் திறமைகளை மற்றவர்களுக்கு வெளிப்படுத்தும் போட்டித்தேர்வுகளை இப்போதே முதன்முதலாக எதிர்கொள்கிறோம் என்பதை நோக்குக. இதுவரை மாணவர்கள் போட்டியில்லாமலே படித்து வந்தார்கள். எனினும், தம்மைத்தாமே மதிப்பறிவதன் மூலம் தேர்வெடுப்பதில்

தாங்களாகவே பயிற்சிபெற்றிருக் கின்றனர். போட்டித்தேர்வுகளுக்காக சிறப்புப்பயிற்சிய ளிப்பது வழக்கொழியவேண்டும். எல்லாருக்கும் சமமான கல்வியும் பயிற்சியும் கிடைக்கவேண்டும். அந்த பயிற்சியின் அடிப்படையிலே தேர்வுகள் இருக்கவேண்டும். சமமின்மை இருக்கும்போது அதற்கான மாற்றுவழிகளை கையாளவேண்டும்.

நாடுமுழுவதும் ஒரேவிதமான கல்வி இருந்தால் மட்டுமே நாடுமுழுவதுமான தேர்வு இருக்கலாம். எல்லாப்பாடப்பகுதிகளும் நாட்டளவில் சீராக இருக்கவியலாது என்பதை முன்பு பார்த்தோம். பொறியியல், மருத்துவம் போன்ற துறைகளில் சீரான கல்வியும் தேர்வும் இருக்கலாம். ஆனால், இந்த துறைகளிலும், சீரான கல்வியை வழங்காமல் சீரான தேர்வை வைப்பது எப்படி நியாயமாகும்? இப்போதிருக்கும் நீட்டுத்தேர்வு, கூட்டுத்தேர்வு

போன்றவை நியாயமற்றவை.

இதைப்போலவே, இநிசே (இந்தியநிர்வாகச் சேவைகள்), இகாசே (இந்தியக்காவற்சேவைகள்), இவபம் (இந்தியப்பணிஞர்தேர்வாணையம்), தநாவபம் (தமிழ்நாட் டரசுப்பணிஞர்தேர்வாணையம்) போன்ற தேர்வுகளுக்கு சிறப்புப்பயிற்சியளிக்கும் பயிலகங்களை சட்டமுரணாக்கி மூடவேண்டும்.

## தாராளச்சிந்தனை

ஒரு சமூகத்தின் இளைஞர்கள் அந்த சமூகத்திலிருந்தும் மற்ற சமூகங்களிலிருந்தும் எழும் சிக்கல்களையும் தேவைகளையும் உணர்ந்தும் அறிந்தும் அவற்றைப்பற்றி சிந்திக்கும் பக்குவத்தையும் மனநிலையையும் பெறவேண்டும். இதற்காக இளைஞரின் மனங்கள் கட்டின்றி சிந்தனைகளை மேற்கொள்ள வேண்டும்; சமூகத்தளைகளிலிருந்து விடுபடவேண்டும். இந்த கட்டற்ற சிந்தனையை மறுப்பதில் உயர்வகுப்பினருக்கு ஆர்வம் உண்டு. தாழ்த்தப்பட்டோர் கட்டின்றி சிந்திப்பதை அவர்கள் விரும்பமாட்டார்கள். ஒடுக்கப்பட்டோர் தாமாக சிந்திக்காமல் ஒடுக்குவோர் சொன்னதை குருட்டுத்தனமாக நம்புவது ஒடுக்குவோருக்கு நன்மையளிப்பது.

அதற்கு உகந்த கல்வியை ஒடுக்குவோர் சமூகத்துக்கு வழங்குவது இயல்பு.

இவ்வாறான கல்வி இந்தியாவில் மத அடிப்படையில் நடைபெற்றதை வரலாறு காட்டுகிறது. நான்கு வண்ணங்களாக மனிதரை பிரித்து சாதியமைப்பை வகுத்து அதன்மீது கேள்வியை எழுப்பாத வகையில் மக்களை மூளைச்சலவைசெய்து வைத்திருந்தனர். கடவுளின் பெயரைச்சொல்லி மக்களை அச்சுறுத்தி வைத்திருந்தார்கள். பாவம், புண்ணியம் என்று சொல்லி மிரட்டி வைத்திருந்தார்கள். அந்த நம்பிக்கையின் அமைப்பில் சமூகத்தை மூழ்க்கி வைத்திருந்தார்கள். இந்திய சமூகத்தின் பெரும்பான்மை இன்னும் அவ்வாறே மூழ்கியிருக்கிறது.

இதனால் சமூகம் ஆராய்ச்சியால் அறிவை உற்பத்திசெய்து கல்வியால் பரப்பி

நடைமுறையாக்க இயலவில்லை. இது இந்திய சமூகத்தை துலங்கவிடாமல் தடுத்து மரபின்வழி கீழ்ப்படிதலுக்கு உட்படுத்தியுள்ளது. இது ஒடுக்குமுறைக்கல்வி. இந்த வகையில் இந்திய மாணவர்கள் அனைவரும் ஒடுக்கப்படுபவர்கள். தங்கள் தேவைகளுக்கும் ஆர்வங்ககளுக்கும் தகுந்தபடி தங்கள் சிந்தனையால் எழக்கூடிய ஆய்வுகளால் அறிவுபெறுவதை இந்த கல்விமுறை தடுக்கிறது. இதனால் அவர்களது சொந்த அறியியன்மை வெளிப்படவில்லை.

நாட்டின் எல்லா மக்களின் நன்மையையும் கருதும் கல்வி எல்லாரும் கட்டின்றி சிந்திக்கும் திறனை வழங்கவேண்டும். இதுவரை கேள்வி எழுப்பாமலிருந்த புனிதக்கருத்துகள்மீதும் கேள்வியெழுப்பும் உரிமை ஒவ்வொருவருக்கும் இருக்கவேண்டும். அக்கருத்துகளில் உண்மை

இருந்தால் அதை ஏற்பதற்கும் இல்லாவிட்டால் உதறிவிட்டு அவை ஏற்படுத்திய சமூகத்தளைகளை உடைத்தெறியும் இயன்மை வேண்டும். இவ்வாறான கல்விமுறைக்கு தாராளக்கல்வி என்று பெயர். அதாவது தடையின்றி தாராளமாக சிந்திக்கும் விடுதலையை வழங்குவது. வழக்கமான சிந்தனைக்கு மாறாக சிந்திக்கும் துணிவை வழங்குவது. இவ்வாறான சிந்தனையை உய்யச்சிந்தனை என்கிறோம்.

அச்சமற்ற இந்த சிந்தனைகளாலும் புதிய கருத்துகளாலும் மக்கள் அறிவியல், தொழினுட்பம் போன்ற கண்டுபிடிப்புகளையும் வளராக்கங்களையும் மேற்கொண்டு வணிகத்திலும் தொழில்முனைவத்திலும் புத்தாக்கங்களிலும் ஈடுபட்டு பொருளாதாரத்தை முன்னேற்றுவார்கள். உயர்த்தப்பட்டோர் மட்டுமல்லாமல் எல்லாரும்

உய்யச்சிந்தனைகளில் ஈடுபடும்போது நாட்டின் முழு மனிதவளமும் பயன்படுகிறது. இதனால் சமூகம் செழிப்புறும். ஒரு சிலரது கருத்துகளையே மற்றவர்கள் பின்பற்றும் நிலை மாறி, எல்லாரது கருத்துகளுக்கும் மதிப்பளிக்கும் ஒரு உண்மையான மக்களாட்சிச்சமூகம் உருவாகும்.

# சமத்துவமாக்கல்

சமத்துவமான சமூகத்தில் சமத்துவமான கல்வி இருந்தால், சமூகத்தின் எல்லாப்பகுதிகளிலுமுள்ள அறிவாளிகள் சமூகத்துக்கு பணியாற்றி அதை முன்னேற்றுவார்கள் என்று பார்த்தோம். ஆனால் சமத்துவமற்ற சமூகத்தில் எவ்வாறு சமத்துவமான கல்வியை நிலைநாட்டுவது?

## ஏற்றத்தாழ்வும் பன்மயமும்

இந்திய சமூகம் பல வழிகளில் ஏற்றத்தாழ்வுள்ளது. சாதியாலும் மதத்தாலும் ஏற்பட்ட ஏற்றத்தாழ்வுகள் ஆழமாக வேரூன்றியவை. நகரவாசிகள் சிற்றூர்வாசிகளை பண்படாதவர்களாக எண்ணுவதையும் காண்கிறோம். பணக்காரர்கள் தங்களை அறிவாளிகளாகவும் ஏழைகளை அறிவற்றவர்களாகவும் கருதுகின்றனர். அதிகமாக படித்தவர்கள் குறைவாக படித்தவர்களை மட்டமாகவும் அலுவலகங்களில் வேலைபார்க்கும் அலுவலர்கள் உழைப்பவர்களையும் விவசாயிகளையும் கீழ்த்தரமாகவும் பார்க்கிறார்கள். ஆண்கள் பெண்களை சிறுமையாக நடத்துகிறார்கள். இவ்வாறு பலவிதமான வழிகளில் இந்தியச்சமூகத்தில்

ஏற்றத்தாழ்வுகள் உள்ளன. எல்லா மனிதர்களும் சமமானவர்கள் என்ற மனப்பக்குவம் இல்லாத சமூகம் முதிர்ச்சியடையாத, பண்பாடற்ற, சிறுபிள்ளைத்தனமான சமூகம். இதன் தொன்மைகளையும் பெருமைகளையும் சொல்லி மார்தட்டிக்கொள்வது சிரிப்புக்கிடமானது.

இந்தியாவில் மொழியாலும் கலைகளாலும் வேறுபட்ட மனிதர்கள் இருக்கிறார்கள். இவ்வாறான வேறுபாடுகளை பன்மயம் என்கிறோம். இது ஏற்றத்தாழ்வின் அடிப்படையாகவில்லை. பண்பாட்டின் செறிவையே காட்டுவதால் இது பெருமைக்குரியது. இன்றைய அரசுகள் பெருமைக்குரிய பன்மய வேறுபாடுகளை பூசி மெழுகி ஒற்றைப்பண்பாட்டை இந்தியப்பண்பாடு

என்று திணிக்கப்பார்க்கின்றன. அதே நேரத்தில், ஏற்றத்தாழ்வுகளை உண்டாக்கும் வேறுபாடுகளை களைய எந்த முயற்சியையும் எடுக்கவில்லை; உண்மையில் அரசியற்கட்சிகள் அந்த வேறுபாடுகளை ஊக்குவித்து அரசியலில் தங்களுக்கு சாதகமாக பயன்படுத்த முயல்கின்றன.

சாதி, மதம் போன்றவையும் ஏற்றத்தாழ்வுகளுக்கு அடிப்படையாகாமல் பண்பாட்டின் செறிவுக்கு காரணமாகலாம். அதாவது ஒவ்வொரு சாதியினருக்கும் ஒரு சாதிப்பெருமை இருக்கலாம். கொள்கையளவில், ஒருவர் தன் சாதிப்பெயரையும் பெருமையையும் விட்டுக்கொடாமல் சமூகத்தில் சமவுரிமையையும் பொறுப்புகளையும் வேண்டலாம். ஆனால், நடைமுறையில் உயர்சாதியினர் தம் சாதிப்பெருமையை

விட்டுக்கொடுக்கவில்லை; தாழ்ந்த சாதியினர் தம் சாதிப்பெயரை வெளியிட வெட்கப்படுகிறார்கள். எனவே, இந்தியா என்றாவது ஒருநாள் சாதியின் அடிப்படையிலான பன்மயத்தை கொண்டாடும் என்ற கனவை நாம் இன்றே விட்டுவிடுவது மேல் என்று தோன்றுகிறது.

கல்வி ஏற்றத்தாழ்வுகளை களைந்து பன்மயத்தை பெருமைப்படுத்தவேண்டும். வெவ்வேறு சாதியினருக்கு வெவ்வேறு பண்பாடுகள் இருக்கின்றன என்பதையும் சாதிகளிடையில் ஏற்றத்தாழ்வுகள் இல்லை என்பதையும் கல்வி கற்பிக்கவேண்டும். சாதிக்கொடுமையால் தாழ்த்தப்பட்டவர்களை கல்வி உயர்த்திவிடவேண்டும். இதன் பொருள் தாழ்ந்த சாதியினருக்கு கல்வியை வழங்கவேண்டும் என்பதன்று; உயர்ந்த சாதியினருக்கு கல்வியை வழங்கவேண்டும்

என்பது. அதாவது உயர்சாதியினருக்கு சாதியால் ஏற்றத்தாழ்வுகள் இல்லை என்ற அறிவை புகட்டவேண்டும். இப்போது உயர்சாதியினர் அறிவற்றவர்களாக விளங்குகிறார்கள். இதே காரணத்துவத்தால், படித்தவர்களும் பெரும் பதவிகளில் இருக்கும் அலுவலர்களும் நகரவாசிகளும் பணக்காரரர்களும் அறிவற்றவர்கள்.

ஒருமுறை, தொடர்வண்டியில் என்னுடன் இருந்த உடன்பயணிகளுள் தெகதொம் (தென்கன்னெய்வேதித் தொழிலகங்களின் கூட்டகம்) என்ற நிறுவனத்தில் ஒரு பெரிய பதவியிலிருக்கும் அலுவலரும் இருந்தார். அவருடன் பேசிக்கொண்டிருந்தபோது ‘நம் ஆட்களுக்கு dignity of labourஏ இல்லை’ என்றார். ஏன் அப்படி சொல்கிறார் என்று கேட்டபோது அவர் தமக்குக்கீழ் வேலைபார்க்கும் தொழிலாளர்கள் தங்கள் வேலையை

ஆர்வமாக செய்யவில்லை என்றார்.

Dignity of labour என்பது நான் ஏழாம் வகுப்பிலோ எட்டாம் வகுப்பிலோ படித்த ஒரு ஆங்கிலப்பாடத்தின் தலைப்பு. என் வயதினரான அவரும் அதே பாடத்தை படித்திருப்பார். அதன் பொருள் 'உழைப்பின் பெருமை' என்பது. அந்தப்பாடத்தில் பல தொழிலாளிகள் சேர்ந்து ஒரு பெரிய மரத்தை வண்டியில் ஏற்ற முயல்கிறார்கள். அவர்களது மேற்பார்வையாளர் 'தூக்குங்களடா, உடலில் வலுவில்லையா?' என்றெல்லாம் சொல்லி மிரட்டிக்கொண்டிருக்கிறார். அப்போது இந்த மேற்பார்வையாளரின் மேலாளர் அங்கு வருகிறார். தொழிலாளிகளுக்கு வேலை கடினமாயிருப்பதைக்கண்டு அவரும் ஒருகைகொடுக்கிறார். வேலை எளிதில் முடிந்துவிடுகிறது. இதைக்கண்டு மேற்பார்வையாளர் தான் இதை

செய்திருக்கவேண்டுமே என்று எண்ணி வெட்கப்படுகிறார்.

இதுவே கதை. இதிலிருந்து நாம் என்ன கற்றுக்கொள்கிறோம்? பெரும் பதவியிலுள்ளவர்கள் தொழிலாளர்களின் பணியை மதிக்கவேண்டும் என்பதை கற்றுக்கொள்கிறோம். இதற்கே உழைப்பின் பெருமை என்று பெயர். ஆனால் தொடர்வண்டியில் என்னுடன் பயணித்த அலுவலர் என்ன கற்றுக்கொண்டார்? பெரும் உழைப்பை வழங்கி சிறு ஊதியத்தை பெறும் தொழிலாளர்கள் அதை மகிழ்ச்சியுடனும் ஆர்வத்துடனும் செய்யவேண்டும் என்று இவர் எதிர்பார்க்கிறார். அதுவே உழைப்பின் பெருமையாம். இன்றைய நடைமுறை இவரைப்போன்றவர்களையே பெரும் பதவிகளில் அமர்த்துகிறது. இவரை அறிவில்லாதவர் என்று நான் அழைப்பது

பொருத்தமா, இல்லையா?

மேன்மட்டத்தினருக்கு தாங்கள் மேன்மட்டத்தினர் என்ற இறுமாப்பு உண்டு. மற்றவர்கள் இவர்களுக்கு கீழ்ப்படியவேண்டும் என்று இவர்கள் எதிர்பார்க்கிறார்கள். இவ்வாறான ஏற்றத்தாழ்வுகள் உள்ள சமூகம் வீழ்ச்சியடையும். ஏனெனில், தாழ்த்தப்பட்டவர்களும் மனிதர்களே. எல்லா மனிதர்களுக்குமுள்ள தன்மதிப்பு அவர்களுக்கும் உண்டு. மற்ற மனிதர்களால் தாழ்த்தப்படுவதை எந்த மனிதரும் விரும்பமாட்டார். இதனால் வெறுப்பே மிஞ்சும். தாழ்த்துவோருள் ஒருவர் சாலையில் அடிபட்டுக்கிடந்தால் தாழ்த்தப்பட்டோருள் ஒருவர் கழுத்திலும் கையிலும் கிடப்பதை கழற்றிக்கொண்டு ஓடுவார். அதாவது தாழ்த்தப்பட்டோர் பழிவாங்கும் வாய்ப்பை

எதிர்நோக்கி காத்திருப்பார்கள்.

‘நாம் வேறு, அவர்கள் வேறு’ என்ற எண்ணம் சமூகத்தில் பெரும் பிளவுகளையும் அழிவையுமே உண்டாக்கும். சாதியாலும் மதத்தாலும் வசிப்பிடத்தாலும் கல்விமட்டத்தாலும் தொழிலாலும் பொருளாதாரத்தாலும் வேறுபட்டவர்கள் எனினும், எல்லாரும் இந்தியர்கள் என்பது மட்டுமல்லாமல், எல்லாரும் மனிதர்கள் என்ற எண்ணம் நிலைக்கவேண்டும். இந்த உணர்வை கல்வி உண்டாக்கவேண்டும்.

உலகம் பொருளாதார ஏற்றத்தாழ்வுகளால் முனையமுற்றிருக்கும் இன்றைய நிலை தொடர்ந்தால், தாழ்த்தப்பட்டவர்கள் முற்றிலும் அழிந்து, அதன்பின் மேன்மட்டத்தினர் சுகமாக வாழ்வார்கள் என்று 4.6ஆம் பகுதியின் இறுதியில் சொன்னேன். ஆனால் இது மேன்மட்டத்தினரின்

கனவு. இன்றைய நிலை தொடராது. ஒவ்வொரு சமூகமும் ஏற்றத்தாழ்வுகளை ஒரளவுக்கு சகிக்கலாம். ஒரு கட்டத்தில், தாழ்த்தப்பட்டவர்கள் விழித்தெழும்போது ஒரு சமூகப்புரட்சி எற்படும். மேன்மட்டத்தினரிலும் சில நன்னெறியாளர்கள் உள்ளனர். தாழ்த்தப்பட்டோரிலும் சில துணிச்சலாளர்கள் உள்ளனர். இந்த இருவகையானவர்களும் புரட்சியை தூண்டி முன்னடத்துவார்கள். இந்த புரட்சி வெளிப்படையான வன்முறைப்புரட்சியாக இல்லாமலிருக்கலாம். இது இப்போதும் நிகழ்ந்துகொண்டிருக்கிறது; மிகச்சிறு விளைவுகளை பரவலாக ஏற்படுத்திக்கொண்டிருக்கிறது. ஆனால், இந்த மாற்றங்கள் எவ்வளவு விரைவாக நடைபெறுகின்றனவோ அவ்வளவு விரைவாக சமூகம் ஏற்றத்தாழ்வுகளிலிருந்தும் அதன் பின்விளைவான வெறுப்பிலிருந்தும்

விடுபட்டு முன்னேறத்தொடங்கலாம்.

மேன்மட்டத்தினர் தாம் எட்டவியலாத உயரத்தில் இருப்பதாக எண்ணலாம். இயல்பான சமூகவிசைகள் இந்த ஏற்றத்தாழ்வுகளை புரட்டிப்போட்டுவிடுவன. இப்போது மேன்மட்டத்திலிருப்பவர்கள் அப்போது துயருறுவார்கள்.

# கலப்புமணத்தின் அறிவியல்

இந்தியாவில் திருமணங்கள் ஒரு குறிப்பிட்ட சமூதாயத்துக்குள்ளே நடைபெறுகின்றன. இங்கு சமுதாயம் என்பது சாதியும் மதமும் சேர்ந்தது. இந்தியாவில் கிறித்துவர்களிலும் இசுலாமியர்களிலும் சாதிகள் இருக்கின்றன. ஏனெனில் அவர்கள் இடைக்காலத்தில் மதம்மாறியவர்கள். தங்கள் மூலச்சாதியை தக்கவைத்துக்கொண்டனர். சிலர் சில நேரங்களில் தன் சாதியைச்சேர்ந்த வேற்று மதத்தினருடன் உறவாடுகின்றனர். எனவே, சாதியை மதத்துக்கும் மேலாக மதிக்கின்றனர். இவ்வாறு இந்தியாவின் மக்கள் எண்ணற்கரிய குட்டைகளாக பிரிகிறார்கள். இந்த குட்டைகள் ஒன்றுடனொன்று மணவுறவால் கலப்பதில்லை. இதனால் வெவ்வேறு

விதமான மக்களின் மரபணுக்களும் கலப்பதில்லை. இதை சற்று விரிவாக காண்போம்.
மனிதரில் ஒவ்வொரு உயிரணுவிலும் மரபுமெய்யங்களின் 23 இணைகள் இருப்பதை அறிவியல் காட்டுகிறது. ஒவ்வொரு மரபுமெய்ய இணையிலும் நூறாயிரக்கணக்கான மரபணு இணைகள் உள்ளன. ஒவ்வொரு இணையிலும் ஒன்று தாயிடமிருந்தும் மற்றது தந்தையிடமிருந்தும் வருகிறது. இதனால், பொதுவாக, சுமார் 50 நூற்றுவீத மரபணுக்கள் தாயிடமிருந்தும் 50 நூற்றுவீதம் தந்தையிடமிருந்தும் வருகின்றன என்கிறோம். இதனாலே குழந்தையின் தோற்றமும் மற்ற பண்புகளும் தாயையும் தந்தையையும் கலந்திருக்கின்றன. தாத்தாபாட்டியின் சாயல்களையும் காண்கிறோம். ஏனெனில், அவர்களது

மரபுமெய்யங்களே தாய்தந்தையின் வழியாக குழந்தைக்கு வருகின்றன. நான்கு தாத்தாபாட்டிகளுள் குருதியுறவு இல்லை எனில், ஒவ்வொருவரிடமிருந்தும் குழந்தை சுமார் 25% மரபணுக்களை பெறுகிறது. எட்டு பூட்டன்பூட்டிகளுள் ஒவ்வொருவரிடமிருந்தும் சுமார் 12.5% மரபணுக்களை பெறுகிறது. இவ்வாறே, ஒவ்வொரு தலைமுறைக்கும்.

இதே கணக்குப்படி, ஒருவருக்கும் அவரின் உடன்பிறந்தவருக்கும் (அண்ணனோ, அக்காவோ, தம்பியோ, தங்கையோ) 50% பொதுவான மரபணுக்கள் இருக்கின்றன. அண்பிறந்தவருடன் (சித்தி, பெரியம்மா, மாமா, சித்தப்பா, பெரியப்பா, அத்தை ஆகியோரில் ஒருவரின் பிள்ளையுடன்) 25% பொதுவான மரபணுக்களும் இரண்டாம் மட்டத்தில் அண்பிறந்தவருடன் 12.5%உம் என்றவாறே அடுத்தடுத்த நிலையில் பொதுவான

மரபணுக்களின் நூற்றுவீதம் பாதியாக குறைந்துகொண்டேபோகிறது.

மேற்கண்ட கணக்கீடுகள் ஒரே மட்டத்திலுள்ள மூதாதையரிடையில் குருதியுறவு இல்லை என்ற எடுகோளின் அடிப்படையில் ஆனவை. இப்போது ஒருவர் மாமாவின் பிள்ளையையோ அத்தையின் பிள்ளையையோ மணக்கிறார் என்று வைத்துக்கொள்வோம். இவர்கள் அண்பிறந்தவர்கள் என்பதால் இவர்களது 25% மரபணுக்கள் பொதுவானவை. இவர்களின் குழந்தைக்கு தாயிடமிருந்து வந்த மரபுமெய்யங்களும் தந்தையிடமிருந்து வந்தவையும் முற்றிலும் வேறானவையல்ல. மரபுமெய்ய இணைகளின் சுமார் 12.5% இடங்களில் இரண்டு மரபணுக்களும் சமமாகின்றன.

ஒவ்வொருவரிலும் ஒவ்வொரு மரபணுவின் ஒரு இணை உள்ளது. ஒன்று தாயிடமிருந்தும்

மற்றது தந்தையிடமிருந்தும் வந்தவை. மரபணுவிலுள்ள பழுதால் ஏற்படும் நோய்கள் உள்ளன. இரண்டு மரபணுக்களுள் ஒன்றே பழுதானதெனில் நோய் வெளிப்பட 50% வாய்ப்பே உள்ளது. ஆனால், ஒரே மூலத்திலிருந்து வந்த இரண்டுமே பழுதானவை எனில், அந்த நோய் குழந்தைக்கு உண்டாவது நிச்சயம். அதாவது, நாம் உறவினர்களை திருமணஞ்செய்யும்போது பழுதுள்ள மரபணுக்கள் செறிவடைகின்றன. தொலைவானவர்களை திருமணஞ்செய்யும்போது அவை நீர்த்துப்போகின்றன.

ஒரே குடும்பத்துள்ளோ வகுப்பினுள்ளோ மணவுறவுகள் உள்ள ஒரு சமூகத்தில் பழுதான மரபணுக்கள் பல தலைமுறைகளாக செறிவடைகின்றன. மாறாக, எல்லாவிதமான மரபணுக்களும் கலக்கும் சமூகத்தில்

மரபணுப்பன்மயம் இருப்பதாக சொல்கிறோம். இவ்வாறான சமூகங்கள் நோய்களை எதிர்த்து சூழல்களுக்கு தகவமைந்து படிமலர்ந்து பிழைக்கும் வாய்ப்பு அதிகம். இதனாலே அறிவியல் அகச்சேர்க்கையைவிட புறச்சேர்க்கை சிறந்தது என்று பரிந்துரைக்கிறது.

## கல்வியால் கலப்பு

கல்வியிலாவது எல்லாரையும் சமமாக நடத்துவது இந்த இனக்கலப்பின் ஒரு முதற்படியாகலாம். இனக்கலப்பைவிட சமூகக்கலப்பு எளிமையானது. திருவிழாக்கள், கலைநிகழ்ச்சிகள், பொதுக்கூட்டங்கள் போன்ற சமூகச்சூழல்களில் பலவகையான மக்கள் ஒன்றுகூடி பங்குபெறலாம். அமெரிக்காவில் கிட்டத்தட்ட எல்லா நகரங்களிலும் பேரூர்களிலும் தமிழ்ச்சங்கங்கள் இருக்கின்றன. இவற்றில்' சாதி, மதம், தொழில் போன்ற வேறுபாடுகளின்றி எல்லாத்தமிழர்களும் உறுப்பினராகி நிகழ்வுகளிலும் கேளிக்கைகளிலும் விருந்துகளிலும் பங்கேற்கிறார்கள். பள்ளிகள், கல்லூரிகள் போன்ற கல்விநிறுவனங்களும் இணையவழி

நடைபெறும் வகுப்புகளும் இவ்வாறான சமத்துவச்சூழல்களை ஏற்படுத்துகின்றன.

மாணவர்களிடையில் சாதியின் அடிப்படையிலோ மதத்தின் அடிப்படையிலோ பொருளாதாரத்தின் அடிப்படையிலோ வேறுபாடுகள் தோன்றாமலிருக்கவே பள்ளிப்பிள்ளைகள் சீருடையணிந்து வருமாறு ஆசிரியர்கள் சொல்கிறார்கள். இந்த நோக்கத்தை புரிந்துகொண்டால் கையில் சாதிக்கயிற்றை கட்டுவது, முகத்துக்கு முக்காடிடுவது, நெற்றியில் விபூதிபூசுவது, பொட்டிடுவது போன்ற அடையாளங்களை மாணவர்கள் இடமாட்டார்கள்; பரந்த உள்ளமுள்ள பெற்றோரும் இடச்சொல்லமாட்டார்கள்.

இன்றைய நடைமுறையில், ஒரு பள்ளியில் படிக்கும் எல்லா மாணவர்களும் சீராக உடையணியும் பழக்கம்

இருப்பினும், வெவ்வேறு பள்ளியின் மாணவர்கள் வெவ்வேறு சீருடைகளை அணியும்படி பள்ளிகள் பணிக்கின்றன. பொதுப்பள்ளிகளின் மாணவர்களை தனியார்ப்பள்ளிமாணவர்களிலிருந்து பிறித்தறிவது எளிது. ஒவ்வொரு தனியார்ப்பள்ளியும் தனித்துத்தோன்றும்படி ஒருத்துவமான சீருடையை கட்டெழுதுகிறது. சில பள்ளிகளின் மாணவர்கள் கழுத்துக்குட்டை, காலுறை, மூடிய காலணிகள் போன்றவற்றை அணிகின்றனர். இதனால் சீருடைகள் அந்தந்த பள்ளிக்கு ஒரு விளம்பரமாக அமைகின்றன. இது சீருடையின் அடிப்படைநோக்கத்தை தோற்கடிக்கிறது.

கல்வியின் பாடப்பகுதிகள், பாடநூல்கள் போன்ற பாடப்பொருள்கள் எல்லா அருகிட மாணவர்களுக்கும் பொதுவாக

இருக்கவேண்டும் என்றேன். அவ்வாறு இருக்கும்போதும், மாணவர்களின் குடும்பப்பின்னணிகள் வெவ்வேறானவை. இப்போதைய கல்விமுறையில் படித்தவர்களின் பிள்ளைகளுக்கு பள்ளிச்சூழலுக்கும் வீட்டுச்சூழலுக்கும் அதிகமான வேறுபாடு இல்லை. பள்ளியில் பேசும் கருத்துகள் பெற்றோருக்கு பழக்கமானவை. அவற்றை பிள்ளைகள் வீட்டிலும் கேட்கிறார்கள். ஆனால் படிக்காத ஏழை மக்களின் பிள்ளைகளுக்கு படிப்பு பள்ளியிலே முடிந்துவிடுகிறது. வீட்டில் அவர்களது வாழ்க்கைமுறை மிகவும் வேறுபட்டது.

ஒரு வீட்டில் தாயோ தந்தையோ பொறியியலர் என்று வைத்துக்கொள்வோம். அந்த வீட்டில் அன்றாட வாழ்வில் கணிதம், ஏரணம், பொறியியற்கருத்துகள்,

அறிவியற்கண்டுபிடிப்புகள் போன்ற உரையாடல்கள் நடைபெற வாய்ப்புள்ளது. அந்த வீட்டுப்பிள்ளைகள் பள்ளியில் இதே கருத்துகளை எதிர்கொள்ளும்போது அவை இயல்பாகத்தோன்றுகிறன. மாறாக, பெற்றோருக்கு அடிப்படைக்கல்வி மட்டுமே உள்ள வீட்டின் பிள்ளைகள் பள்ளிப்பாடங்களை வேற்றுக்கருத்துகளாக காணலாம்.

பொறியியலர், மருத்துவர், பேராசிரியர் போன்றோர் வீட்டில் அறிவுநூல்களை வாசிக்கின்றனர். சிலரது வீடுகளில் சிறு நூலகங்களே இருக்கின்றன. இந்த வீடுகளிலுள்ள பிள்ளைகளுக்கு புத்தகம், கணினி, வாசித்தல், எழுதுதல் போன்றவை பழக்கமானவை. மாறாக, ஏழைவீட்டுப்பிள்ளைகள் பள்ளிக்கு செல்லும்போதே புத்தகத்தை முதலில்

காண்கிறார்கள். இதனால், இவர்களுக்கு அவை அச்சுறுத்தும் வேற்றுப்பொருள்களாக தோன்றுகின்றன. இதனாலே, 9.2ஆம் பகுதியில் எல்லாப்பிள்ளைகளுக்கும் மழலைப்பருவத்திலே புத்தகங்களை காட்டி கதைகளை படித்துக்காட்டவேண்டும் என்று சொன்னேன்.

கர்நாடக இசையிலும் பரதநாட்டியத்திலும் ஒரு குறிப்பிட்ட உயர்சாதியினரே முன்னணியில் இருக்கின்றனர். ஒருவிதத்தில், இவர்கள் மற்றவர்களுக்கு இந்த கலைகளை கிடைக்கவிடாமல் தங்களுக்குள் வைத்துக்கொள்ள விரும்புகிறார்களோ என்று நாம் ஐயுறலாம். ஆனால், மற்ற வீட்டுப்பிள்ளைகளும் இவர்களிடம் சென்று இந்த கலைகளை கற்கிறார்கள். எனினும், இந்த கலைகளில் ஏற்கனவே பழக்கமுள்ள குடும்பங்களில் இது அன்றாட வாழ்வின் ஒரு

பகுதியாகிறது. சிலர் வீட்டுவேலைகளை செய்யும்போது திரைப்படப்பாடல்களை முணுமுணுப்பதுபோல் இவர்கள் கர்நாடகப்பாடல்களை முணுமுணுக்கிறார்கள். இங்கு வளரும் பிள்ளைகள் சிறுவயதிலே கர்நாடக இசையை வீட்டிலும் கச்சேரிகளிலும் கேட்டு வளர்கிறார்கள். இவர்கள் எதிர்கொள்ளும் உறவினரும் நண்பர்களும் இந்த இசையில் சுவைஞராயிருக்க அதிக வாய்ப்புள்ளது. மற்றவர்களுக்கு வீட்டில் அந்த சூழ்நிலை இல்லை. அவர்கள் எதிர்கொள்ளும் சூழ்நிலையில் இந்த இசை இல்லை. இதனால் கர்நாடக இசையில் பழக்கமில்லாதவர்களின் பிள்ளைகளுக்கு அது முற்றிலும் வேற்றுக்கருத்தாக தோன்றுகிறது. அவர்கள் பள்ளியிலோ ஒரு இசைக்கலைஞரிடம் சென்றோ கற்றுவந்தாலும் அது அங்கே நின்றுவிடுகிறது.

வீட்டில் பழக வாய்ப்பு கிடைப்பதில்லை.

இதே காரணத்தாலே, தமிழ்க்குடும்பங்களின் பிள்ளைகள் பள்ளியில் முற்றிலும் ஆங்கிலத்திலே படித்தாலும் அவர்களுக்கு ஆங்கிலம் சரியாக தெரிவதில்லை. ஏனெனில், அவர்களது அன்றாட வாழ்வில் ஆங்கிலம் இல்லை.

ஒரு சமூகத்தின் பல பகுதியினரிடையில் பழக்கவழக்கங்களில் உள்ள இந்த வேறுபாடுகளை பண்பாட்டுப்பன்மயம் என்கிறோம். இந்த வேறுபாடுகள் சுவையானவை. இவற்றை நாம் போற்றலாம். ஆனால் இவை ஏற்றத்தாழ்வுகளுக்கு அடிப்படையாகக்கூடாது. கர்நாடக இசையை அறிந்தோர் தங்களை உயர்வாகவும் அதை அறியாதவர்களை தாழ்வாகவும் எண்ணக்கூடாது. பொறியியலர்கள் தங்களை உயர்வாகவும் மற்ற தொழிலர்களை

இழிவாகவும் கருதக்கூடாது. சமூகத்தில் வெவ்வேறு சாதியினர் இருப்பினும் உயர்சாதி, தாழ்சாதி என்ற கருத்துகள் இருக்கக்கூடாது. ஒரு குடும்பத்தில் பழக்கமான தொழில் அந்த குடும்பத்தின் பிள்ளைகளுக்கு இயல்பாக தோன்றுகிறது என்பது குலக்கல்வி என்ற கருத்துக்கு நம்மை இட்டுச்செல்கிறது. ஒரு தச்சரின் பிள்ளை தச்சுவேலையை சிறுவயதிலிருந்தே காண்கிறார். பெற்றோருக்கு அந்த தொழிலில் உதவுவதால் அதில் தானும் பழகுகிறார். இதிலிருந்து தச்சரின் பிள்ளை தச்சராகவே ஆகவேண்டும் என்று சொல்வது குலக்கல்வி. இதே ஏரணத்துடன் முடிவெட்டுபவரின் பிள்ளை முடிவெட்டுபவராகவும் துணிவெளுப்பவரின் பிள்ளை துணிவெளுப்பவராகவும் ஆகவேண்டும். ஒவ்வொரு சாதியினருக்கும் ஒரு குலத்தொழிலை ஒப்படைத்தது

மட்டுமல்லாமல், தொழில்களிலும் சாதிகளிலும் ஏற்றத்தாழ்வுகளை புகுத்தியது இந்திய மரபு.

ஆனால், தச்சரின் பிள்ளைக்கு தச்சுவேலையில் ஆர்வம் இல்லாமல் கணிதத்திலோ கர்நாடக இசையிலோ ஆர்வம் ஏற்பட்டால் என்ன செய்வது? ஒரு கர்நாடக இசைவல்லுநரின் பிள்ளைக்கு தச்சுவேலையில் ஆர்வம் எற்பட்டால் என்ன செய்வது? பிறப்பாலே தொழிலையும் சமூகத்தில் ஒரு படிவரிசையையும் நிச்சயிப்பது நியாயமா? அவ்வாறிருந்தால் உள்ளத்தனைய உயர்வது எவ்வாறு? சமூகத்தை உயர்த்துவது எவ்வாறு? புதிய தொழில்களுக்கும் புத்தாக்கங்களுக்கும் ஆட்கள் எங்கிருந்து வருவார்கள்? அவ்வாறான நாட்டில் அறிவியலும் தொழினுட்பமும் எவ்வாறு தழைக்கும்?

எனவே, ஒவ்வொருவருக்கும் எந்த படிப்பிலோ தொழிலிலோ ஆர்வம் ஏற்படுகிறதோ அதில் குடும்பச்சூழ்நிலை இல்லாவிட்டாலும் அதற்கான ஒரு சூழ்நிலையை ஏற்படுத்திக்கொடுப்பதே நியாயம். அது கல்வியின் ஒரு நோக்கமாகவேண்டும். இது பிறப்பால் ஏற்பட்டிருக்கும் ஏற்றத்தாழ்வுகளை நாளடைவில் நீக்கும்.

இந்த சூழமைவில் சில தமிழ்த்திரைப்படங்கள் என் நினைவுக்கு வருகின்றன. 1980ஆம் ஆண்டில் வெளியான ‘வறுமையின் நிறம் சிவப்பு’ என்ற திரைப்படத்தில் உயர்சாதியைச்சேர்ந்த இசைக்கலைஞரின் மகன் இசையில் நாட்டமில்லாமல் தனக்கு பிடித்ததும் வேலைவாய்ப்பில்லாததுமான கல்வியை படித்துவிட்டு வேலை கிடைக்காமல் திண்டாடி இறுதியில் முடிவெட்டும் தொழிலில் அமர்கிறார். இந்த திரைப்படம் வெகுவாக

வரவேற்கப்பட்ட ஒன்று; தெலுங்கிலும் இந்தியிலும் பிறகு எடுக்கப்பட்டு மிகவும் புகழ்பெற்றது. 2023ஆம் ஆண்டில் வெளியான ‘அன்னபூரணி’ என்ற திரைப்படத்தில் ஒரு பெருங்கோயிலில் சமையலாளராக பணியாற்றும் உயர்சாதியினரின் மகள் சமையலில் சிறந்து விளங்கினும், ஒரு உயர்தர விடுதியில் சமையலாளராக பணியாற்ற விரும்பி கோழிக்கறியையும் மற்ற அசைவ உணவுவகைகளையும் சமைக்கிறார். உயர்சாதியினர் இந்த திரைப்படம் தங்கள் விழுமங்களை அவமதிப்பதாக சொன்னதால் இது தடையிடப்பட்டது. 1980க்கும் 2023க்குமிடையில் நாடு எவ்வளவு முன்னேறியிருக்கிறது, பாருங்கள்!

நான் சிறுவனாயிருந்தபோது துணிவெளுக்கும் சாதியினர் துணிகளை வெள்ளாவியில் இட்டு வெளுப்பது

வழக்கமாயிருந்தது. வெள்ளாவி என்பது நீராவியேயன்றி வேறன்று. துணிதுவைக்கும் சூழமைவில் அதை வெள்ளாவி என்கிறார்கள். இன்று வெளிநாடுகளிலிருந்து இறக்குமதியாகும் விலையுயர்ந்த துணியலசிகளில் நீராவியால் வெளுத்தல் என்ற ஒரு பண்புக்கூறு இருக்கிறது. இந்த பண்புக்கூறு இருக்கும் துணியலசிகள் மேலும் விலையுயர்ந்தவை. இந்தியாவின் இயலிடத்தொழிலை மதிக்காமல் அதை வளராக்காமல் விட்டுவிட்டார்கள். இப்போது அதே தொழினுட்பத்தை வெளியிலிருந்து பெருவிலைகொடுத்து வாங்குகிறார்கள். எல்லாருக்கும் எல்லாவிதமான கல்வியும் கிடைக்கச்செய்திருந்தால், துணியலசுவோர் பொறியியலையும் பொறியியலர்கள் துணியலசலையும் கற்றுக்கொண்டிருக்கலாம்.

இரண்டையும் சேர்த்து துணியலசிகளை வடிவமைத்து வெளிநாடுகளுக்கு ஏற்றுமதிசெய்திருக்கலாம்.

Figure 1 “Automatic washing machines with steam cleaning technology are ideal for handling tough stains and deep cleaning” – The Hindustan Times, February 10, 2023.

மாணவர்கள் படிக்கும்போதே அவர்களுக்கு தொழிலகப்பட்டறிவை வழங்குவதற்காக, பல நிறுவனங்கள் அகவர்மை என்பதை ஏற்பாடுசெய்கின்றன. இநத ஏற்பாடு மருத்துவம், கணினியறிவியல் போன்ற துறைகளில் வேலைபார்க்கும் அனுபவத்தை மாணவர்களுக்கு வழங்குகிறது. மாணவர்களுக்கு பலவிதமான உலக அனுபவங்களை வழங்கும் மற்றொரு ஏற்பாடு மாணவர் இடைமாற்றத்திட்டம் என்பது. இதன்படி பள்ளிமாணவர்கள்

ஒரு வேற்றுச்சமூகத்துக்கு சென்று அங்குள்ள மாணவர்களுடன் பழகி புதிய நண்பர்களை உண்டாக்கி அவர்களது பண்பாட்டையும் பழக்கவழக்கங்களையும் அறிந்துகொள்கிறார்கள். இந்த திட்டத்தின்போது இவர்களுக்கு வேறு நாட்டிலோ சமூகத்திலோ உள்ள மாணவர்களின் பெற்றோர்கள் விருந்தோம்பி வீட்டில் தங்கவைத்து உணவளிக்கிறார்கள். இந்த இடைமாற்றத்தால் மாணவர்கள் ஒரு பரந்த உலகநோக்கை பெறுகிறார்கள். மற்ற மக்களைப்பற்றியும் அவர்களது வாழ்க்கைமுறையைப்பற்றியும் ஒரு புரிதலும் மதிப்பும் ஏற்படுகின்றன. இந்த திட்டம் ஒரு சமூகத்திலுள்ள மாணவர்களை மற்றொரு சமூகத்தில் மூழ்க்கி எடுக்கிறது.

தமிழ்நாடு பன்மயமான மக்கள் வாழும் மாநிலம். ஒவ்வொரு வட்டாரத்துக்கும்,

ஒவ்வொரு பொருளாதார மட்டத்துக்கும், ஒவ்வொரு சாதிக்கும் ஒவ்வொரு பண்பாடு இருக்கிறது. இவ்வாறான ஒரு உட்சமூகத்திலுள்ள பிள்ளைகளை மற்றொரு உட்சமூகத்தில் சில நாட்களுக்கு மூழ்கவைப்பது பெரும் நன்மையை உண்டாக்கும். தன்னைப்போன்ற நண்பர்களைத்தவிர வேறுபட்ட நண்பர்களை பெறுவார்கள். வேறுவகையான மக்களைப்பற்றிய புரிதலும் மதிப்பும் உண்டாகும். இது மாணவர்கள் அதுவரை கண்டிராத அறிவு, கலாச்சாரம், விழுமம் ஆகியவற்றை கற்கச்செய்வதுடன், மற்றவர்களது உணர்ச்சிகளையும் மரபுகளையும் புரிந்து போற்றும் வாய்ப்பையும், பொருத்தமான சூழமைவுகளில் சகிப்புத்தன்மையையும் இரக்கத்தையும் உண்டாக்கும். இதனால் மக்கள்

ஒருவரையொருவர் மதிக்கும் ஒரு உண்மையான மக்களாட்சியச்சமூகம் உருவாகும்.

# தாழ்த்தப்பட்டோருக்கு உதவி

சமூகத்தில் ஏற்கனவே சமத்துவம் இல்லாதபோது, கல்வி சமத்துவமான வாய்ப்புகளை அளித்தபோதிலும் சமத்துவமின்மை ஏற்படுகிறது என்று பார்த்தோம். இவ்வாறான சமூகத்தில் சமத்துவக்கல்வி போதாது. சமத்துவமின்மையை நிரப்பி சீராக்கும் ஒரு கல்வி வேண்டும்.

பெருங்கல்வி இல்லாத குடும்பத்திலும் பெற்றோர் தங்களால் இயன்றவரை கல்விக்கான சூழலை உருவாக்க பல வழிகளை வகுக்கலாம். நான் ஒரு சிற்றூரில் வெற்றிலையை பயிரிடும் ஒரு விவசாயக்குடும்பத்தில் பிறந்தவன். என் பெற்றோர் இருவருமே அவர்களுக்கு கிடைத்த உயர்கல்வியான ஐந்தாம்

வகுப்புவரை படித்தவர்கள். நான் தொடக்கப்பள்ளியில் இருந்தபோது, என் வீட்டில் நூல்கள் இல்லை. அக்காலத்தில், கடையில் பொருள்வாங்கும்போது, கடைக்காரரர் பழைய செய்தித்தாளின் துண்டுகளில் பொருள்களை மடித்து தருவது வழக்கம். என் தாயார் பொருள்களை பயன்படுத்தியபின், அந்த தாள்களை தூர எறிவதற்குமுன் அவற்றிலுள்ள சொற்களை படித்துக்காட்டுமாறு என்னை கேட்பதுண்டு. என் தந்தை வெற்றிலைபறித்ததற்கான சீட்டுகளை என்னிடம் தந்து எண்களை கூட்டி சொல்லச்சொல்வதுண்டு. இவ்வகையில், பள்ளிக்கு வெளியிலும் எனக்கு எழுத்துகளும் சொற்களும் எண்களும் வாசித்தலும் பொருளுணர்தலும் கணக்கிடுதலும் பழக்கமாயின. கல்வி வாழ்வுடன் தொடர்பானது.

சமத்துவமின்மையை நிரப்ப அரசு கல்வியிலும் வேலைவாய்ப்பிலும் இடவொதுக்கீட்டை வழங்குகிறது. இடவொதுக்கீடு வரவேற்கத்தக்கது. ஆனால் கல்வியாலும் அறிவாலும் தகுதிபெறாதவர்களும் இடவொதுக்கீட்டால் வேலைபெறுகிறார்கள் என்ற குறையுரையும் இருக்கிறது. இடவொதுக்கீடு எந்த அளவுக்கு இருக்கவேண்டும் என்ற பெருங்கேள்வியும் இருக்கிறது. சமத்துவமின்மையின் நீட்களத்தை அளவிடுவது கடினம். கொள்கையளவில், இடவொதுக்கீட்டின் நூற்றுவீதம் சமத்துவமின்மைக்கு நேர்விழுக்காட்டில் இருக்கவேண்டும். சமத்துவமின்மை குறையக்குறைய ஒதுக்கீட்டின் நூற்றுவீதமும் குறைந்து இறுதியில் சமத்துவமின்மையும் ஒதுக்கீடும் ஒரே நேரத்தில் மறையவேண்டும்.

இந்த இலக்கை நோக்கி சமூகத்தின் எல்லாப்பகுதியினரும் பயணிக்கவேண்டும்; குறிப்பாக, மேற்சாதியினர், படித்தவர்கள், அலுவலர்கள், தொழினுட்பர்கள், பெரும் பதவியில் இருப்பவர்கள், அறிஞர்கள் போன்றோர் கீழ்ச்சாதியினர், படிக்காதவர்கள், தொழிலாளிகள், உழைப்பாளிகள், விவசாயிகள், பாமரர்கள் போன்றோரின்மீது இரக்கங்கொண்டு அவர்க ளுக்கு கல்வியிலும் வேலைவாய்ப்பிலும் சமவாய்ப்பு கிடைப்பதற்கான முயற்சிகளை மேற்கொள்ளவேண்டும்.

சமூக வேறுபாடுகளை கையாள, ஒரு சமூகத்திலுள்ளவர்களை மற்றொரு சமூகத்தில் மூழ்க்கும் அகவர்மை, மாணவர் இடைமாற்றல் போன்ற செய்நுட்பங்களை முந்திய பகுதியில் பார்த்தோம். கல்விக்கான சூழமைவு இல்லாத

தாழ்த்தப்பட்டோரின் பிள்ளைகளுக்கு இந்த திட்டங்கள் அந்த சூழமைவை சற்றே உருவாக்கிக்கொடுக்கலாம்.

குழந்தையின் கல்வி கருப்பையிலே தொடங்கி மழலைப்பருவத்தில் தொடர்கிறது என்று 9.2ஆம் பகுதியில் பார்த்தோம். இந்த கல்விக்கான சூழ்நிலை சில வீடுகளில் இல்லாததையும் 10.3ஆம் பகுதியில் பார்த்தோம். எனவே, அந்த வீடுகளிலுள்ள பிள்ளைகளுக்கு ஆசிரியர்களோ வேறு நல்ல நோக்கமுள்ள மனிதர்களோ உதவவேண்டும். இதற்காக மழலைக்கல்வியை வழங்கும் பள்ளிக்கூடங்களை அரசு அமைக்கலாம்.

அதே நேரத்தில், நாம் 6.3ஆம் பகுதியில் பார்த்தபடி, ஒரு ஆதிக்க அரசு சிறுவயதிலே பிள்ளைகளின் பிஞ்சுமனங்களில் தம் கொள்கைகளை விதைக்கவும் கல்வியை பயன்படுத்தலாம். மழலைப்பிள்ளைகள்

உலகைப்பற்றி அறிந்துகொள்வதில் ஆர்வமாயிருப்பதால் தகவல்களையும் கருத்துகளையும் திறந்த மனங்களுடன் ஏற்கக்கூடியவர்கள். இந்த வயதில் அவர்களுக்கு கிடைக்கும் திசையமைவு அவர்களது வாழ்வையே வடிவமைக்கிறது. எதிர்காலத்தில் அவர்கள் எவ்வாறான மனிதர்களாக ஆகப்போகிறார்கள் என்பதை நிச்சயிக்கிறது. இதனால் பெற்றோர் இயன்றவரையில் தங்கள் பாதுகாப்பிலே பிள்ளைகளை வைத்திருந்து வழிநடத்தி அவர்கள் அறிவுபெறும்படி திசையமைக்கவேண்டும். அந்தப்பொறுப்பை மற்றவர்களிடம் விட்டால் அந்த மற்றவர்களின் நோக்கத்தை நன்கு புரிந்துகொண்டு செயலாற்றவேண்டும்.

இன்றைய இந்திய மைய அரசுகள் பிள்ளைகளுக்கு இளம் வயதிலே இந்தி,

இந்து, இந்தியா ஆகிய மந்திரத்தை புகுத்தும் ஆர்வமுள்ளவர்கள். இவர்கள் இந்திய மக்களின் பண்பாட்டுப்பன்மயத்தை மறைத்து, ஒற்றைப்பண்பாடும் ஒற்றைமொழியுமுள்ள ஒரு ஒற்றைத்தேசிய நாடாக இந்தியாவை ஆக்க கல்வியை ஒரு கருவியாக பயன்படுத்த விரும்புகிறார்கள். இதனால் பிள்ளைகளை இளம் வயதிலே தங்கள் கட்டுப்பாட்டிலுள்ள பள்ளிகளுக்கு இழுக்கப்பார்க்கிறார்கள்.

பிள்ளைகளை ஐந்து வயது நிறைந்ததும் ஒன்றாம் வகுப்பில் சேர்ப்பது மரபு. ஆனால், நாம் 7ஆம் படலத்தில் பார்த்த தேகதி (தேசியக்கல்விக்கொள்விதி) பிள்ளைகள் மூன்றாம் வயதிலே பள்ளிக்கு செல்லவேண்டும் என்கிறது. இந்த சூழமைவில், 4.1ஆம் பகுதியில் பார்த்த கட்டாயக்கல்வி என்பதன் பொருள் மீண்டும் நோக்கத்தக்கது.

பிள்ளைகளை பள்ளிக்கு அனுப்புவது கட்டாயமன்று. வேண்டுவோருக்கு அரசுகள் கல்வியளிப்பதே கட்டாயம். அந்த கட்டாயமும் ஆறு வயதிலிருந்து பதினான்கு வயதுவரையான பிள்ளைகளுக்கு மட்டுமே. இவ்வாறு கட்டாயமற்ற கல்வியை மூன்று வயதுப்பிள்ளைகளுக்கு வழங்க அரசு முன்வருகிறது என்றால், இதன் பொருள் என்ன? ஏழைகள்மீதும் குறைந்த சாதியினர்மீதும் அரசுக்கு இவ்வளவு அக்கறையா? அக்கறையுள்ள அரசு அந்த ஏழ்மையையும் சாதிக்கொடுமைகளையும் களையவே முற்படவேண்டும். மாறாக, எளிதில் மனப்பதிவாகக்கூடிய பிள்ளைகளை பெற்றோரிடமிருந்து விடுவித்து தன் கட்டுப்பாட்டிலுள்ள பள்ளிகளுக்கு அழைத்துக்கொள்ள விரும்புகிறது.

மக்களுக்கு கல்வியை வழங்கவேண்டியது

ஒரு சமூகச்செயல். இதனால் அது அரசின் கடமை. இவ்வாறான கல்வி மக்களுக்கு பயனுள்ளதாக இருப்பது கட்டாயம். கல்வியை தனியார்ப்பள்ளிகளை நடத்தும் வணிகர்களிடம் விடாமல் சமூக நலனில் அக்கறையுள்ள கல்வியாளர்களின் பொறுப்பில் விட்டு அதற்கான செலவை மட்டும் அரசு ஏற்கவேண்டும். பாடத்திட்டங்களை வகுப்பதிலும் கல்வியின் நிர்வாகத்திலும் அரசு தலையிடக்கூடாது. அவ்வாறான கல்வியமைப்பில் தாழ்த்தப்பட்ட குடும்பங்களின் பிள்ளைகளுக்காக அறிஞர் தேவையான உதவிகளை தேவையானபோது வழங்குவார்கள். அந்த அமைப்பில், பொருளாதாரத்திலும் சமூகத்திலும் பின்தங்கிய பிள்ளைகளும் மழலைப்பருவத்திலிருந்தே கல்விச்சூழலில் பழகி

தகவமைந்துகொள்வார்கள். கல்வியிலும் வேலைவாய்ப்பிலும் இடவொதுக்கீடுகள் தேவையில்லாமற்போய்விடும்.

ஆனால் அந்த நாள் வரும்வரை ஒதுக்கீடுகள் இருக்கவேண்டும்.

# நாம் செய்யவேண்டியவை

சமூக அடிப்படையிலான சமத்துவக்கல்வி இன்றைய தொழினுட்பத்தை பயன்படுத்தும்வகையில் எவ்வாறு இருக்கவேண்டும் என்று பார்த்தோம். ஆனால் இன்றிருக்கும் கல்வியமைப்பு அந்த இலக்கிலிருந்து மிகவும் வேறுபட்டது. இன்றைய நிலையிலிருந்து தொடங்கி அந்த இலக்கை எவ்வாறு வந்தடைவது என்ற கேள்வி எஞ்சியிருக்கிறது. இந்த மாற்றத்தை படிப்படியாகவே கொண்டுவரலாம். இதற்காக கல்விநிர்வாகம், மேன்மட்டத்தினர், ஆசிரியர்கள், பெறோர், பொதுமக்கள்

ஆகியோர் எவ்வாறு பங்களிக்கலாம் என்று இப்போது காண்போம்.

## கல்விநிர்வாகத்தின் பங்கு

இன்றைய நிலையில், கல்வி மேலிருந்து கீழாக நிர்வகிக்கப்படுகிறது. மாணவர்கள் ஆசிரியர்களுக்கு கீழ்ப்படிந்து ஆசிரியர்கள் சொன்னதை படிக்கிறார்கள். ஆசிரியர்களை கல்வியதிகாரிகள் கட்டுப்படுத்துகிறார்கள். கல்விக்கான பாடத்திட்டங்களையும் பாடநூல்களையும் அரசின் நிறுவனங்கள் இயற்றுகின்றன. அரசின் வேறு நிறுவனங்கள் தேர்வுகளை நடத்துகின்றன. இவ்வாறு கல்வியின் இறுதியதிகாரம் அரசிடமே இருக்கிறது. இதனால், அரசு எதை மக்களுக்கு புகுத்த விரும்புகிறதோ அதையே மாணவர்கள் பெறுகிறார்கள். கணிதம், அறிவியல், தொழினுட்பம் போன்ற பாடப்பகுதிகளை கற்பிப்பது அரசு ஆதரிக்கும் பெருநிறுவனங்களின் வசதிக்காக.

பெற்றோர் இந்த பெறுநிறுவனங்களில் வேலைகிடைக்கும் என்ற ஆசையால் ஈர்க்கப்பட்டு பிள்ளைகளை பள்ளிக்கு அனுப்புகின்றனர். சமூகத்துக்கு எது தேவை என்று யாரும் எண்ணுவதில்லை.

ஒருவிதத்தில் பார்த்தால், கல்விக்கு நிர்வாகமே தேவையில்லை. மக்களை கட்டுப்படுத்தி ஒரு நிர்வாகி விரும்பும் திசையில் செலுத்தவே நிர்வாகம் தேவைப்படும். எல்லாரும் அவரவர் விரும்புவதை அவரவர் விருப்பப்படி கற்கலாம் என்ற நிலையில் இவ்வாறான நிர்வாகம் தேவையில்லை. கல்விக்கான வளமூலங்களை அறிஞர்கள் உருவாக்கி எல்லாருக்கும் கட்டின்றியும் இலவசமாகவும் கிடைக்கும்படி செய்யவேண்டும். இதற்கே நிர்வாகம் உதவவேண்டும். நிதியளித்தலும் நிதித்திட்டங்களை வகுத்தலுமே

நிர்வாகத்தின் வேலை. ஆசிரியர்களை பணிசேர்ப்பது போன்றவற்றை கல்வித்துறையில் திறமைவாய்ந்த கல்வியாளர்கள் செய்யவேண்டும். இங்கும், ஒரு ஆழமான நிர்வாகப்படிவரிசை தேவையில்லை. நிர்வாகம் என்பது உதவுவதேயன்றி, கட்டுப்படுத்துவதாக இருக்கக்கூடாது.

இப்போது, நிர்வாகம் கட்டுப்படுத்துவதாக இல்லாவிட்டால் முறைகேடுகளை தடுப்பதும் நீக்குவதும் எவ்வாறு என்று நீங்கள் கேட்கலாம். ஆனால், ஆதிக்கமுறையில், ஆதிக்கர் முறைகேடானவராயிருந்தால் என்ன செய்வது? முறைகேடுகளை தடுக்கவும் நீக்கவும் ஒரு மக்களாட்சிய முறை இருக்கிறது. ஆசிரியர்கள் மாணவர்பின்னூட்டத்தாலும் உடனோர்மீள்பார்வையாலும் தம்மையும் ஒருவரையொருவரும் சரிபார்த்துக்கொள்ள

லாம். ஆண்டுதோறுமோ வேறொரு சீரொழுங்கிலோ ஒவ்வொரு மாணவரும் ஒரு ஆசிரியர் எவ்வளவு உதவியாயிருந்தார் என்பதைப்பற்றியும் ஆசிரியரின் மற்றப்பல தகுதிகளைப்பற்றியும் பின்னூட்டமளிக்க வேண்டும். மாணவர்கள் ஆசிரியரை மதிப்பறிவது இந்தியாவில் கற்பனைக்கெட்டாத கருத்தாக தோன்றுகிறது. ஆனால் அமெரிக்காவில் நான் கண்ட எல்லா இடங்களிலும் மாணவர்பின்னூட்டம் இருக்கிறது. ஒரு ஆசிரியரைப்பற்றி மற்ற ஆசிரியர்கள் வழங்கும் பின்னூட்டத்துக்கு உடனோர்மீள்பார்வை என்று பெயர்.

உடனோர்மீள்பார்வை போன்ற மக்களாட்சிய முறைகள் கல்வியாளர்களுள் பெரும்பான்மையோர் சமூகத்தில் அக்கறையுள்ளவர்கள் என்ற அடிப்படையில் ஆனவை. எந்த

சமூகத்திலும் பெரும்பான்மையோர் சமூகப்பொறுப்பும் புரிதல்களும் உள்ளவர்கள். சமூகவெதிரானவர்கள் ஒரு சிலரே. இவ்வாறான சமூகத்தில், பெரும்பான்மையோர் சிறுபான்மையான சமூகவெதிரானவர்களை இனங்கண்டு தடுத்துவிடுவர். ஒரு சமூகத்தில் பெரும்பான்மையோர் சமூகவெதிரான வர்கள் எனில், அந்த சமூகத்தை அழிக்க வெளியிலிருந்து யாரும் வரவேண்டியதில்லை. அது தானாகவே அழியும்.

கல்விக்கொள்விதிகளை இயற்றுவோர் சமூக நலனுக்காக இயற்றவேண்டும். இங்கும், மக்களாட்சிய முறையில் இயற்றப்படும் கொள்விதிகள் சமூகத்துக்கு நலமளிக்கக்கூடியவை. ஆதிக்கர்கள் இயற்றுபவை அந்த ஆதிக்கர்களுக்கே நலமளிப்பவையாயிருக்கலாம்.

கல்விக்கொள்விதிகள் மாறாத விதிகளாக இல்லாமல், கல்வியை இன்றிருக்கும் நிலையிலிருந்து படிப்படியாக மேலே விவரித்த சமூகநலக்கல்விக்கு மாற்றும் ஒரு வழிவரைவாக இருக்கவேண்டும்.

இந்த வழிவரைவின் முதற்படியாக, ஒவ்வொரு பள்ளியிலிருந்தும் சில தகுந்த மாணவர்களை தேர்ந்தெடுத்து அவர்கள் தாமாகவே படிக்கும் விருப்புமையை வழங்கலாம். மாநிலமுழுவதிலுமுள்ள இவ்வாறான மாணவர்களுக்கு உதவி தேவைப்படும்போது இணையத்தின்வழி உதவ சில ஆசிரியர்களை அமர்த்தலாம்.

ஆங்கிலத்தை விருப்பப்பாடமாக்கவேண்டும். எல்லாரும் ஆங்கிலக்கல்வியையே விரும்பினாலும் இந்த விருப்புமை இருக்கவேண்டும். நாளடைவில் அறிவின் முக்கியத்துவத்தை மக்கள் உணரும்போது

படிப்படியாக இந்த நிலை மாறும். இந்த விருப்பத்தேர்வால், ஆங்கிலத்தில் ஆர்வமில்லாதவர்களும் அறிவை பெறுவார்கள்.

## மேன்மட்டத்தினரின் பங்கு

ஒரு சமூகத்தின் கல்வியாளர்கள் அந்த சமூகத்தின் எல்லாப்பகுதிகளிலிருந்தும் வந்த நிற்பாளர்களாக இருக்கவேண்டும். சில நேரங்களில், வரலாற்று நிகழ்வுகளால், சமூகத்தின் ஒரு பகுதியிலுள்ள மக்கள் கல்வியின்றி இருந்துவிட்டால், எல்லா கல்வியாளர்களும் மற்றொரு பகுதியைச்சேர்ந்தவர்களாயிருக்கலாம். அவ்வாறிருக்கும்போது, கல்வியாளர்கள் தங்கள் விழுமங்களை சமூகத்தின் எல்லாப்பிள்ளைகளின்மீதும் ஏற்றாமல் சமூகத்தின் நன்னெறியான விழுமங்களையே கற்பிக்கவேண்டும்.

இந்தியாவிலே புகழ்பெற்ற ஐயைட்டி எனப்படும் இந்தியத்தொழினுட்பப்பயிலகங்களில்

(இதொப) பணியாற்றும் ஆசிரியக்குழுவில் பெரும்பான்மையோர் பெருநகரில் பிறந்து வளர்ந்த உயர்சாதியினர். இந்தியா ஆங்கிலேயரின் ஆட்சியிலிருந்த காலத்தில் சிற்றூர்களிலும் தாழ்த்தப்பட்ட சாதியினருக்கும் உயர்கல்வி இல்லை. சிற்றூர்களில் இடைப்பட்ட சாதியினர் சிறுபள்ளிகளில் எழுதப்படிக்கவும் எண்கணக்கீடுகளை செய்யவும் கற்றனர். இதனால் நாடு விடுதலைபெற்றதும் இந்த ஐயைட்டிகளை தொடங்கியபோது அதன் ஆசிரியக்குழு பெருநகரின் உயர்சாதியினராயிருந்ததை நாம் புரிந்துகொள்ளலாம். ஆனால் நாடு விடுதலை பெற்று 75 ஆண்டுகள் ஆனபின் இந்த நிலை மாறியிருக்கும் என்று நாம் எதிர்பார்ப்போமன்றோ?

மனித வளத்துக்கும் வளராக்கத்துக்குமான

அமைச்சகம் (மவவவ) நாடாளுமன்றத்தில் சமர்ப்பித்த தரவின்படி, பட்டியற்சாதியினர் (பசா), பட்டியற்பழங் குடியினர் (பப), மற்ற பின்தங்கிய வகுப்பினர் (மபிவ) ஆகியோர் சேர்ந்து இதொபகளில் 9 நூற்றுவீதமும், இமேபகளில் (இந்தியமேலாண்மைப்பயிலகம்) 6 விழுக்காடும் (த பிரிண்டு, 2019). இவற்றுள் சில நிறுவனங்களில் பசா/பப ஆசிரியர்கள் இல்லை. இந்த சமுதாயங்களிலிருந்து தகுதியான வேட்பாளர்கள் இல்லாதது இந்த சமுதாயங்களின் குறைந்த நிற்புமைக்கு காரணம் என்று இதொபவின் அதிகாரிகள் சொல்வதாக த பிரிண்டு மேலும் மேற்கோளிடுகிறது. இந்த சாக்குக்கு பொருளில்லை; பதவிகளின் எண்ணிக்கை மிகமிகச்சில வாகவும், அவற்றுக்கு கடுமையாகப்போட்டியிடும் மக்களில் 70% இந்த வகுப்புகளைச்சேர்ந்தவர்களாகவும்

இருப்பதால், இவர்களுக்கு சமமான அணுகல் இருந்தால் 25%க்கும் மேற்பட்ட தகுதியானவர்கள் இருப்பதற்கு அதிக வாய்ப்புள்ளது.

இதுபோன்ற நிலைமைகள் மாறவேண்டும் எனில், அது செல்வாக்குள்ள உயர்சாதியினரும் பொருளாதார மேன்மட்டத்தினரும் விரும்பினாலே நடைபெறும். இவர்களுள் சமூக நலனையும் சமத்துவத்தின் மதிப்பையும் உணர்ந்த சில உண்மையான அறிவாளிகள் இருப்பார்கள். இவர்கள் கல்வியமைப்பையும் சமூகக்கட்டமைப்பையும் மாற்றியமைக்க உழைக்கவேண்டும்.

## ஆசிரியர்களின் பங்கு

நான் மேலே விவரித்த மாற்றுக்கல்விமுறையில் ஆசிரியர்கள் மாணவர்களுக்கு வழிகாட்டிகளாகவே பங்கேற்கிறார்கள். இங்கு மாணவர்களை அச்சுறுத்தி படிக்கவைக்கும் அதிகாரிகளுக்கு இடமில்லை. மாணவர்கள் தம் கல்விக்கு தாமே பொறுப்பேற்கும்படி மழலைப்பருவத்திலிருந்தே திசையமையவேண்டும். பெற்றோருக்கோ ஆசிரியருக்கோ வேறு யாருக்கோ மனநிறைவளிக்க முயலாமல், தங்கள் அறியார்வத்தாலே கல்வியில் ஆர்வமடையவேண்டும்.

ஆசிரியர்களில் ஒரு கருத்துக்கிளைமாற்றம் ஏற்பட்டாலே இந்த கல்விமுறையை நடைமுறையாக்க இயலும். கல்விமுறைக்கு

நிகராக, ஆசிரியப்பயிற்சியிலும் ஒரு பெருமாற்றம் நிகழவேண்டும்.

ஆசிரியருக்கு எல்லாம் தெரியும், மாணவர்கள் ஆசிரியர்களிடமிருந்து ஒருவழிப்பாதையில் அறிவை பெறுகிறார்கள் என்ற எண்ணம் மறையவேண்டும். ஆசிரியர் அறிவை வழங்குவதற்கு மாறாக, மாணவர்களை சிந்திக்குமாறு தூண்டவேண்டும். அறிவுநூல்களை தாமாக படிக்க ஊக்குவிக்கவேண்டும். மாணவர்கள் ஆசிரியருடனும் மற்ற மாணவர்களுடனும் உரையாட வாய்ப்புகள் இருக்கவேண்டும்.

மாணவர்கள் கேள்விகளை எழுப்ப அஞ்சக்கூடாது. ஐயமோ கேள்விகளோ மனங்களில் எழும்போது அதை ஆசிரியரிடமோ மற்றவரிடமோ கேட்கும் துணிவு இருக்கவேண்டும். மாணவர்களின் கேள்விகளுக்கு விடையளிக்கும்

அளவுக்கு ஆசிரியர்களுக்கு அறிவு இருக்கவேண்டும் என்பது உண்மையே. அதே நேரத்தில், விடைகள் தெரியாதபோது ஒப்புக்கொள்ளவேண்டும். எல்லாம் தெரிந்தவர்கள் உலகில் இல்லை. எல்லாருக்கும் கற்றது கைமண்ணளவே. சிலநேரங்களில் மாணவர்களை சிந்திக்க தூண்டுவதற்காக ஆசிரியர் தமக்கு விடை தெரியாததுபோல் கேள்வியை எழுப்புவது ஒரு செய்நுட்பம்.

இப்போதுள்ள ஆசிரியர்கள் மனப்பாடஞ்செய்து தேர்வெழுதி மதிப்பெண்வாங்கும் கல்வியமைப்பில் பயிற்சிபெற்றவர்கள். புதுவகையான ஆசிரியர்களை எங்கிருந்து பெறுவது? இந்த ஆசிரியர்களிலிருந்தே பெறவேண்டும். அப்படியெனில், அவர்களுக்கு யார் பயிற்சியளிப்பது?

அவர்கள் தங்களுக்குத்தாங்களே பயிற்சியளித்துக்கொள்ளவேண்டும்! இப்போது இல்லாத ஒன்றை எதிர்காலத்தில் உருவாக்க வேறென்ன வழி இருக்கிறது? இருப்பதிலிருந்தன்றோ இல்லாததை உருவாக்கலாம்! இந்த மாற்றம் படிப்படியாகவே நிகழவியலும். அரசின் கொள்விதிகள் மாறினால் அவற்றுக்கு தகுந்தாற்போல் ஆசிரியர்கள் தங்களை தகவமைத்துக்கொள்வார்கள். ஆனால், அரசை நம்பி காத்திராமல், ஆசிரியர்கள் இந்த மாற்றத்தை என்னென்ன வழிகளில் கொண்டுவரலாம் என்று சிந்தித்து அதற்கான சிறு படிகளை மேற்கொள்ளவேண்டும்.

பிள்ளைகளுக்கு தாய்மொழியில் கற்பிப்பதே சிறப்பு என்று பார்த்தோம். தாய்மொழியில் கற்பிக்க முதலில் ஆசிரியர்கள் தாய்மொழியை நன்கு

அறிந்திருக்கவேண்டும். இன்றைய நிலையில், கணிதம், அறிவியல் போன்ற பாடப்பகுதிகளை கற்பிக்கும் ஆசிரியர்களுக்கு தமிழ் சரியாக தெரிவதில்லை. அவர்கள் தமிழ் தமக்கும் மாணவர்களுக்கும் தேவையில்லாதது என்று எண்ணுகிறார்கள். இந்த எண்ணம் மாறவேண்டும். தாய்மொழியே கல்வியின் அடிப்படை என்பதை ஆசிரியர்கள் உணர்ந்தாலே இந்த மாற்றம் ஏற்படும். முதலில், எல்லா ஆசிரியர்களும் தமிழில் மொழித்திறமையை வளர்த்துக்கொள்ளவேண்டும்.

எல்லா ஆசிரியர்களும் தமிழிலக்கணத்தையும் தரமான எழுத்துநடையையும் நன்கறிந்து தமிழில் தெளிவாக எழுதுவதில் பயிற்சிபெறவேண்டும். அதன் அடிப்படையிலே அறிவுப்பாடங்களை

கற்பிக்கலாம்; மாணவர்களையும் தெளிவாக எழுதும்படியும் பேசும்படியும் ஊக்குவிக்கலாம். தமிழில் எழுத தமிழ்99 என்ற விசைப்பலகையில் தட்டச்ச பழகவேண்டும்.

தமிழில் எழுதவும் தட்டச்சவும் பயிற்சிபெறுவது இன்றைய ஆசிரியர்களுக்கு முற்றிலும் புதிதானது. இந்த மாற்றத்துக்கு அவர்களிடமிருந்து பெரும் எதிர்ப்பை நாம் எதிர்பார்க்கலாம். இவர்களை இந்த பயிற்சிகளை எடுக்குமாறு எப்படி ஊக்குவிப்பது? அரசு இதற்கான ஆணைகளை பிறப்பித்து அதற்கான அதிகாரிகளை நியமித்து இந்த பயிற்சியை ஆசிரியர்களின்மீது திணிக்கவேண்டும் என்று நீங்கள் விடையளித்தால், நான் இதுவரை சொன்னவற்றில் எதுவும் உங்கள் மண்டையில் ஏறவில்லை என்று பொருள். ஆசிரியர்களுக்கு தானாகவே

இந்த ஆர்வம் எழுவதற்கான சூழ்நிலையை உருவாக்கவேண்டும். இவ்வாறான கல்வியின் தேவையை ஆசிரியர்களும் மக்களும் உணருமாறு ஒரு விழிப்புணர்ச்சி உண்டாவதே முதற்படி. இதற்கான முயற்சிகளையே அறிஞர்கள் மேற்கொள்ளவேண்டும். அறிஞர்கள் அனைவரும் ஒன்றுசேர்ந்தே இவ்வாறான மாற்றங்களை படிப்படியாக கொண்டுவரலாம். அறிவால் ஏற்படும் மாற்றங்களே நிலையானவை; அதிகாரத்தால் ஏற்படும் மாற்றங்கள் நிலையற்றவை.

## பெற்றோர்களின் பங்கு

இன்றைய கல்வி கல்வியாளர்கள் சொன்னதை மட்டும் படிக்கும்படி பிள்ளைகளை ஒரு கட்டுக்குள் அடைத்துவைக்கிறது. இவர்களது நோக்கம் பிள்ளைகளின் அறிவு வளரவிடாமல் பார்த்துக்கொள்வதுபோல் தோன்றுகிறது. பெற்றோரே பிள்ளைகளின்மீது உண்மையான அக்கறையுள்ளவர்கள். பெற்றோரின் அரவணைப்பில் பிள்ளைகளை மலரவிடுவதே அவர்களை அறிவாளிகளாக்கும் சிறந்த வழி. இதற்கான வளமூலங்களும் திறமையும் இல்லாத பெற்றோர் இந்த வழிகாட்டலை பிள்ளைகளுக்கு வழங்கும் ஆசிரியர்களின் உதவியை நாடலாம்.

பிள்ளைகள் விரும்பியதை அறிந்துகொள்ள பாடநூல்கள் போன்ற வளமூலங்கள்

இணையத்தில் இருக்கும்போது, பெற்றோரின் வழிகாட்டலுடன் பிள்ளைகளை இணையத்தில் உலாவவிடலாம். இணையத்தில் நல்லதும் கெட்டதும் இருக்கின்றன. இதனாலே பெற்றோரின் வழிகாட்டல் முக்கியமாகிறது. பிள்ளைகளுக்கு தொடக்கத்திலே நன்னெறிகளை சொல்லிக்கொடுத்து வளர்த்தால், அவர்கள் தாங்களாகவே தீயவற்றை அணுகாமலிருப்பார்கள்.

ஆனால் இன்றைய நிலையில் போதுமான வளமூலங்கள் தமிழில் இல்லை. பள்ளிகளில் வழங்கும் பாடநூல்களே பிள்ளைகளுக்கு கிடைப்பதால், அவற்றையே அவர்கள் படித்தாகவேண்டும். இருப்பினும், அவர்கள் மதிப்பெண்களை வாங்குவதிலே குறியாயில்லாமல், அறிவை வளர்க்கும்படி பெற்றோர் ஊக்குவிக்கலாம். அறிவுநூல்களையும்

இணையத்திலும் நூல்களிலும் கிடைக்கும் நல்ல தகவல்களையும் பாடங்களையும் படிக்கும் பழக்கத்தை இளமையிலே உண்டாக்கலாம். இது அவர்களது வாழ்க்கைமுழுவதற்கும் உதவும்.

வேலைபெறுவதே கல்வியின் நோக்கம் என்ற மனநிலை பெற்றோரிடமிருந்து மறைந்து, பிள்ளைகளுக்கு அறிவூட்டும் நோக்கத்துடன் அவர்களுக்கு கல்வியளிப்பது முக்கியமானது. அறிவுள்ள பிள்ளைகள் எப்படியும் பிழைத்துக்கொள்வார்கள் என்ற நம்பிக்கை பெற்றோருக்கு பிள்ளைகள்மீது வரவேண்டும்.

ஆங்கிலத்துக்கு அதிகமான முக்கியத்துவத்தை கொடுக்கவேண்டாம். ஆங்கிலம் ஏழைப்பிள்ளைகள் ஏறித்தாண்ட இயலாத ஒரு தட்டியாக செயலாற்றுகிறது. இது மேன்மட்டத்தினருக்கு மிகவும்

வசதியாகிறது. ஆங்கிலம் தெரிந்த பிள்ளைகள் ஆங்கில நூல்களை படிக்கட்டும். ஆனால், ஆங்கிலத்தை படிக்க ஆர்வமில்லாத பிள்ளைகளுக்கும் இயன்றவரையில் தமிழில் மூலங்களை கண்டுபிடித்து அறிவை ஊட்டுங்கள். தொடக்கத்தில் இது கடினமாயிருப்பினும் காலம் செல்லச்செல்ல மென்மேலும் அறிவுநூல்கள் தமிழில் கிடைக்கும்.

## கற்றறிஞர்களின் பங்கு

சமூக மாற்றங்களையும் கல்வியில் சீர்திருத்தங்களையும் உண்டாக்க அரசை நம்பி இருக்கவியலாது. சமூகத்திலுள்ள கற்றறிஞர்களும் மற்ற சமூக ஆர்வலர்களும் இதை மேற்கொள்ளவேண்டும். ஒரு சமூகத்தில் பொதுமக்களுக்கு வழிகாட்டுவது அந்த சமூகத்திலுள்ள அறிஞர்களின் பொறுப்பு. தம் பெயருக்குப்பின் பல ஆங்கில எழுத்துகளை சேர்த்துக்கொண்டிருக்கும் 'படித்தவர்கள்' ஏதோ படித்தோம், வேலைபார்த்தோம், சோறுண்டோம், ... என்றிருந்தால் அவர்கள் பிறந்ததன் பயன் என்ன? அவர்கள் பிறந்ததற்கும் பிறக்காமலிருப்பதற்கும் என்ற வேறுபாடு?

தேடிச் சோறுநிதந் தின்று — பல

சின்னஞ் சிறுகதைகள் பேசி — மனம்

வாடித் துன்பமிக உழன்று — பிறர்

வாடப் பலசெயல்கள் செய்து — நரை

கூடிக் கிழப்பருவ மெய்தி — கொடுங்

கூற்றுக் கிரையெனப்பின் மாயும் — பல

வேடிக்கை மனிதரைப் போலே — நான்

வீழ்வே னென்றுநினைத் தாயோ?

என்று பராசத்தியிடமே சூளுரைத்த பாரதி வாழ்ந்த நாடு இது! சமூகத்தின் பெரும்பகுதியினரான ஏழைகளுக்கு வாழ்க்கையின் அடிப்படைத்தேவைகளை பெறுவதே கடினமாயிருக்கிறது. ஆனால், அடிப்படைத்தேவைகள் நிறைவானபின் மற்ற

செயல்களில் ஈடுபடும் வசதி உள்ளவர்களும் மிகப்பலர் இருக்கிறோம். இவர்களுள் தொலைக்காட்சியின்முன் அமர்ந்து தொடர்நாடகங்களை பார்ப்போர் பலர். இசை, நடனம், ஓவியம் போன்ற கலைகளில் ஈடுபடுவோர் சிலர். உலகம் எவ்வாறு தோன்றியது, எவ்வாறு நடைபெறுகிறது என்பதை சிந்திப்போர் சிலர். சமூகம் ஏன் இப்படி இருக்கிறது, இதை எப்படி முன்னேற்றுவது என்று சிந்திப்போரும் சிலர் இருக்கிறோம்.

சமூகத்தைப்பற்றி சிந்திப்போரே இந்தியாவுக்கு இன்றைக்கு மிகவும் தேவைப்படும் அறிவுப்புரட்சியை ஏற்படுத்துவார்கள். இந்த பணியை செய்வோருக்கு ஊதியம் கிடைக்காது; யாரும் நன்றிசொல்லமாட்டார்கள். இந்த பணியில் சமூகச்சேவையால் மனநிறைவைடையும்

தன்னார்வலர்களே ஈடுபடவேண்டும். சமூக நலனில் அக்கறையுள்ள மிகப்பலரும் இருக்கவேசெய்கிறோம். இவர்களாலே சமூகம் முன்னேறுகிறது. மற்றவர்களும் பயனடைகிறார்கள். உழைக்காமல் பயனடையும் சில ஏமாற்றுக்காரரர்கள் இருப்பதையும் தவிர்க்கவியலாது.

நெல்லுக் கிறைத்தநீர் வாய்க்கால் வழியோடிப்
புல்லுக்கும் ஆங்கே பொசியுமாம் – தொல்லுலகில்
நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்டு
எல்லார்க்கும் பெய்யும் மழை (மூதுரை 10)

இத்தகைய கற்றறிஞர்கள் மழலைக்கல்விக்கான அட்டைநூல்களையும் (9.2ஆம் பகுதி) பள்ளிப்பருவ மாணவர்களுக்கான படநூல்களையும்

தமிழில் உருவாக்கவேண்டும். சிறுவர்களுக்கான கதைநூல்களை தமிழில் எழுதவேண்டும். கணிதம், அறிவியல், வரலாறு, புவியியல் போன்ற பாடப்பகுதிகளை வெவ்வேறு வடிவங்களிலும் வெவ்வேறு நோக்குநிலைகளிலும் வெவ்வேறு குறுக்குவெட்டுகளிலும் வழங்கவேண்டும். இவற்றை அச்சுநூல்கள், மின்னூல்கள், வானலையிலும் இணையத்திலும் கேட்பொலிகள், தொலைக்காட்சியிலும் இணையத்திலும் காணொளிகள் போன்ற ஊடகங்களில் வழங்கலாம். இது மாணவர்கள் தாமாக சிந்திப்பதை தூண்டும். மற்றவர்கள் சொல்வதை அலசி ஆராய்ந்து வெவ்வேறு எண்ணப்போக்குகளை புரிந்துகொள்ள உதவும். ஒவ்வொரு பாடப்பகுதிக்கும் ஒரே நூல் என்பது ஆதிக்கர்களின் வழிமுறை. மாணவர்கள் வேறு கோணங்களில்

சிந்திப்பதை தடுக்கிறது. ஒரு ஆதிக்கர் சொல்வதை மட்டுமே கேட்கச்செய்கிறது.

அறிஞர்கள் எண்ணிக்கையில் மிகச்சிலர் எனினும், ஆதிக்கர்களிடம் இருப்பதுபோல் நாளிதழ்கள், தொலைக்காட்சி, சமூகவூடகங்கள் போன்றவற்றில் பரப்புரைத்து மக்களை மூளைச்சலவைசெய்யும் பணவசதி இல்லாவிட்டாலும், இவர்கள் சொல்வதில் உண்மையான விழுமங்கள் இருப்பதால் இந்த கருத்துகளை நாளடைவில் மக்கள் ஏற்பார்கள். பலவிதங்களில் மீண்டும் மீண்டும் எடுத்துரைத்துக்கொண்டேயிருக்கவேண்டும். எறும்பு ஊற கல்லும் தேயும்.

அறிஞர்கள் முன்னெடுத்து மக்கள் ஏற்றபின் அரசு இந்த தேவையை உணர்ந்து இந்த பாடப்பொருள்களை உருவாக்கும் கற்றறிஞர்களுக்கு மானியம், ஊதியம்

போன்றவற்றை வழங்க முன்வரலாம். அதன்பின், வருவாயின்றி பணியாற்ற இயலாத மற்ற அறிஞர்களும் இந்த பணியில் ஈடுபடலாம்.

இதற்கெல்லாம் முதற்படியாக, அறிஞர்கள் தமக்கு தெரிந்த ஆங்கிலத்தில் மட்டுமே செயலாற்றுவதை விட்டு, மக்களுக்குத்தெரிந்த தமிழில் உயர்நடையில் எழுதவும் பேசவும் கற்றுக்கொள்ளவேண்டும். அதன்பின் மிகப்பல அறிவுநூல்களை எழுதலாம். மக்களுக்கு அறிவூட்டலாம்.

எதிர்காலத்தில் எந்திரங்கள் தாமாகவே மொழிபெயர்க்கும் நிலை வரவேண்டும். ஆனால், அதற்குமுன் எந்திரக்கற்றலுக்கு அடிப்படையான தரவகம் உண்டாகவேண்டும். ஒன்றுமில்லாத நிலையிலிருந்து எந்திரங்கள் கற்க இயலாது. இதற்காக ஒவ்வொரு துறையிலும் பாடப்பகுதியிலும் பல நூல்கள்

தமிழில் ஏற்கனவே இருக்கவேண்டும். இந்த நூல்களை படித்துப்பார்த்தே எந்திரங்கள் கற்றுக்கொள்கின்றன. அதன்பின் எதிர்காலத்தில் வரும் நூல்களையும் கட்டுரைகளையும் ஆய்வறிக்கைகளையும் எந்திரங்கள் உடனடியாக மொழிபெயர்க்கலாம். எனவே, முதற்படியாக அறிஞர்கள் மிகப்பல நூல்களை தமிழில் எழுதவேண்டும். மேலும், எந்திரங்கள் இந்த நூல்களிலிருந்து கற்பதே நிலையாயிருக்கப்போவதால், நூல்கள் உயர்நடையில் தரமாக எழுதப்படவேண்டும்.

# மாணவர்களின் பங்கு

சமூகத்தின் எந்தப்பகுதியிலும் இளைஞர்களுள் ஒரு பகுதியினர் மிகுந்த அறியியன்மை உள்ளவர்களாக இருப்பார்கள். கட்டற்ற கல்வியால் இவர்கள் சிறந்த சிந்தனையாளர்களாக ஆகலாம்; சமூகத்துக்கு பெரும் பொருளுள்ள வகையில் பொறுப்புகளை வகிக்கலாம். ஆனால் கட்டற்ற கல்வி இல்லாத இக்காலத்தில், இவர்களை இன்றிருக்கும் மரபுக்கல்வி ஒரு குறிப்பிட்ட தடத்திலே செலுத்தி சிந்தனைத்திறனை மழுக்கிவிடுகிறது. எனினும், இன்றைய நிலையில், வாழ்க்கையில் முன்னேறவும் சமூகத்தில் முக்கியப்பங்கை வகிக்கவும் மரபுக்கல்வி கட்டாயத்தேவையாகவும் இருக்கிறது. இந்த அறிவாளிகள் இந்த நிலைமையை புரிந்துகொண்டு

மரபுக்கல்வியை பெறவேண்டும். அதே நேரத்தில், இந்த கல்விமுறை தங்கள் அறிவை மழுக்கிவிடாமலும் பார்த்துக்கொள்ளவேண்டும். பள்ளிப்பாடங்களை படித்து அதிக மதிப்பெண்களை வாங்குவதுடன், மற்ற நூல்களையும் படித்து பல விதமான சிந்தனைகளையும் வளர்க்கவேண்டும். கேள்விகளை எழுப்பவும் அதன் விடைகளை தேடவும் அஞ்சக்கூடாது. இவர்களே வளர்ந்து கற்றறிஞர்களானபின் முந்தைய பகுதியில் சொன்ன அறிவுப்புரட்சியை உண்டாக்குவோர். இன்றிருக்கும் கல்வியமைப்பில் கற்றுத்தேர்ந்து செல்வாக்கு பெற்றபின், இந்த அமைப்பிலுள்ள குறைகளை களைந்து நல்ல கல்வியமைப்பை நிறுவும் முயற்சிகளை எடுக்கவேண்டும். ஆங்கிலத்தில் படித்து முன்னேறியபின் தமிழர்களுக்கு

வேற்றுமொழிக்கல்வி நியாயமற்றது என்பதை மறந்துவிடலாகாது. ஆங்கிலத்தால் முன்னேறிய ஒவ்வொருவருக்கும் இணையாக எத்தனைபேர் கல்வி ஆங்கிலத்தில் இருப்பதால் அறிவுபெறாமல் இருக்கின்றனர் என்பதையும் எண்ணிப்பார்க்கவேண்டும்.

இந்த அறிவாளிகளே பிற்காலத்தில் அரசியலிலும் தேர்தலிலும் ஈடுபட்டு அரசுப்பதவிகளையும் கைப்பற்றி அரசியற்புரட்சியையும் கொண்டுவரவேண்டும். இதற்கு, பொதுமக்கள் அரசியலமைப்பை புரிந்துகொண்டு அறிவாளிகளுக்கு வாக்களிப்பது முதற்படி. இதற்கான கல்வியை பொதுமக்களுக்கு வழங்கும் முறைகளையும் இந்த இளைஞர்கள் சிந்திக்கவேண்டும்.

அறியியன்மையான இளைஞர்கள் சமூகத்தின் எந்தப்பகுதியிலும் இருப்பதாக

சொன்னது மேன்மட்ட இளைஞர்களுக்கும் பொருந்தும். அங்கும் சமூகநீதியை மதிப்பவர்களும் சாதி, மதம், மொழி, பொருளாதாரம் போன்ற வேறுபாடுகளால் ஏற்படும் கேடுகளை உணர்ந்தோரும் இருக்கின்றனர். இவர்கள் தம் பெற்றோர் தம்மை ஏன் ஆங்கிலப்பள்ளிகளில் சேர்த்து தமிழ் தெரியாமற்போகச்செய்தார்கள், தன்னை சமூகத்திலிருந்து வேறுபடுத்தி ஏன் வளர்த்தார்கள் போன்ற கேள்விகளை தம் மனங்களிலாவது எழுப்பவேண்டும். இவர்கள் சமூகத்திலுள்ள சமத்துவமின்மை போன்ற அநீதிகளை களைய முற்படவேண்டும்.

# பொதுமக்களின் பங்கு

கல்வி சமூகச்செயலென்றும் அதை வழங்குவது அரசின் கடமை என்றும் பார்த்தோம். ஆனால் அரசுகள் அதை செய்யாமல் கல்வியை தங்கள் கொள்கைகளை பரப்பும் கருவியாக பயன்படுத்துவதையும் பார்த்தோம். அரசிடம் அதிகாரம் இருக்கிறது; ஆதிக்கம் இருக்கிறது. அரசு வைத்ததே சட்டமாகிறது. அப்படியெனில், மக்கள் வேறு வழியில்லாமல் அரசுக்கு கீழ்ப்படிந்து இருக்கவேண்டியதேவா? அரசிலும் அரசலுவலங்களிலும் ஊழல் நிறைந்திருப்பதாகவும் காவல் போன்ற அரசுத்துறைகள் சரியான முறையில் நடைபெறுவதில்லை என்றும் மக்கள் தமக்குள் குறையுரைத்துக்கொள்கிறார்கள். இதையெல்லாம் இருக்கிறபடி

ஏற்று மக்கள் அமைதியாக சகித்துக்கொள்ளவேண்டியதேவா?

இல்லை! இவற்றுக்கெல்லாம் மூலகாரணம் மக்களே!

மக்களாட்சியில் இறுதியான அதிகாரம் மக்களின் கைகளிலே இருக்கிறது. அரசை தேர்ந்தெடுக்கும் உரிமை மக்களதே. 'எல்லாரும் இந்நாட்டு மன்னர்' என்று பாரதி சொன்னதன் பொருள் இதுவே. இதனாலே அரசின் உயர் மட்டத்தில் இருப்பவர்களை அமைச்சர்கள் என்கிறோம். மன்னர்களான மக்களே தங்களுக்கு சேவையளிக்க அமைச்சர்களையும் பாராளுமன்ற உறுப்பினர்களையும் சட்டமன்ற உறுப்பினர்களையும் ஐந்து ஆண்டுகளுக்கு ஒருமுறை தேர்ந்தெடுக்கிறார்கள்.

ஆனால், பொதுவாக, இந்திய மக்கள் தாங்களே மன்னர்கள் என்பதை

உணரவில்லை. அரசியல்வாதிகளை வலிமைவாய்ந்தவர்களாகவும் தலைவர்களாகவும் பார்க்கிறார்கள். அவர்களை தங்கள் சேவகர்களாக பார்க்கவில்லை. காரணம் அரசியல்வாதிகள் தம்மை பெருமையாக காட்டிக்கொள்ள அவர்களிடம் ஏராளமான பணம் இருக்கிறது. அந்தளவுக்கு பணஞ்சம்பாதிக்க இன்றைய அரசியலில் வழி இருக்கிறது. இதனால் அரசியல்வாதிகளும் அரசியலையும் அரசாட்சியையும் சேவையாக பார்க்காமல் வணிகமாகவே பார்க்கிறார்கள். பெருஞ்செலவிட்டு தேர்தலில் வெற்றிபெற்று செலவிட்டதைவிட பன்மடங்கான பணத்தை சம்பாதிக்க விரும்புகிறார்கள்.

கல்வி வணிகமாகாமல் பார்த்துக்கொள்வதுபோல், அரசியல் வணிகமாவதையும் தடுக்கவேண்டும்.

இப்போது அரசியலிலும் வணிகரே ஈடுபடுகிறார்கள். கல்விவணிகருடன் அரசியல்வணிகரும் கூட்டுக்கள்ளராக செயலாற்றுவதில் வியப்பில்லை. இதையெல்லாம் பார்த்துக்கொண்டு தமிழ்மக்கள், பொதுவாக இந்திய மக்கள், ஏன் சும்மாயிருக்கிறார்கள்?

இங்கும் சாதி போன்றவற்றால் ஏற்படும் தாழ்வுமனப்பான்மை செயலாற்றுகிறது. பொதுமக்கள் ஒன்றுக்கும் உதவாதவர்கள் என்ற மனப்பான்மையை சாதி, பொருளாதாரம், வாழிடம் போன்ற காரணங்களால் இந்த சமூகம் உருவாக்கி வைத்திருக்கிறது. அரசியலமைப்பை யும் அதனால் உண்டாகும் அரசாட்சியையும் மேன்மக்களின் உடைமையாக படிக்காதவர்கள், குறைந்த சாதியினர், ஏழைகள் போன்றோர் கருதுகிறார்கள்.

தமக்கும் இதற்கும் தொடர்பில்லாததுபோன்ற ஒரு மனநிலை இவர்களில் இருக்கிறது.

இந்த எண்ணங்களை மாற்ற, இந்திய மக்கள் இந்தியாவின் அரசியலமைப்பு, அரசிலக்கணம், மன்றங்களின் உறுப்பினர்களை தேர்ந்தெடுக்கும் தேர்தல்கள், அதன் பின்விளைவுகள் ஆகியவற்றைப்பற்றி அறிந்திருப்பது மட்டுமல்லாமல், இவற்றுக்கெல்லாம் தாங்களே பொறுப்பு என்ற எண்ணமும் அவர்களுக்கு ஏற்படவேண்டும். இதையெல்லாம் அறியாமலும் எந்த பொறுப்புணர்ச்சியும் இல்லாமலும் மக்கள் இருப்பதால், அரசியல்வாதிகள் மக்களை தங்களுக்கு சாதகமாக பயன்படுத்திக்கொள்கிறார்கள்.

மக்கள் ஏமாளிகளாயிருந்தால் அரசியல்வாதிகள் மக்களை ஏமாற்றி

வாக்கீடுகளை பறித்துக்கொண்டு தங்கள் விருப்பம்போல் ஆட்சிசெலுத்துவார்கள். உண்மையான மக்களாட்சி மலர, மக்கள் அதற்கான கல்வியை பெறவேண்டும். இதனாலே, மக்களுக்கு வேலைகிடைக்கும் கல்வி மட்டும் போதாது என்கிறேன். எல்லார்க்கும் அரசியல், பொருளாதாரம், கணிதம், அறிவியல் போன்ற எல்லாவிதமான பாடப்பகுதிகளிலும் பொது அறிவு இருக்கவேண்டும். இந்த அறிவு கிடைக்காமல் செய்வதில் இப்போதிருக்கும் அரசுகளுக்கு ஒரு ஆர்வம் உண்டு. ஏனெனில் இவ்வாறான மக்களே இந்த அரசுகளை தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். இவர்களே எதிர்காலத்திலும் தேர்ந்தெடுக்கக்கூடியவர்கள்.

நல்ல அரசை தேர்ந்தெடுக்க மக்களுக்கு கல்வி வேண்டும்; மக்களுக்கு கல்வியளிக்க நல்ல

அரசு வேண்டும். இவ்வாறு ஒன்றையொன்று சார்ந்திருப்பதை ஒரு கொடுஞ்சுழல் என்கிறோம். இந்த கொடுஞ்சுழலை எப்படியாவது உடைக்கவேண்டும். இந்த சுழலை இரண்டு திசைகளிலிருந்தும் சிறிதுசிறிதாக தாக்க முயலவேண்டும். அதாவது, நல்லவர்கள் அரசியலில் நுழையவேண்டும். அதேநேரத்தில், அறிஞர்கள் இயன்றவரை அரசின் உதவி இல்லாமலே மக்களுக்கு கல்வியூட்டவேண்டும்.

# முடிவுரை

கல்வியின் நோக்கம் அறிவூட்டுவது என்றும் சிறந்த கல்வியைப்பெற ஒவ்வொருவரும் அவரவரது தாய்மொழியில் திறமைபெறவேண்டும் என்றும் பார்த்தோம். சமூக நீதியையும் சமத்துவத்தையும் நிலைநாட்ட எல்லாத்தொழில்களும் சமமாக

மதிக்கப்படவேண்டும் என்றும் அந்த தொழில்கள் எல்லாருக்கும் அடிப்படையான வாழ்க்கை வசதிகளை வழங்கவேண்டும் என்றும் பார்த்தோம்.

ஆங்கிலத்தில் கற்பிக்கும் தனியார்ப்பள்ளிகள் சிறந்த கல்வியை வழங்குவதாக மக்களிடையில் ஒரு மாயத்தோற்றம் இருக்கிறது. உண்மையில், கல்வி வேற்றுமொழியில் இருப்பது பிள்ளைகளின் அறிவுக்கு தடையாகிறது. பிள்ளைகளின் உண்மையான அறிவும் ஆற்றலும் வெளிப்படவில்லை. தனியார்ப்பள்ளிகள் கல்வியை விற்று பணமாக்கும் வணிகத்தில் ஈடுபடுகின்றன.

கல்வி ஒரு சமூகச்செயல் என்பதால், அதை இலவசமாக எல்லாருக்கும் கிடைக்கச்செய்வது அரசின் கடமை. கல்வியை அறிஞர்கள் வழங்கவேண்டும்.

அதற்கான செலவை அரசு ஏற்கவேண்டும். ஆனால், இன்றைய இந்திய அரசுகள் கல்வியை தங்கள் கட்டுப்பாட்டில் வைத்து தாங்கள் பிள்ளைகளுக்கு ஊட்ட விரும்பும் கருத்துகளையும் விழுமங்களையும் ஊட்டுகின்றன. இவ்வாறு கல்வியால் ஆதிக்கஞ்செலுத்தி இந்தி, இந்து, இந்தியா என்ற ஒற்றைமொழி, ஒற்றை மதம், ஒற்றைப்பண்பாடு போன்ற கருத்துகளை மக்களுக்கு பிள்ளைப்பருவத்திலிருந்தே கருத்தேற்றுகின்றன.

மக்களுக்கு நன்மையளிக்கும் கல்வி மக்களின் சிந்தனையை தூண்டுவதாயிருக்கவேண்டும். யாரும் திணிப்பதாக இல்லாமல், மாணவர்கள் (பொதுவாக மக்கள் தங்கள் வாழ்நாள்முழுவதும்) தன்னார்வத்தால் முயன்று பெறக்கூடியதாயிருக்கவேண்டும். நான்கு சுவர்களுக்குள்ளோ குறிப்பிட்ட

நேரத்துக்குள்ளோ அடைபடாமல் இன்றைய தொழினுட்பங்களை பயன்படுத்தி பலவிதமான ஊடகங்களின்வழி கல்வியை வழங்கலாம்.

மாணவர்கள் கற்றதை தாங்களே மதிப்பறியும் முறைகள் இருக்கவேண்டும். எழுத்துத்தேர்வு மட்டுமல்லாமல், திறந்த தேர்வு, வீட்டுத்தேர்வு, பருவ அறிக்கை, வாய்மொழித்தேர்வு, பொழிவுரை போன்ற மற்றப்பல தேர்வுகளின்மூலமும் மாணவர் தங்களை மதிப்பறியவேண்டும். உயர்கல்வியின் நுழைசேர்ப்புக்கும் வேலைவாய்ப்புக்குமான மதிப்பறிதல்கள் எல்லார்க்கும் சமமாக கிடைக்கக்கூடிய கல்வியின் அடிப்படையில் இருக்கவேண்டும்.

கல்வி கருப்பையிலே தொடங்குகிறது என்றும் மழலைப்பருவத்தில் தொடர்கிறது என்றும் பார்த்தோம். குழந்தைகள் பல பொருள்களை

கையில் எடுத்தும் வாயில் வைத்தும் போட்டும் அடித்தும் விளையாடுகிறார்கள் என்கிறோம். உண்மையில் அவர்களுக்கு இது கல்வி. அவர்கள் பொருள்களையும் தங்களைச்சூழ்ந்துள்ள உலகத்தையும் அறிந்துகொள்ள முயல்கிறார்கள். இதே அறியார்வத்தையே கல்வியும் ஊக்குவித்து இதே அறியார்வத்தாலே அறிவை வழங்கவேண்டும். கல்வியை விளையாட்டின் உயர்நிலையாகவே கருதவேண்டும். தகவல்களை அறிவதுடன், கருத்துகளை உரையாடவும் விவாதிக்கவும் அனுமதிக்கவேண்டும்.

ஏற்றத்தாழ்வான சமூகத்தில் சமத்துவக்கல்வியும் சமவிளைவை ஏற்படுத்தாது. மேன்மட்டத்தினரின் குடும்பங்களிலும் சூழல்களிலும் பாடப்பொருள்கள், நூல்கள்,

அறிவுக்கருத்துகள் போன்றவை புழங்குவதால் அங்குள்ள பிள்ளைகளுக்கு இவை இயல்பாக தோன்றுகின்றன. ஏழைகள், தாழ்த்தப்பட்ட சாதியினர் போன்றோரின் வீடுகளில் கல்விக்கான சூழல் இல்லாததால் அவர்களின் பிள்ளைகளுக்கு ஆசிரியர்களும் மற்ற அறிஞர்களும் உதவுவது தேவையாகிறது.

கல்வி தாய்மொழியில் இருப்பதே பிள்ளைகளின் நலத்துக்கும் சமூகநலத்துக்கும் நல்லது என்று பார்த்தோம். எனினும், அதற்கான வளமூலங்கள் தமிழில் இல்லாததாலும் உயர்கல்வி ஆங்கிலத்தில் மட்டுமே இருப்பதாலும், இன்றைய நிலையில் பிள்ளைகள் ஆங்கிலத்தை அறிந்திருப்பது தேவையாகிறது. ஆனால், இதற்காக தமிழை புறக்கணித்து ஆங்கிலத்தை தொடக்கக்கல்வியிலே கற்பிப்பது அவர்கள்

அறிவுபெறுவதற்கு தடங்கலாகவே அமைகிறது. பள்ளிக்கல்வி தமிழிலே இருக்கவேண்டும். ஆங்கிலத்தை விரும்புவோர் ஒரு மொழியாக இரண்டாமைப்பள்ளியில் கற்கவேண்டும். அப்போதே ஆங்கிலத்தை நன்கு கற்கும் பக்குவம் இருக்கும். பிள்ளைகள் இருமொழிகளிலும் திறமையடைவார்கள். ஆங்கிலத்திலுள்ள உயர்கல்வியில் வெற்றியடைவதுடன் இவர்களே தமிழில் இன்றைக்கு இல்லாத வளமூலங்களை பிற்காலத்தில் உருவாக்குவர். இது அதன்பின் வரும் பிள்ளைகளின் கல்வியை எளிதாக்கும். எந்திரங்கள் தமிழுக்கும் ஆங்கிலத்தும் (வேறெந்த மொழிக்கும்) இடையில் உடனடியாக மொழிபெயர்க்கும் நாள் விரைவில் வரும். அப்போது உயர்கல்வியும் தாய்மொழியிலே இருக்கும். மொழிச்சிக்கல்

என்பது இல்லாமற்போகும்.

ஆனால் எந்திரங்கள் கற்பதன் முதற்படியாக அறிஞர்கள் ஒவ்வொரு துறையிலும் பாடப்பகுதியிலும் தொடக்கநிலையிலிருந்து உயர்நிலைவரையான மட்டங்களில் தமிழில் நூல்களை எழுதவேண்டும். எந்திரக்கற்றல் புள்ளிவிவர அடிப்படையிலானது என்பதால் இவ்வாறான மிகப்பல நூல்கள் வெளியாகவேண்டும். இவற்றிலிருந்தே எந்திரங்கள் கற்கின்றன.

இன்றைய மாணவர்களே நாளைய அறிஞர்கள். இன்று இவர்கள் தமிழை ஊன்றிக்கற்றாலே நாளை தமிழில் சிறந்த நூல்களை எழுதலாம். வரும் தலைமுறைகளுக்கு கல்வியை எளிதாகவும் தரமாகவும் சமத்துவமாகவும் ஆக்கலாம்.

இன்றைய மாணவர்களே வாக்காளர்களாகவும் அரசியலாளர்களாகவும்

நாளை வரப்போகிறார்கள். இந்தியாவின் அரசமைப்பை கற்று தேர்தல்களின் முக்கியத்துவத்தை நன்கு உணரவேண்டும். இவற்றுக்கெல்லாம் அடிப்படையானது கல்வி என்ற விழிப்புணர்வு பொதுமக்களில், குறிப்பாக அறிஞர்களில் ஏற்படவேண்டும். முதலில் அறிஞர்களில் ஏற்பட்டால் பிறகு பொதுமக்களுக்கு எளிதில் கடத்தலாம்.

# 10. பார்வையம்

கார் 2021; Kar, S. K., Rai, S., Sharma, N. and Singh, A. “Student suicide linked to NEET examination in India: A media report analysis study”, Indian J. Psychol. Med., vol 43, p. 43.

சாத்து 1984; Satt, B. J., “An Investigation into the Acoustical Induction of Intrauterine Learning” (PhD Thesis, California School of Professional Psychology, Los Angeles, 1984).

சித்து 2006; Sidhu, G. S. and Jindal, R. “GATS and higher education: India moving towards global markets”, The Indian Journal of Political Science, vol 67, p. 381.

த பிரிண்டு; The Print. 2019. “Diversity deficit in IIMs, IITs — just 23 STs and 157 SCs in 9,640 faculty posts”, 13 February, 2019. https://theprint.in/india/education/diversity-deficit-

in-iims-iits-just-23-sts-and-157-scs-in-9640-faculty-posts/191246

தேசிய கல்விக்கொள்விதி; “National Education Policy (Draft) 2019”. Ministry of Human Resource Development, Government of India, New Delhi.

நேசன் 2019; Jawahar Nesan, “In Search of Education, Nationalistic Education vs. Society Driven Education”. Indian Universities Press, Chennai.

பென்னிகாக்கு 2017; Pennycock A., “The cultural politics of English as an International Language”, Routledge, Tailor, and Francis Group, London and New York.

பொவொவபு; OECD. 2016. “PISA 2015 RESULTS (VOLUME II): Policies and practices for successful schools”, OECD.

மாநிலங்களவை; Rajya Sabha. 2018. Session – 246, “Unstarred question No. 1852: Source, Unified District Information System for Education”, Delhi.

அகவர்மை - inrernship 126

அரசிலக்கணம் - constitution 23

அருகிடப்பாடப்பகுதி - local subject 91

அறியியன்மை - intelligence 17, 30

அறிவு - knowledge 17, 30

ஆராய்ச்சி - research 30

இந்தியத் தொழினுட்பப் பயிலகங்கள் - Indian Institutes of Technology 133

இந்திய மேலாண்மைப் பயிலகம் - Indian Institute of Management 134

உடனோர் மீள்பார்வை - peer review 132

உய்யச்சிந்தனை - critical thinking 115

உவபு (உலக வணிக ஒருங்கமைப்பு) - WTO (World Trade Organization) 54

எழுத்துத்தேர்வு - writtten examination 95

கலைகளில் சுவையுணர்வு - art appreciation 23

கல்வி - education 13

கல்வியுரிமைச்சட்டம் - Right to Education (RTE)

Act 45
கவாபதேம(கல்வி ஆராய்ச்சிக்கும் பயிற்சிக்குமான தேசிய மன்றம்) - NCERT (National Council for Educational Research and Training) 63
கூட்டுவ மாநிலம் - federal state 68
கொடுஞ்சுழல் - vicious cycle 144
சமத்துவம் - equality 19
சமூக நீதி - social justice 19
சமூகம் - society 14
சேவபொகை (சேவைவணிகத்தில் பொது உடன்படிக்கை) - GATS (General Agreement on Trade in Services) 54
தாராளக்கல்வி - liberal education 115
திறந்த தேர்வு - open book examination 95
தேசம் - nation 67
தேசியமாநிலம் - nation state 68
நன்னெறி - ethics 25

நாடு - country 68

நிற்பாளர் - representative 23

நீதிநெறி - morality 26

பட்டியற்சாதியினர் (பசா) - scheduled caste (SC) 134

பட்டியற்பழங்குடியினர் (பப) - scheduled tribe (ST) 134

பருவ அறிக்கை - term paper 96

பாங்கறிதல் - pattern recognition 105

பொழிவுரை - seminar 96

மற்ற பின்தங்கிய வகுப்பினர் (மபிவ) - Othere backward class 134

மனிதவளத்துக்கும் வளராக்கத்துக்குமான அமைச்சகம் (மவவவ - )Ministry of Human Resource and Development (MHRD) 134

மாணவர் இடைமாற்றத்திட்டம் - student exchange program 126

மாணவர்பின்னூட்டம் - student feedback 132

மாநிலம் - state 68
முதலீட்டுமீள்வு - return on investment 52
முழுமப்பாடப்பகுதி - global subject 91
வழிவரைவு - roadmap 133
வாழ்மொழித்தேர்வு - oral examination 96
வீட்டுத்தேர்வு - take home examination 95

# ஆசிரியர் குறிப்பு :



செ. கோட்டாளம் அறிவியலிலும் தகவற்றொழினுட்பத்திலும் ஆராய்ச் சியாளராகவும் வளராக்கருமாக பணியாற்றி ஓய்வு பெற்றவர். இவர் 1954ஆம் ஆண்டு இந்தியாவின் தெற்குத்தமிழ்நாட்டிலுள்ள கொற்கையில் பிறந்தார். சென்னையிலுள்ள இந்தியத் தொழினுட்பப்பயிலகத்தில் முதுவறிவியற்பட்டத்தையும் அமெரிக்கவொன்றிய மாநிலங்களின் மிச்சிகன் மாநிலப்பல்கலைக்கழகத்திலிருந்து

முனைவர்ப் பட்டத்தையும் பெற்றார்; சாண்டியேகோவிலுள்ள கலிபோனியாப்பல்கலைக்கழகம், கிரிப்பசின் ஆராய்ச்சிப் பயிலகம், ஆர்வடுபல்கலைக்கழகம், கிரேயின் ஆராய்ச்சியகம் முதலிய இடங்களில் நோபல்சூடிய பேராசிரியர் கார்ப்பிளசு உட்பட பல அறிவியலர்களுடன் பணியாற்றினார். புரதம், அணுக்கருவமிலம் போன்ற பெருமூலக்கூறுகளின் கட்டமைப்பையும் இயக்கங்களையும் மிகைக்கணினிகளில் பாவனையாக்குவதற்கான எண்கணிப்பப்படிமுறைகளை வளராக்குவதில் இவர் பங்களித்தார். மேலும், கணைக்கீட்டுப்பாய்மயியக்கவியல், புள்ளியியயியற்பியல் ஆகிய துறைகளிலும் பங்களித் துள்ளார். இப்போது ஆங்கிலமொழியிலுள்ள அறிவியற்

செல்வங்களை திட்டமிட்ட ஒழுங்குமுறையில் தமிழுக்குக்கொண்டுவரும் முயற்சியில் ஈடுபட்டுள்ளார்.

jkottalam@gmail.com

https://www.facebook.com/kottalam

**தொலை நோக்கு – Vision**

தமிழ் மொழி மற்றும் இனக்குழுக்கள் சார்ந்த மெய்நிகர்வளங்கள், கருவிகள் மற்றும் அறிவுத்தொகுதிகள், அனைவருக்கும் கட்டற்ற அணுக்கத்தில் கிடைக்கும் சூழலை உருவாக்குதல்.

**பணி இலக்கு – Mission**

அறிவியல் மற்றும் சமூகப் பொருளாதார வளர்ச்சிக்கு ஒப்ப, தமிழ் மொழியின் பயன்பாடு வளர்வதை உறுதிப்படுத்துவதும்,

அனைத்து அறிவுத் தொகுதிகளும், வளங்களும் கட்டற்ற அணுக்கத்தில் அனைவருக்கும் கிடைக்கச்செய்தலும்.

**எமது பணிகள்**

- **கணியம் மின்னிதழ்** kaniyam.com
- கணிப்பொறி சார்ந்த கட்டுரைகள், காணொளிகள், மின்னூல்களை இங்கு வெளியிடுகிறோம்.
- **கட்டற்ற தமிழ் நூல்கள்** FreeTamilEbooks.com
- இங்கு யாவரும் எங்கும் பகிரும் வகையில், கிரியேட்டிவ் காமன்ஸ் உரிமையில், தமிழ் மின்னூல்களை இலவசமாக, அனைத்துக் கருவிகளிலும் படிக்கும் வகையில் epub, mobi, A4 PDF, 6 inch PDF வடிவங்களில் வெளியிடுகிறோம்.

- தமிழுக்கான கட்டற்ற மென்பொருட்கள் உருவாக்கம்
- தமிழ் ஒலியோடைகள் உருவாக்கி வெளியிடுதல்
- விக்கி மூலத்தில் உள்ள மின்னூல்களை பகுதிநேர/முழு நேரப் பணியாளர்கள் மூலம் விரைந்து பிழை திருத்துதல்
- OpenStreetMap.org ல் உள்ள இடம், தெரு, ஊர் பெயர்களை தமிழாக்கம் செய்தல்.

மேற்கண்ட திட்டங்கள், மென்பொருட்களை உருவாக்கி செயல்படுத்த உங்கள் அனைவரின் ஆதரவும் தேவை. உங்களால் எவ்வாறேனும் பங்களிக்க இயலும் எனில் உங்கள் விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

**வெளிப்படைத்தன்மை**

கணியம் அறக்கட்டளையின் செயல்கள், திட்டங்கள், மென்பொருட்கள் யாவும் அனைவருக்கும் பொதுவானதாகவும், முழுமையான வெளிப்படைத்தன்மையுடனும் இருக்கும். https://github.com/KaniyamFoundation/Organization/issues இந்த இணைப்பில் செயல்களையும், https://github.com/KaniyamFoundation/Organization/wiki இந்த இணைப்பில் மாத அறிக்கை, வரவு செலவு விவரங்களுடனும் காணலாம்.

கணியம் அறக்கட்டளையில் உருவாக்கப்படும் மென்பொருட்கள் யாவும் கட்டற்ற மென்பொருட்களாக மூல நிரலுடன், GNU GPL, Apache, BSD, MIT, Mozilla ஆகிய உரிமைகளில் ஒன்றாக வெளியிடப்படும். உருவாக்கப்படும் பிற வளங்கள், புகைப்படங்கள், ஒலிக்கோப்புகள், காணொளிகள், மின்னூல்கள், கட்டுரைகள்

யாவும் யாவரும் பகிரும், பயன்படுத்தும் வகையில் கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இருக்கும்.

**நன்கொடை**

உங்கள் நன்கொடைகள் தமிழுக்கான கட்டற்ற வளங்களை உருவாக்கும் செயல்களை சிறந்த வகையில் விரைந்து செய்ய ஊக்குவிக்கும்.

பின்வரும் வங்கிக் கணக்கில் உங்கள் நன்கொடைகளை அனுப்பி, உடனே விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

**Kaniyam Foundation**

**Account Number : 606 1010 100 502 79**

**Union Bank Of India**

**West Tambaram, Chennai**

